(வைசிராய்) ஆன குப்பாண்டி யென்பவர் கந்தலூருக்குச் சென்று அங்குள்ள பாதிரியைப் பயமுறுத்திப் பணங் கேட்டபொழுது, அப்பாதிரி கள்ளர்களின் பாதுகாவலில் இருந்ததனால் அவர்களுக்கும் குப்பாண்டி நாய்க்கருக்கும் பெரிய சண்டை யுண்டாயிற்று' என்று ரெவரெண்டு காஸ்டெட்ஸ் கூறியிருக்கின்றார். 1745-ல் முராரிராவுக்குக்கீழ் மகாராட்டிரர் படையெடுத்த பொழுது ஆவூரிலுள்ள பாதிரிகளும், மற்றைய கிறிஸ்தவர்களும் கூனம்பட்டியில் அடைக்கலம் புகுந்தனர் என்று தெரிகிறது. இங்ஙனம் பலவுள. அடைக்கலம் புக்காரைப் பாதுகாப்பதில் தம்முயிரையும் பொருட்படுத்தாப் பெருந்தன்மை வாய்ந்தவர் இக்குலத்தினரென்பது துணிபு.

இவர்களில் பலர் சைவமதத்தையும், சிலர் வைணவ மதத்தையும் தழுவினோராவர். பாண்டிநாட்டுக் கள்ளர்களைப்பற்றி எழுதிய ஒருவர் 'இவர்கள் சைவமதத்தினரேயாயினும், இவர்கள் முக்கியமாய்க் கொண்டாடும் தெய்வம் அழகர்' என்றனர். அஃது உண்மையென்பதைக் கள்ளழகர் என்னும் பெயரே வலியுறுத்தும். முருகக் கடவுள்பால் இவர்கள் மிக்க அன்புடையவர்கள். சைவர்களும் வைணவர்களும் ஒருவர் வீட்டில் ஒருவர் கல்யாணஞ் செய்துகொள்வதுண்டு.

இனி, இவர்களது தற்கால நிலைமையை நோக்குவோம். இவ்வகுப்பினரில் ஓர் அரசர் இருக்கின்றனர். பல சமீன்தார்கள் இருக்கின்றனர். ஆயிரவேலி நிலக்காரர்கள் உள்ளனர். உத்தியோகத்தர் (போலீசு டிப்டி கமிஷனர், போஸ்டல் சூபரிண்டெண்ட், தாசில்தார் சப்மாஜிஸ்ட்ரேட்) சிலர் உளர். வக்கீல் சிலர் உண்டு. சென்னை இராஜதானிக் காலேஜில் தத்துவ சாத்திர ஆசிரியராயும், வேறு

காலேஜ், ஹைஸ்கூல்களில் தமிழாசிரியர் முதலானோராயும் சிலர் இருக்கின்றனர். மற்றும் இவர்களில் சட்டசபை அங்கத்தினர் இருக்கின்றனர். தாலூகா போர்டு, ஜில்லா போர்டு, முனிசிபாலிட்டிகளில் தலைவர், உதவித்தலைவர், உறுப்பினராகச் சிலர் இருக்கின்றனர். ராவ் பகதூர், திவான்பகதூர் முதலிய பட்டங்களும்பெற்றிருக்கின்றனர். இருப்பினும் என்? இதுகொண்டு இவ்வகுப்பே நல்ல நிலைமையில் இருப்பதாகக் கூறிவிடலாகுமோ? இவ் வகுப்பின் இப்பொழுதைய நிலைமை பெரிதும் இரங்கத்தக்க தொன்றும். இவர்களில் ஏறக்குறைய நூற்றுக்கு எழுபத்தைந்து பேர் வரையில் தங்கள் சொத்தில் முக்காற் பாகத்திற்கு அதிகமாகவே யிழந்துவிட்டனர். சிலர் முற்றிலுமே பொருளை யிழந்து வாழ்க்கையை நடத்தமுடியாது தத்தளிக்கின்றனர். உலகத்திலே தாங்களும் மக்கட் பிறப்பினரென்று வெளித்தோற்ற மாத்திரத்திலாவது காட்டிக் கொள்ள முடியாத இழிந்த நிலைமைக்குப் பலர் வந்துவிட்டனர். வம்பு வழக்குகளினாலே பலர் பொருளிழந்தனர். வீண் ஆடம்பரங்களினாலே பலருடைய பொருள் போயிற்று. மதுபான முதலிய தீய பழக்கங்களினாலும் பலர் தொலைந்தனர். அந்தோ! இழிந்த மாக்களும் மறைந்து குடிக்கும் இயல்புடைத்தா யிருந்த மதுவை இப்பொழுது பெரிய மனிதரென்று சொல்லிக்கொள்வோரெல்லாம் வெளிப்படையாகக் குடித்துவிட்டுப் புரள ஆரம்பித்து விட்டனர். இது கலியின் கொடுமையே போலும்!

இங்ஙனம் பொருள் இழந்தனர். பொலிவழிந்தனர். மதி யிழந்தனர். வலி யழிந்தனர். வறுமையுற்றனர். பெருமையற்றனர். இவர்கள் படும் துன்பத்திற்கும்

பரிபவத்திற்கும் ஓர் எல்லை யில்லை. இவற்றுக்கெல்லாம் பொறுப்பாளர் யாவர்? பொதுவாக இந்நாட்டு மக்கள் அரசாங்கத்திலோ வெளியிலோ சில பதவிகளும் பெருமைகளும் அடைந்து விடுவார்களானல் எளிய மக்களின் நிலைமை அவர்கள் கண்ணுக்குப் புலப்படுவதில்லை. கடவுள் ஒருவர் உண்டு என்ற எண்ணமே யில்லாமல் எளியவர்களுக்கு எவ்வளவு துன்பமுஞ் செய்யப் பின்வாங்க மாட்டார்கள். ஒரு தனி மனிதனை யெடுத்துப் பார்க்கினும், ஒரு கூட்டத்தை எடுத்துப் பார்க்கினும் எங்கும் பிறரை அமிழ்த்திவிட வேண்டுமென்ற எண்ணமே மேலிட் டிருப்பதைக் காணலாகும். பல ஆண்டுகளாகப் பல பெரியோர்கள் தேச முன்னேற்றமே கருதி உழைத்து வந்தார்களாயினும் தேசம் அடிப்படையில் எவ்வளவு சீர் கேடாயிருக்கிறது என்பதை அவர்கள் உணர்ந்துகொள்ள முடியாமற் போய்விட்டது. இந்தியா என்கிற கட்டிடத்தின் அடிப்படையைப் பழுது பார்ப்பதற்கு இன்னும் பலர் பலகாலம் உழைக்க வேண்டுமெனத் தோன்றுகிறது. பொதுவில் தேசத்தையே குறிப்பாகக்கொண்டு உழைக்க முடியாதவர்கள் தாழ்நிலை யடைந்துள்ள ஒரு சமூகத்தின் பொருட்டாவது உழைக்கவேண்டும். அதுவும் தேச உழைப்பே யாகும். இனி, கள்ளர் வகுப்பினர்க்குப் பிறர் புரிந்த அல்லது புரிகின்ற நன்மை தீமைகளை விடுத்து, இவ்வகுப்பிலே பெரிய மனிதர்களா யுள்ளோர் என்ன நன்மை செய்திருக்கிறார்களென்று கேட்போம். அவர்களில் ஒரு அரசர் இருந்தால் என்? பல ஜமீன்றார்கள் இருப்பின் என்? பெரும் பணக்காரரும் நிலக்காரரும் இருந்து என்? தம் எளிய வகுப்பினரது முன்னேற்றத்திற்கு அவர்கள் யாது உதவி புரிந்திருக்கின்றனர்? இது

காறும் ஒருதவியும் செய்யவேயில்லை. தம் வகுப்பினர் இவ்வித இழிந்த நிலைமை யடைந்திருப்பது அவர்கள் மனத்தில் சற்றேனும் உறுத்தவே யில்லை. அதனாலன்றோ இவ்வளவு பரிபவத்திற்கு அவர்கள் ஆளாகவேண்டியிருந்தது? மதுரைப் பக்கத்திலிருந்த இழிவு பெரிய மனிதர்கள் இருக்கும் தஞ்சைப் பக்கத்திலும் எட்டிப் பார்க்கத் தொடங்கிவிட்டது. இனியேனும் அவர்கள் உறக்கத்தினின்றெழுந்து வேலை செய்வார்களா?

ஒரு தீமையினின்றும் நன்மையுண்டாகும் என்னும் விதிப்படி மதுரைப் பக்கத்துக் கள்ளர் வகுப்பினர் முன் பல துன்பங்களுக்கு ஆளாயினும் இப்பொழுது சில திருத்தமும் நன்மையும் அடைந்துவருகின்றன வென்பது ஒருவாறு ஆறுதலளிக்கக் கூடியதாகும். அங்கே பல பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்தப் பட்டுள்ளன. அவர்கட்குக் கைத்தொழில்களும் கற்பிக்கப் படுகின்றன. விவசாயமும், கைத்தொழிலும் நல்ல பயனளித்து வருகின்றன. கடவுள் திருவருளால் கூடிய விரைவில் அவர்கள் நன்னிலையடைவர் என எதிர்பார்க்கப் படுகிறது. சோணாட்டிலோ அத்தகைய முயற்சி ஒன்றும் இல்லை. எனினும், இந்திரகுலாதிபர் சங்கம் ஏற்படுத்தி நடத்திய இராஜாளியாரவர்கள் காலஞ்சென்ற பின்பு, தஞ்சையில் 'கள்ளர் மகா சங்கம்' என ஒன்று ஏற்பட்டு நடந்துவருவது இப்பக்கத்திலும் ஓர் முயற்சி தோன்றியுள தென்பதைக் காட்டுகிறது. இச்சங்கமானது பலருடைய ஒற்றுமையும்பெற்று ஊக்கத்துடன் முறைப்படி உழைத்து வருமாயின் இதனால் பல நன்மை யுண்டாகக்கூடும். பாப்பா நாடு இளைய ஜமீன்தார் திருவாளர் P. S. இராமலிங்கசாமி விஜயதேவர் அவர்கள் இச்சங்கத்தின் அமைச்சராகவிருந்து வகுப்பு

முன்னேற்றம் கருதி ஊக்கத்துடன் உழைப்பவராகக் காணப்படுகின்றனர்.

இனி, இவ்வகுப்பினர் மேற்கொள்ளவேண்டிய முயற்சி வகைகளையும், சீர்திருத்தங்களையும் கூறுமுன், இவர்கள் கல்வியில் எவ்வளவு பிற்போக்கடைந்துள்ளார்கள் என்பதனைக் காட்டுதும்.

1921-வருடம் எடுத்த கணக்குப்படி கள்ளர்களின் ஜனத்தொகை.

| ஜில்லா. | ஆண். | பெண். |
|---|---|---|
| தஞ்சாவூர் | 99671 | 108013 |
| திருச்சிராப்பள்ளி | 13081 | 14345 |
| புதுக்கோட்டை | 24432 | 26679 |
| மதுரை | 94205 | 92527 |
| இராமநாதபுரம் | 20543 | 24864 |
| திருநெல்வேலி | 6115 | 6468 |

| | மொத்தத் தொகை. | படித்தவர்கள். | ஆங்கிலம் படித்தவர்கள். |
|---|---|---|---|
| ஆண். | 259,428 | 42223 | 988 |
| பெண். | 274,544 | 1442 | 23 |
| | 533,972 | 43665 | 1011 |

இங்கே குறிப்பிட்ட இடங்களிலன்றி, தென் திருவாங்கூர், கொழும்பு, இரங்கூன் முதலிய இடங்களில் இவர்கள் மிகுதியாக இருக்கின்றனரெனத் தெரிகிறது. இரங்கூனில் இவர்கள் 'இந்திரகுல மகாஜன சங்கம்' என ஓர் சங்கமும் ஏற்படுத்தி நடத்தி வருகிறார்கள். மொத்தத்தில் இவர்கள் தொகை பத்து லட்சத்துக்கு மேலாகக் கூடும். நிற்க.

இங்கே குறிப்பிட்ட கணிதப்படி இவர்கள் கல்வியில் எவ்வளவு கீழ் நிலையில் இருக்கின்றனரென்று பாருங்கள். மனிதராய்ப் பிறந்திருப்பினும் கல்வியில்லாதவர் விலங்குகளுக்கு ஒப்பாவாரென்றும், கற்றவரே கண்ணுடையர் கல்லாதவர் முகத்திலே புண்ணுடையரென்றும் ஆன்றோர் கூறியிருப்பவற்றிலிருந்து கல்வியின் உயர்வும், கல்லாமையின் இழிவும் நன்கு விளங்குமன்றோ? இம்மை மறுமை வீடு என்னும் மும்மையும் பயப்பதாய், தளர்ந்துழியுதவுவதாய், நல்லிசை பயப்பதாய், எழுமையும் தொடர்ந்து இன்பமளிப்பதாய் உள்ள கல்வியினும் மக்கள் பெறற்பாலதாகிய பேறியாதுளது? இத்தகைய கல்வியில் இவர்கள் மிகவும் பின்னடைந்திருக்கிறார்கள் என்றால் இவர்களுக்கு வேறு என்ன பெருமையுண்டென்று சொல்லக்கூடும்? இவ்வாற்றால் இவர்கள் முதலிற் செய்யற்பாலது தம்மில் கல்வியை வளர்ப்பதேயாகும். தஞ்சையிலுள்ள கள்ளர் மகா சங்கத்தினர் பற்பல இடங்கட்கும் புலவர்களையனுப்பிப் பிரசங்கங்கள் செய்வித்தும், துண்டுப்பத்திரங்கள் வெளியிட்டும் யாவர்க்கும் கல்வியில் ஆர்வத்தை யுண்டாக்கி, நல்லொழுக்கத்திற் றிருப்புதல்வேண்டும். பள்ளிக்கூடங்களும், உணவுவிடுதி (ஹாஸ்டல்)களும் ஏற்படுத்துதல் வேண்டும். கல்லூரி (ஹைஸ்கூல், காலேஜ்) களில் படிக்கும் எளிய மாணவர்களுக்கும், திறமையுடையோருக்கும் உதவிச்சம்பளமும், பரிசுகளும் கொடுத்து ஊக்குதல் வேண்டும்.

மற்றும் இவ்வகுப்பினர் யாவரும் கல்வியில் விருப்பமுடையவர்களாய்த் தம் பிள்ளைகட்கு எவ்விதத்திலும் கல்வி கற்பித்தல் வேண்டும்.

'தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி யிருப்பச் செயல்'

என்று, கல்வி யொன்றைத்தானே மக்களுக்குத் தேடித் தர வேண்டுமெனத் திருவள்ளுவர் கூறிவைத்தார். கல்வியின் பிற பயன்களையெல்லாம் அறியாவிட்டாலும், ஒரு மனிதனாவது ஒரு கூட்டமாவது கல்வியினாற்றான் உலகத்தில் நாகரிகமாய் வாழமுடியும் என்பதையும், கல்வியில்லாத மனிதன் அல்லது கூட்டம் ஒரு காலத்தில் மற்றையோர்க்கு அடிமையாய்ப்போக நேரிடும் என்பதையும் சிந்தித்தாவது தம் மக்களுக்கு அழியாப் பொருளாகிய கல்வியைத் தேடிவைப்பார்களாக. இனிக் கள்ளர் நாடுகளில் ஓர் ஊரிலாவது பள்ளிக்கூடம் இல்லாதிருத்தல் கூடாது ஒரு பிள்ளையாவது படிக்காமல் இருத்தல் கூடாது என்று பெற்றோர்களும், பெரியோர்களும் உறுதி செய்துகொள்வார்களாயின் சில ஆண்டுகளில் இவ்வகுப்பு வியக்கத்தக்க விதமாக மேன்மை யடைந்துவிடும். இவ்வகுப்பினர்க்கு இயல்பிலே கூரிய அறிவும், மேற்கொண்டதைச் சாதிக்கும் உறுதியும் உண்டு. இத்தகையோர் கல்வியை மேற்கொண்டால் உலகிற்கே பெரிய நன்மை யுண்டு.

இனி இவ்வகுப்பினரில் மதுவுண்டல் என்னும் தீய வழக்கமுடையோர் இருப்பின் அஃது எவ்வளவு இழிவானது என்பதை யுணர்ந்து இனியேனும் அவர்கள் அதைக் கைவிடுவார்களாக. மதுவுண்போரை மிக இழிந்தவரென மதித்து, மற்றையோர் அவர்களோடு எவ்வித சம்பந்தமும் வைத்துக்கொள்ளா திருப்பின் அவர்கள் விரைவில் திருந்துதற்கு இடனுண்டு. களவுத்தொழில் செய்வார் யாவரேயாயினும் அவர்களை அரசாங்கத்தின

ரிடம் பிடித்துத் தருவார்களாயின் இவர்கள் தம் வகுப்பிற்கு எவ்வளவோ நன்மை செய்தவர்களாவர்.

இவர்கள் பெரும்பாலும் நிலக்காரர்களாதலின் உழவுத் தொழிலில் மிக்க கருத்தும் ஊக்கமும் உடையராதல் வேண்டும். 'மேழிச் செல்வம் கோழைபடாது' என்பது அமுதவாக்கன்றோ? இந்நாட்டில் இவர்கள் வேறு எவ்வித கைத்தொழிலும் இல்லாதவர்களாகவே யிருக்கின்றனர். ஒரு பெரிய சமூகம் இவ்வாறிருப்பது சிறிதும் சரியன்று. இது நாட்டின் நலத்தையே தடைப்படுத்தக் கூடியதாகும். ஆதலின் இவர்கள் தத்தமக்கியைந்த யாதேனும் ஒரு கைத்தொழிலை மேற்கொள்ளவேண்டும். இவர்கள் ஒற்றுமையுடன் கூட்டுறவுச் சங்கங்களும், பண்டசாலைகளும் ஏற்படுத்திக் கொள்வார்களாயின் எவ்வளவோ நலமாகவிருக்கும். கல்யாணம் முதலியவற்றில் அளவின்றிச் செய்யப்படும் ஆடம்பரச் செலவுகளைக் குறைத்தல் வேண்டும். அவற்றில் ஒரு சிறு பகுதியைக் கல்விக்கென்று சேர்த்துவைப்பின் மிகுந்த நன்மை பயக்கும். பொதுவில் யாவரும் ஒற்றுமையைப் பலப்படுத்தல் வேண்டும். ஒற்றுமைக் குறைவாலன்றோ இவர்கள் பொருளெல்லாம் அழிந்தொழிந்தன. எவ்வகை வழக்குகளையும் முன்போல் இவர்கள் தாமே தீர்த்துக் கொள்வார்களாயின் அளவு கடந்த நன்மையுண்டாகும். இனி, பல நாடுகளிலுமுள்ள இவ்வகுப்பினர் தம்மிற் கலந்து பழக்க வழக்கங்களை நாகரிக முறையில் திருத்திக்கொண்டு ஒற்றுமை பெறுதல் வேண்டும்.

நாம் இங்கே சொல்லியனவெல்லாம் உலகத்தில் பல வகுப்பினர் இப்பொழுது மேற்கொண்டு செய்வனவே.

ஒன்றும் புதிதன்று. செய்தற்கு அருமையானதுமன்று. ஒவ்வொரு வகுப்பினர் தங்கள் முன்னேற்றத்திற்கு எவ்வளவு பாடுபட்டு வருகின்றனர்? ஆந்திர நாட்டில் ரெட்டி வகுப்பினரும், மைசூர் நாட்டில் வொக்காலிகர் என்ற வகுப்பினரும் மிக உழைத்து வருகின்றனர். தமிழ் நாட்டில் நாடார் என்னும் சான்றார் வகுப்பினரைக் குறிப்பிடலாகும். இவர்கள் செய்துவரும் காரியங்கள் மிக வியக்கற்பாலனவாகும். இனி கள்ளர்கள் ஏனையெல்லா வகுப்பினரோடும் அன்பும், ஒற்றுமையும் உடையவராய்க் கலந்து வாழ்தல்வேண்டும். சில வகுப்பினர் சில பழக்கங்களினாலே தம்முடன் உணவு முதலியவற்றில் கலந்து கொள்ள முடியாதவராயிருப்பர். அத்தகைய இடங்களில் தாமும் தம் வகுப்பின் பெருமைக்குக் குறைவுண்டாகாதவாறு நடந்துகொள்ளல் வேண்டும். பொதுவில் உலகிலுள்ள மக்களெல்லாம் தமக்குச் சமமானவரென்றும் நண்பரென்றும் போற்றியொழுகுதல்வேண்டும்.

இனி, இவர்களோடு ஓரினமாக எண்ணப்படுகின்ற மற்றை வகுப்பினரைக் குறித்தும் இங்கே சிறிது கூறுதல் பொருத்தமாகும் என நினைக்கின்றேம்.

கள்ளர்களைப் போன்றே மறவர் என்போரும் தமிழ் நாட்டில் ஓர் பெருங் குழுவினராவர். இராமநாதபுரம் சேதுபதி மன்னர் இவ்வகுப்பினரென்பதை யறிவோர் இவ்வகுப்பானது தொன்றுதொட்டு எவ்வளவு மேன்மை வாய்ந்துள தென்பதை உணரக்கூடும். சேதுபதிகளைப் போன்று தமிழை வளர்த்தோரும், புலவர்களை ஆதரித்தோரும், வள்ளன்மை சிறந்து விளங்கினோரும், எண்ணிறந்த அறங்களியற்றினோரும் உலகத்தில் யாவருளர்?

அன்றியும் இராமேச்சுரம் சென்று இறைவனை வழிபட்டு வருவோர் யாவரே யெனினும் அவர்கள் சேதுபதிகளையும் தரிசித்துவருவது தொன்றுதொட்ட வழக்கமாயிருப்பது அன்னோரது ஒப்பற்ற மாட்சியைப் புலப்படுத்துவதாகும். இராமநாதபுரத்தரசர் போன்றே செல்வத்திலும் பெருமையிலும் சிறந்த சிவகங்கை மன்னரும் இவ்வகுப்பினராவர். இவர்களேயன்றி, பாலவனத்தம், பாலையம்பட்டி, சிங்கம்பட்டி, கடம்பூர், ஊற்றுமலை, சேற்றார், சொக்கம்பட்டி, ஊர்க்காடு, கொல்லங்கொண்டான் முதலிய பல சமீன்றார்கள் இவ்வகுப்பினராக வுள்ளனர்.

அகம்படியரென்போரும் ஓர் பெருங் குழுவினரான தமிழ் மக்களாவர். இவர்களும் தொன்று தொட்டு உயர்ந்த நிலையில் இருந்து வந்திருக்கின்றனர். இவ்வகுப்பினரில் பெரு நிலமும், பெருஞ் செல்வமும் வாய்ந்தோர் அளவற்றவர்கள் இப்பொழுதும் இருக்கின்றனர்.

இம்மூன்று வகுப்பினரும் அஞ்சாமை, வீரம், ஈகை முதலிய குணங்களில் ஒரு பெற்றியே சிறந்து விளங்குவோராவர். மற்றும் பல தன்மைகளில் இவர்கள் ஒப்புமையுடையரா யிருக்கின்றனர். இம் மூன்று வகுப்பும் ஒவ்வொரு காலத்தில் கல்யாணம் முதலியவற்றாலும் ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட் டிருக்கின்றன. இவர்கள் எல்லோரும் ஒரே வகுப்பினர் என்ற உணர்ச்சி இப்பொழுதும் இருந்து வருகிறது. இவ்வுணர்ச்சிக்கு அறிகுறியாகச் சிற்சில இடங்களில் சங்கங்களும் ஏற்படுத்தி யிருக்கின்றனர். இவர்கள் மேன்மேலும் ஒருமையுற்றுப் பெருமை யெய்துவார்களாக. இவர்கள் பெருமையுறுவ தென்பதும், தமிழ் நாடு பெருமையுறுவ தென்பதும்

ஒன்றே; தனித்தமிழ் நாட்டிலுள்ள தனித்தமிழ்ப் பெரு மக்கள் இவர்களாதலின். இவ்வுரிமையினாலே இவர்கள் தமிழ் மொழியைப் போற்றிப் புரந்து வருகின்றனர். மறவர் குலத்தோன்றலாய பாண்டித்துரைத் தேவரவர்கள் மதுரையில் தமிழ்ச் சங்கம் நிறுவினர். அக்குலத் தலைவர்களாகிய சேதுபதி மன்னர்கள் அதற்கும் தலைவர்களாக விருந்து பெரும் பொருளளித்து அதனை வளர்த்து வருகின்றார்கள். கள்ளர்குலத் தலைவர்களான புதுக்கோட்டை மன்னர்களும் அச்சங்கத்தின் புரவலர்களாக விருந்து சங்கப் பரீட்சையிற் றேறுவோர்க்குப் பொற்பதக்கமும், பொற்றோடாவும் பரிசிலளித்து வருகின்றார்கள். அகம்படிய குலச் சீரியரான இராதாகிருட்டின பிள்ளையவர்கள் கரந்தையில் தமிழ்ச் சங்கம் நிறுவினர். அவர் தமையனாராகிய திருவாளர் த. வே. உமாமகேசுவரம் பிள்ளை (பி.ஏ., பி.எல்.) அவர்கள் அச் சங்கத்திற்குத் தலைவராக விருந்து, பெரும் பொருளளித்து அதனைப் பேணி வருகின்றனர். இவ்வாற்றால் இப்பொழுதும் இவர்கள் தமிழ் மொழிக்கு ஆதரவாக விருப்பது புலனாம். இற்றைநாள் பெரும்பாலும் தமிழ்மொழியைத் தாங்கி வருவோர் இவ்வகுப்பினர்களும், நாட்டுக்கோட்டை வணிகமாந்தரிற் சிலருமே யென்பது தேற்றம். எனினும் இவர்கள் தம் தாய் மொழியைப் புரப்பதில் இன்னம் மிகுதியான ஊக்கமெடுத்துக்கொள்ளக் கடமைப்பாடுடையர் என்பதனைக் குறிப்பிட விரும்புகின்றோம். இனி, படையாட்சி வகுப்பினர் சிறந்த வீரர்களாயிருக்க வேண்டுமென்பது அப்பெயரானே அறியக்கிடக்கின்றது. இவ்வகுப்பிலும் அரியலூர், உடையார்பாளையம், சிவகிரி,

அளகாபுரி, ஏழாயிரம்பண்ணை, முதலிய பல சமீன்களுள்ளன. பல்லவ சம்பந்தமான சிற்சில பட்டப் பெயர்கள் இவர்கட்கும் வழங்குகின்றன. இவ்வகுப்பினரில் தமிழ்ப் புலமை வாய்ந்தோர் பலர் இப்பொழுதும் இருக்கின்றனர்.

இனி, வேளாளர்கள் தொன்றுதொட்டுச் செல்வத்திலும், வாய்மை, ஈகை முதலிய குணங்களிலும் மேம்பட்டவர்களென்பதும் பல நூல்களாலும் அறியக்கிடக்கின்றது. இவ்வகுப்பிலே கம்பர்போலும் பெரும் புலவர்களை ஆதரித்த வள்ளல்களும், சேக்கிழார்போலும் பெருமாண்புடைய பெருமக்களும் இருந்திருத்தலை நினைப்பின் நெஞ்சு உருகாநிற்கும்.' இவர்களில் பலர் அமைச்சுரிமை கைக்கொண்டு அரசபாரந் தாங்கி யிருக்கின்றனர். அதுபற்றிப் பல்லவராயர் முதலிய பட்டங்களும் உடையாயிருந்திருக்கின்றனர். இதற்குச் சேக்கிழார் பெருமானையே சான்றாகக் கொள்ளலாகும். இப்பொழுது வேளாளரென்பார் ஒரு வகுப்பினர் என்று கூறமுடியாதபடி பல பிரிவினராக இருக்கின்றார்கள்.

இங்ஙனம் தமிழகத்திலுள்ள பல்வேறு வகுப்பினரையும் ஆராயுமிடத்து ஒவ்வொரு வகுப்பினரும் பண்டுதொட்டுப் பெருமை வாய்ந்துளோர் என்பது வெளிப்படுதலின் அவர்கள் எல்லோரும் தம் பண்டைப் பெருமையை நினைவுகூர்ந்து, மீட்டும் அப்பெருமையை நிலைநிறுத்துதற்பொருட்டு ஊக்கத்துடன் உழைப்பார்களாக. தாம் இப்பொழுது பல பிரிவினராக இருப்பினும் தாமெல்லாம் தமிழ்த்தாயின் மக்களாகிய ஒரே யினத்தவரென்னும் உண்மை யுணர்ந்து யாவரும் அன்பும் ஒற்றுமை யுணர்ச்சியும் உடையராவராக. எவரையும் சிறியரென்று இகழா

திருப்பாராக. கருணையங் கடலாகிய இறைவன் இவர்கட்கு எல்லா அறிவாற்றலையும் தந்து இந் நாட்டினைப் பாதுகாப்பானாக. எங்கும் அவன் புகழே மிகுதல் வேண்டும். மன்னுயிரெல்லாம் இன்புற்று வாழ்தல் வேண்டும்.

---

## பட்டப்பெயர்கள்.

1 அங்கராயர்
2 அசையார்த்துரையர்
3 அச்சுதப்பண்டாரம்
4 அடைக்கப்பட்டார்
5 அடைவளைந்தார்
6 அண்ணுண்டார்
7 அண்ணுத்திப்பிரியர்
8 அதிகமான்
9 அத்திரியர்
10 அம்மாலைத்தேவர்
11 அயிரப்பிரியர்
12 அரசாண்டார்
13 அரசுக்குழைத்தார்
14 அரியபிள்ளை
15 அருமைநாடார்
16 அருவாத்தலைவர்
17 அருவா நாட்டார்
18 அலங்காரப்பிரியர்
19 அன்னவாசல்ராயர்
20 ஆட்சிப்பிரியர்
21 ஆதாழியார்
22 ஆரம்பூண்டார்
23 ஆர்சுற்றியார்
24 ஆலத்தொண்டமார்
25 ஆலம்பிரியர்
26 ஆவத்தியார்
27 ஆளற்பிரியர்
28 ஆள்காட்டியார்
29 இடங்காப்பிறந்தார்
30 இராங்கிப்பீலியர் (இராங்கியர்)
31 இராயமுண்டார்
32 இராஜாப்பிரியர்
33 இராஜாளியார்
34 இருங்கள்ளர்
35 ஈங்கொண்டார்.
36 ஈழத்தரையர்
37 ஈழமுண்டார்
38 உத்தமுண்டார்
39 உய்யக்கொண்டார்
40 உலகங்காத்தார்
41 உலகுடையார்
42 உழுவாண்டார்
43 உறந்தைராயர்
44 ஊமத்தரையர்
45 ஊரத்தியார்
46 ஊரான்பீலியர்
47 எண்ணாட்டுப்பிரியர்
48 எத்திரியப்பிரியர்
49 எத்தொண்டார்
50 ஒண்டிப்புலியார்
51 ஒளிராயர்

52 ஓசையார்
53 ஓட்டம்பிடிக்கியார்
54 ஓந்தரயர்
55 ஓயாம்பிலியர்
56 ஓனுயர்
57 கக்கொடையார்
58 கங்கநாடர்
59 கச்சியராயர்
60 கடாத்தலைவர்
61 கடாரந்தாங்கியார்
62 கட்டவெட்டியார்
63 கண்டபிள்ளை
64 கண்டர்சில்லி
65 கண்டியர்
66 கதவாடியார்
67 கரடியார்
68 கரமுண்டார்
69 கரம்பையார்
70 கருப்பட்டியார்
71 கருப்பூண்டார்
72 கரும்பூரார்
73 கலிங்கராயர்
74 கலியனுர்
75 கவுண்டர் (கண்டர்)
76 களத்துவென்றார்
77 களந்தண்டார்
78 களப்பாடியார்
79 களப்பிலார்
80 களமுடையார்
81 கன்னப்பட்டையார்
82 கஸ்தூரிமுண்டார்
83 கஸ்தூரியர்
84 காங்கெயர்
85 காசிநாடார்
86 காடவராயர்
87 காடுவெட்டி
88 காரைக்காச்சியார்
89 காலாக்குடியர்
90 காவாலி
91 காவெட்டார்
92 கிளாக்கடையார் (கிளாக்கர்)
93 கிளிகண்டார்
94 கிளியிரார்
95 கீருடையார்
96 கீரைக்கட்டையார்
97 குச்சராயர்
98 குடிக்கமுண்டார்
99 குடிபாலர்
100 குமரையண்டார்
101 குறுக்கண்டார்
102 கூசார்
103 கூராயர்
104 கூழாக்கியார்
105 கையராயர்
106 கொங்கணர்
107 கொங்கரையர்
108 கொடுப்புலியார்
109 கொடும்புராயர் (கொடுமளூர் ராயர்)
110 கொட்டையாண்டார் (கோட்டையாண்டார்)

111 கொத்தப்பிரார் (கொற்றப்பிரியர்)
112 கொல்லத்தரையர்
113 கொழுந்தராயர்
114 கொன்றையார்
115 கொன்னமுண்டார்
116 கோதண்டப்புலியர்
117 கோபாலர்
118 கோழயர்
119 கோறர்
120 சக்கராயர்
121 சங்கரதேவர் (சங்கரர்)
122 சங்காத்தியார்
123 சமையர்
124 சம்பிரத்தேவர்
125 சர்க்கரை
126 சர்க்கரையப்ப நாடாள்வார்
127 சவுட்டியார்
128 சவுளியார்
129 சன்னடர்
130 சாணர் (சாணார்)
131 சாதகர்
132 சாமுத்திரியர்
133 சாளுவர்
134 சிங்கப்பீலியர் (சிங்கப்புலியர்)
135 சிங்காரிக்கர்
136 சிட்டாச்சியார்
137 சிந்துராயர்
138 சிறநாட்டுராயர்
139 சிறுமாடர்
140 சினத்தரையர்
141 சுக்கிரர்
142 சுண்டையார்
143 சுந்தர்
144 சுரக்குடியார்
145 சுரைப்பிடுங்கியார்
146 செம்படையார்
147 செம்பியமுத்தரசர்
148 செம்மைகொண்டார்
149 செம்மைக்காரர்
150 செயங்கொண்டார்
151 செனவராயர் (சன்னவராயர், சனகராயர்)
152 சென்னண்டார்
153 சேண்டாப்பிரியர்
154 சேதிராயர்
155 சேப்பிழார்
156 சேர்வைகாரர்
157 சேலைக்கொண்டார்
158 சேனைபதியார்
159 சேனைநாடார்
160 சோனைருண்டார்
161 சோணையர்
162 சோதிரையர்
163 சோமணநாயக்கர்
164 சோமரசர்
165 சோழகர்
166 சோழங்கதேவர்
167 சோழங்கநாடர்
168 சோழங்கர்
169 சோழதரையர்

170 சோழப்பிரியர்
171 ஞானிசேவகர்
172 தஞ்சைராயர்
173 தனஞ்சராயர்
174 தாக்கலக்கியார்
175 தாளிதியார்
176 தானுதியார்
177 திண்ணுப்பிரியர்
178 திராணியார்
179 திருக்காட்டியார்
180 துண்டுராயர்
181 துறவாண்டார்
182 தெத்துவென்றார்
183 தென்கொண்டார்
184 தென்னரையர்
185 தேசிராயர்
186 தேவண்டார்
187 தேவர்
188 தொண்டார்
189 தொண்டைமான்
190 தொரையண்டார்
191 நந்தியராயர்
192 நரங்கியப்பிலியர்
193 நரங்கியர்
194 நல்லவன்னியர்
195 நல்லிப்பிரியர்
196 நாடாள்வார் (நாடாவார், நாடார். நாட்டார்)
197 நாட்டரையர்
198 நாய்க்கர்
199 நார்த்தவார்
200 நாவிளங்கியார்
201 நெடுங்காளியார்
202 நெடுத்தார்
203 நெடுவாண்டார்
204 நெறிமுண்டார்
205 நைனியார்
206 பசும்பிடியார்
207 பஞ்சரமார்
208 படைத்தலையார்
209 படையெழுச்சியார்
210 பணிபூண்டார்
211 பண்ணியமுண்டார்
212 பதுங்கரார்
213 பத்தாளர்
214 பம்பாளியார்
215 பரங்கிராயர்
216 பருத்திகொண்டார்
217 பல்லவராயர்
218 பல்லவாண்டார்
219 பவட்டுவார் (பாட்டுவார்)
220 பழங்கொண்டார் (பழனங்கொண்டார்)
221 பன்னிகொண்டார் (பன்றிகொண்டார்)
222 பன்னையார்
223 பாண்டியர்
224 பாண்டுராயர் (பாண்டியராயர்)
225 பாப்பிரியர்
226 பாப்புடையார்

227 பாப்புரெட்டியார் (பாப்புவெட்டியார்)
228 பாலாண்டார்
229 பாலியார்
230 பாவுடையார்
231 பிசலண்டார்
232 பிச்சாடியார்
233 பிலியராயர்
234 பீலிமுண்டார்
235 புட்டில் கழிந்தார்
236 புண்ணுக்கர்
237 புலிக்குட்டியார்
238 புள்ளராயர்
239 பூச்சியார்
240 பூவாட்சியார்
241 பூழிராயர்
242 பூனையர்
243 பேதரையர்
244 பொறை பொறுத்தார்
245 பொன்பூண்டார்
246 பொன்னமுண்டார்
247 பொன்னரம்பூண்டார்
248 பொன்னணியார்
249 போய்ந்தார்
250 போரைச்சுற்றியார்
251 போர்க்காட்டியார்
252 போர்மூட்டியார்
253 மங்கலார்
254 மங்காத்தேவர்
255 மட்டையர்
256 மணவாளர்
257 மண்கொண்டார்
258 மண்டராயர்
259 மயிலாண்டார்
260 மலையரார்
261 மல்லிகொண்டார்
262 மழவராயர்
263 மழுவாடியார்
264 மண்வெற்றிக்கூழ் வழங்கியார்
265 மன்னையார்
266 மாங்காட்டார்
267 மாதைராயர்
268 மாதையாண்டார்
269 மாத்துராயர்
270 மாந்தரையர்
271 மாம்பழத்தார்
272 யாலையிட்டார்
273 மாவலியார்
274 மாவெட்டியார்
275 மாளிச்சுத்தியார் (மாளிச்சர்)
276 மானங்காத்தார்
277 மானமுத்தரையர்
278 மானவிழுங்கியார்
279 மான்சுத்தியார்
280 முடிகொண்டார்
281 முனைக்காட்டியார்
282 முண்டார்
283 முதலியார்
284 முனையரையர் (முனையதரையர்)

285 மூங்கிலியர்
286 மூவரையர்
287 மெய்க்கன்கோபாலர்
288 மெனக்கடார்
289 மேல்கொண்டார்
290 மேனாட்டரையர்
291 மொட்டத்தேவர்
292 யுத்தப்பிரியர்
293 வங்கணர்
294 வங்காரமுத்தரையர்
295 வடுராயர்
296 வம்பாளியார்
297 வல்லத்தரையர்
298 வல்லாண்டார்
299 வல்லாளதேவர்
300 வல்லிடியார்
301 வளம்பர்
302 வன்னிமுண்டார்
303 வன்னியர்
304 வாச்சார்
305 வாட்டாச்சியார்
306 வாணாதரையர்
307 வாண்டாப்பிரியர்
308 வாண்டையார்
309 வாயாடியார்
310 வாலியர்
311 வாள்வெட்டியார்
312 விசலண்டார்
313 விசாதேவர் (விஜயதேவர்)
314 விசுவரார்
315 விசையராயர்
316 விஞ்சைராயர்
317 விருதுளார்
318 வில்லவராயர்
319 விற்பனர்
320 வீசண்டார்
321 வீணாதரையர்
322 வீரங்கொண்டார்
323 வீரப்புலியர்
324 வெங்கிராயர்
325 வெட்டுவார்
326 வெண்டர் (வெண்ரூர்)
327 வெள்ளங்கொண்டார்
328 வேணுடையார்
329 வேளுடையார்
330 வைராயர்

முற்றிற்று.

---

இப்பட்டப் பெயர்களை ஆராய்ந்து தொகுத்துத் தந்தவர்கள் எம் இளவல்களான சிரஞ்சீவி மு. தியாகராஜ நாட்டாரும், சிரஞ்சீவி மு. பஞ்சநத நாட்டாரும் ஆவர்.

# முகல்மன்னர் வரலாறு

(1526—1605.)

சென்னை,

புரசைவாக்கம் கலவல இராமானுஜம் செட்டியார்

உயர்தரப் பாடசாலை உபாத்தியாயர்

பூ. அ. பாஷ்யமையங்கார், பி. ஏ., எல். டி.,

எழுதியது



ரா. லோகநாதம் பிள்ளை,

305, வால் டாக்ஸ் ரோட்டு,

சென்னை.

1926



[விலை அணா 10.

# அட்டவணை

# முகல் மன்னர் வரலாறு

## I. பாபர் சக்ரவர்த்தி (1526–1530)

முகலாயர் இந்திய நாட்டிற் காலெடுத்து வைக்குமுன் முகம்மதியரின் செல்வாக்குக் குன்றி யிருந்தது.

முகம்மதியரின் ஒடுக்கம்.

அவர்கள் பல வருஷங்களுக்கு முன் படைத்திருந்த வீரமும் வலிமையும் நாளடைவில் மறைந்தொழிந்தன. செல்வமும் நாகரிகமும் பொருந்திய பண்டைய இந்துக்களின் பெருமையைச் சிதைத்து அவர்களை வென்று இராஜரிகம் புரிந்து வந்த முகம்மதியர் க்ஷீணித்து நாசமடையும் காலமுங் குறுகியது. பல நாடுகளைத் தமது புஜபலத்தால் கைப்பற்றி ஏகாதிபத்தியம் செய்து வந்த பேராசர் மரபின் வழிவந்தோர் தமது சீர்மை கெட்டுத் தாழ்நிலை யடைந்தது அதிசயமே. பிற்பட்டோர் அரசியல் புரிதற்கின்றியமையாத அருங் குணங்களை இழந்தோராயினர். நாட்டினைக்கட்டி யாளுந்திறமை அவர்களுக்கில்லாமற் போயிற்று. சுய நலத்திலேயே அவர்கள் கருத்துடையராய்ப் பல கட்சியினராகிச் சதா வீண் சச்சரவுகளில் தம் காலத்தைக் கழித்து வந்தனர். இராஜ பதவிக்குரிய பெருமைகளை அநுபவிக்க வேண்டுமென்று நோக்கமுடையராய்ப் பல பிரிவினராகி ஒற்றுமை யிழந்து தமது பதவியையும் அதிகாரத்தையும் இழந்தனர். ஆதியில் ஹிந்துக்கள் முகம்மதியரிடம் மரியாதையுடனும் பணிவுடனுமிருந்து அவர்களினுடைய ஆட்சிக் குட்பட்டிருந்தனர். முகம்மதியர் வேற்று நாட்டினரானமையின் ஹிந்துக்களுக்கு அவர்களிடத்தில் அச்சம் மிகுந்திருந்தது. மத விஷயங்களி

லும், வாழ்க்கை நிலையிலும் முகம்மதியர்க்கே சிறப்பாயமைந்துள்ள சட்டங்களையும் விதிகளையும் அநுசரிப்பதில் அவர்கள் மனவுறுதி யுடையவரா யிருந்தனர். ஆயினும், வரவர மதத்தில் அவருக்கிருந்த சிரத்தை குறைந்துகொண்டே வந்தது. அதனால் இதுவரை ஹிந்துக்கள் முகம்மதியரிடம் மரியாதையுடனும் பயத்துடனும் நடந்து கொண்டதுபோ லிராமல் தம்மிச்சைப்படி ஒழுகலாயினர். மதத்தையே யடிப்படையாகக் கொண்டு நடந்து வந்த யுத்தங்கள் குன்றின. இஸ்லாமிய மதத்திற்காக உயிர் துறக்கத் தயாராயிருந்த வீரரும் நாளடைவில் அருகி வந்தனர். முஸ்லாமிய அந்தப்புரங்களில் ஹிந்து ஸ்திரீகள் நிறைந்திருந்தனர். முகம்மதிய மதத்தைப் பின்பற்றிய ஹிந்துக்களின் பதவியும் செல்வாக்கும் பெருக்கு மட்டில் மேம்பாடடைந்தன. உண்மையில் முகம்மதியர் என்று சொல்லிக்கொள்ளத் தக்கவர் ஒருவரேனு மிலர். அவர்களுக் கிருந்த மதாபிமானம் இருந்தவிடந் தெரியாதபடி தொலைந்தது. டெல்லி ராஜ்யம் பெருமையிழந்தது. ஆங்காங்குப் பற்பல சிறு மாகாணங்கள் ஏற்பட்டு அவை யாவும் சிற்றரசர் ஆட்சிக்குட்பட்டுக் கிடந்தன. ஒவ்வொரு கிராமத்திலும் அங்குள்ள கூட்டத்தாரை ஒரு தலைவன் ஆண்டு வந்தான். அவ்வூரில் அவனிட்டது சட்டம். இத் தலைவரின் நடத்தையைக் கவனித்துத் தனது செல்வாக்கை நிறுத்தக்கூடிய திறமைவாய்ந்த அரசன் ஒருவனுங் கிடையாது. பலவான் என்று சொல்லிக்கொள்ளத்கூடிய அரசனே இல்லாதது பற்றி அடிக்கடி தலைவர்களுக்குள் சண்டைகளும் சச்சரவுகளும் ஏற்படும். இதனால் நாடெங்கும் அராஜரிகம் ஏற்பட்டு ஜனங்கள் வருந்துவர்.

**லோடி ஆப்கானியரின் ஆட்சி.**

ஆயினும், தைமூர் படையெடுத்துத் தக்ளாக் வம்சம் குலைந்துபோனபின் டெல்லி சிறிது சிறிதாகத் தானிழந்த பெருமையை மீண்டு மடையலாயிற்று. சயித்துக்களின் அதிகாரம் முற்றிலும் ஒடுங்கியதெனினும் அவர்களுக்குப்பின் வந்த லோடி ஆப்கானியர் திறமையோடு செவ்வையாக ஆண்டு வந்தனர். 1451ல் பலால் என்னும் ஆப்

கானிய வீரன் ஸயித்துக்களின் சேனையைச் சிதற அடித்து வெற்றி கொண்டான். அவன் ஒரு சிறந்த வீரன். ஆடம்பரத்தில் விருப்பற்றவன். அரசர்க் கின்றியமையாத குணங்கள் வாய்ந்தவன். டெல்லியைச் சுற்றிலுமுள்ள சிறு மாகாணங்களைக் கைப்பற்றிக்கொண்டு இருபது வருஷகாலம் ஓயாமற் சண்டையிட்டு ஜான்பூரையும், அதைச் சுற்றிலுமுள்ள பிரதேசங்களையும் கைக்கொண்டு பீஹார்வரையும் தனது அரசாட்சியை நிலைநிறுத்தினன். சிக்கந்தர் என்னும் அவனது புத்திரன் 1488ல் தந்தையின் பட்டத்துக் குரிமைபூண்டு பீஹாரின் மீது படையெடுத்துச்சென்று அதைச் சுவாதீனப் படுத்தினன். வங்காளத்தில் அரசு செலுத்திய மன்னனுடன் உடன்படிக்கை யொன்றேற்படுத்திக் கொண்டு அவனிடம் தோழமை கொண்டிருந்தான். தோல்புரி, சாண்டேரி, க்வாலியர் முதலிய விடங்களில் யதேச்சையாய் ஆண்டுவந்த இராஜபுத்திர வீரர் சிக்கந்தருக்குப் பணிந்தனர். பஞ்சாபும் தோவாபும், ஜான்புரி, அயோத்தி, பீஹார், டிர்ஹட் என்பனவும், சட்லெஜ் நதிக்கும் பண்டல்கண்டுக்கு மிடையேயுள்ள பிரதேசமும் சிக்கந்தரின் ஆட்சியின்கீழ்ப்பட்டு டெல்லி ஸமஸ்தானத்துக்கு உட்பட்டிருந்தன.

ஆப்கானியரின் வெற்றி வெகுநாள் நீடித்திருக்கவில்லை.

டெல்லி அரசனின் பலம் ஒடுங்கிக் கலகமுங் குழப்பமும் மிகுதல்.

அரசன் ஒருவனே யெனினும் பல விடங்களிலும் சிதறிக்கிடந்த பிரதேசங்களை ஒருங்கு கட்டி ஆள்வது அவனுக்குக் கஷ்டமா யிருந்தது. ஒவ்வொரு மாகாணத்திலும், ஜாகீரிலும் பாரம்பரியமாய்த் தலைமை வகித்து வந்த தலைவனோ, ஜமீந்தாரனோ, டெல்லி அரசனது பிரதிநிதியோ ஆண்டு வந்தான். ஆங்காங்குள்ள குடிகள் தம்மை ஆட்சிபுரிந்த தலைவருக்குப் பணிந்து அவர்களிடம் அஞ்சி யிருந்தனரேயன்றி டெல்லி யரசனைப்பற்றிச் சற்றும் கவனித்திலர். அவர்களது சுகமுங் கஷ்டமும் அத்தலைவரது பொறுப்பிலேயே இருந்து வந்தமையின் டெல்லி அரசனைப்பற்றி அவர் ஒன்றும் அறியார். சட்டத்தை யொட்டி ஆட்சிமுறை நடைபெறவில்லை.

சுயநல நோக்கையே அடிப்படையாகக்கொண்டு இராஜரிகம் நடந்து வந்தது. இங்ஙனம் தலைமை வகித்து அதிகாரம் செலுத்தி வந்தவர் ஆப்கானியரே. லோடி யரசர்களின் நியமனம் பெற்று ஆப்கானியத் தலைவர்கள் ஜாகீர்களை ஆண்டு வந்தார்கள். ஆயினும், அவர்கள் நாளடைவில் தாம் லோடியரசரின் தயவால் நிலவுரிமை பூண்டதை அடியோடு மறந்து தம் மனம் போனபடி அரசு செலுத்தி வந்தனர். தமது சொந்த முயற்சியால் சண்டைகளில் வென்று நாட்டுரிமை பெற்றதாக அவர்கள் கருதி இறுமாந்திருந்தனர். அவர்கள் தமது குடிகளை வருத்திப் பணம் பறித்து வீண் செலவிட்டு வந்தனர். ஒருவரை யொருவர் எதிர்த்துப் போராடி நாடெங்கும் கலகங்களை எழுப்பிவிட்டனர். டெல்லி அரசன் அவர்களை அடக்க முற்பட்டதும் வீணாயிற்று. பேருக்குமட்டில் அரசுரிமை பெற்றுத் தம்முடைய காரியங்களில் தலையிட்டுக் கொள்ளாதவரையும் டெல்லி அரசனிடம் அவர்கள் பகைமை கொள்ளாதிருந்தனர். டெல்லி அரசன் தமக்குத் தலைவனென்பதையும், தம்மைச் சேனை முகத்தில் அடக்கிக்கொண்டு போகும் சேனாதிபதி என்பதையும் அவர்கள் அங்கீகரித்தார்களெனினும் அவன் தம்மைப் பலாத்காரமாய் எதிர்த்து ஒடுக்க நினைத்தலையும், வெகு காலமாய்த் தாம் அநுபவித்து வந்த சுதந்திரத்தை இழந்து அவனுக்கு அடங்கி யிருத்தலையும் அவர்கள் முற்றிலும் வெறுத்தனர். டெல்லி அரசன் தன் மரியாதையைக் காப்பாற்றிக்கொள்ளவேண்டுமாயின் தமது வியவகாரங்களில் தலையிட்டுக் கொள்ளலாகாதென்றும், தம்மாலேயே அவன் ஆட்சி நிலைத்திருந்ததென்றும் அவர்கள் கருதியிருந்தனர். சிக்கந்தருக்குப் பின் டெல்லி ஸமஸ்தானத்துக்கு அரசனாய் முடி சூடிய இப்ரஹிமோ மிகவும் பிடிவாதக்காரன். பிறர் தனக்குச் செய்யவேண்டிய மரியாதைகளில் தவறி நடத்தலைச் சிறிதும் பொறான். சக்கரவர்த்திக்கு யாவரும் உட்பட்டவர் என்னுங்கொள்கையையுடையவன். தன் முன்னிலையில் ஆப்கானிய தலைவர் கைகட்டி வாய்புதைத்து நின்று அந்நிலையில் அசையாதிருக்கும்படி அவர்களை நிர்ப்

பந்திப்பான். அவர்களுக்கு அருவருப்பையும் கோபத்தை யும் விளைவிக்கக்கூடிய புது விதிகளை அவர்கள் அநுஷ்டிக்க வேண்டுமென்று நிர்ப்பந்தித்து வந்தான். ஜான்புரியில் இப்ரா ஹிம் தனது சகோதரனை ஜலால் என்பவனைத் தலைவனாக நியமித்திருந்தான். ஆப்கானியத் தலைவருட் பலர் ஒன்று சேர்ந்து ஜலாலுக்கு டெல்லிப் பட்டத்தைச் சம்பாதித்துக் கொடுக்க முற்பட்டு இப்ராஹிமுக்கு விரோதமாகக் கிளம்பிக் கலகம் விளைத்தனர். இப்ராஹிம் ஆப்கானியத் தலைவரின் செல்வாக்கை நன்கறிந்தவனாகையின், அவர்களுக்கு மிகவும் அஞ்சி அவரது அதிகாரத்தை ஒடுக்க முற்பட்டனன். அவன் அவர்களைச் சமாதானத்தால் தன் வயப்படுத்தித் தன் நோக் கங்களைச் சாதித்திருந்தால் அவனுக்கு அத்தகைய கஷ்டங் கள் ஏற்பட்டிராவாம். அவன் அவர்களை அவமானத்துக்குட் படுத்தி இகழ்ந்து வந்ததால்தான் டெல்லியின் பெருமை அவன் காலத்திலேயே குன்றுவதாயிற்று. அத்தலைவர்க்கும் சாதாரண குடிகளுக்குமுள்ள ஏற்றத் தாழ்வினைச் சிறிதுங் கவனியாமலே அரசன் இருதிறத்தோரையும் ஒரே விதமாக நடத்திவரத் தொடங்கினான். இதனால் அத் தலைவர்க்கு அரசனிடத்தில் அதிருப்தி உண்டாகத் தலைபட்டுக் கலகங் கள் விளைந்தன. அங்ஙனம் நிகழ்ந்த கலகங்களை யடக்கித் தலைவர்களைச் சுவாதீனப்படுத்த அரசனால் முடியா மலே போயிற்று. யுத்தகளத்தில் மடிந்த வீரர் பலராவர். தீயை அவிக்க எண்ணெய் பெய்வாருமுண்டோ? அரசன் அவர்களை விரோதித்துப் பட்ட கஷ்டங்கள் கொஞ்ச மல்ல. அயோத்தி, ஜான்புரி, பீகார் முதலிய பிரதேசங்களி லுள்ள ஆப்கானியர் ஒன்றுகூடி டார்யாகான் என்பவனைத் தமக்குத் தலைவனாகத் தேர்ந்தெடுத்தனர். இப்ராஹிம் ஆரா யாது செய்த கொலைத்தொழிலைக் கேட்டாற்றாது டௌலத் கான் என்பவன் அரசனுக்கு விரோதமாகக் கிளம்பினான். அவன் பஞ்சாபில் செல்வாக்கு மிகுந்தவன். டெல்லி சிம்மா சனம் பெறுவதற்கு லோடி வம்சத்தார்க்கு எழுபது வருஷங்களுக்கு முன்னால் உதவி புரிந்தவன் தௌலத்கான் என்பவனே. இப்ராஹிமுக்கு நெருங்கிய சுற்றத்தினரும்

அவனது ஆட்சி முறையை வெறுத்தனர். அவனது சிறிய தந்தையாகிய அலாவுதீன் என்பவன் காபூலுக்குச் சென்று காபூலரசனுதவியைப் பெற்று இப்ராஹிமினிடமிருந்து டெல்லி சிம்மாசனம் பெறலாமென்று தீர்மானித்து இந்தியாவை விட்டுப் புறப்பட்டான்.

காபூல் மன்னனின் வீரப்பிரதாபம்

காபூல் அரசன் இந்தமாதிரியான சந்தர்ப்பத்தை நெகிழவிடுபவனல்லன். அவன் ஒரு சிறந்த வீரன். தனக்குப் புகழைத் தரக்கூடிய எந்தக் காரியத்தைச் செய்யவும் பின் வாங்காதவன். பிறர்க்குக் கஷ்டமென்று தோன்றும் வேலைகளைச் செய்து முடிப்பதில் ஆர்வம் மிகுந்தவன். இக்கீழ்நாட்டுச் சரித்திரத்தில் அவனுடைய பிரதாபத்தை ஒருவரும் மறக்கமுடியாது. எல்லாருடைய உள்ளத்திலும் அவனுடைய அருஞ்செயல்கள் நன்ருய்ப் பதிந்து நிற்கும். அவன் தன்னைப்பற்றி எழுதி வைத்திருக்கும் குறிப்புக்களே அவனுக்கு என்றும் மறையாப் புகழை நிலைபெறச் செய்தற்குப் போதியனவாயென்பதில் சிறிதும் சந்தேகமில்லை. அவனுடைய புகழுக்கும் அதுவே காரணமாமென்பதும் மிகையாகாது. பாபர் என்னும் காபூல் அரசன் மத்திய ஆசியாவையும் இந்தியாவையும், குடிகளையும் துரைத்தனத்தையும், தைமூரையும் ஆக்பரையும் பிணைக்கும் சங்கிலிபோன்றவன். ஆசியாவின்மீது படையெடுத்துத் தனது வீரச் செயல்களால் எங்கும் அச்சத்தை எழுப்பி நாட்டினை நிலைகுலைய வழித்த மங்கோலிய துருக்கி வம்சங்களில் முறையே தோன்றிய செங்கிஸ்கான், தைமூர் என்னும் இரு வீரரது இரத்தமும் பாபரின் தேகத்திற் கலந்திருந்தது. தார்தாரியருக்குள்ள சோம்பலின்மையும் தைர்யமும், பாரசீகருக்குள்ள பெருந்தன்மையும் நாகரிகமும் பாபருக்கிருந்தன. மங்கோலியற்கியற்கையாயமைந்துள்ள உழைப்பையும் முயற்சியையும் பாபர் பெற்றிருந்தான். துருக்கியரைப் போல் திறமையுந் தைரியமும் வாய்ந்தவன். அவன் பொருளீட்டிப் புகழ்பெற விரும்பிய ஒரு வீரனுய் இந்நாட்டிற்கு வந்தானேனும், இராஜ்யமுண்டாக்கியவனல்லனேனும் அவ

னது பேரனை ஆக்பர் காலத்துச் சிறப்புற்று விளங்கிய முகலாய ராஜ்யத்திற்கு அஸ்திவாரக் கல்நாட்டியவன் பாபரே யென்று நிச்சயமாய்க் கூறலாம்.

பாபரின் சரித்திரச் சுருக்கம்.

பாபர் இந்தியாவிற் சம்பந்தப்பட்டது அவனது வாழ் நாளின் பிற்பகுதியாகிய பன்னிரண்டு வருஷங்களேயாம். தன் தாய்நாட்டில் தன் ஆட்சியை நிலைபெறச் செய்தலிலேயே அவன் தனது இளமையைக் கழித்தான். வாலிபங் கழிந்தபின் அவன் தான் புதிதாய்ச் சம்பாதித்த காபூலி லிருந்துகொண்டு தனது ஜன்ம பூமியைக் கைப்பற்ற முயன்றான். அவன் அக்காலத்தில் பட்ட துன்பங்கள் இத் தன்மையனவென்று சொல்லி முடியாது. தனது முயற்சி பலியாதென்று பாபர் தனது முப்பத்தாறுவது வயதில்தான் முடிவாய் அறிந்தான். அதன் பின்னரே அவனது மனம் இந்துஸ்தானத்தின்மீது திரும்பியது. ஐந்துமுறை அவன் வட சமவெளிகளின் மீது படையெடுத்து வந்தான். ஐந்தாவது தடவை படையெடுத்து அவன் இந்தியாவை வென்றான். அவன் வென்று கைப்பற்றிய நாட்டில் ஐந்து வருஷங்கள் ஆண்டிருந்து பின் அவனது நாற்பத்தெட்டாவ தாண்டினில் மாணமடைந்தான்.

பாபரின் கல்வி யறிவு.

அவன் இந்தியாவுடன் சம்பந்தப்பட்டதே அவனது புகழுக்குக் காரணமாயிற்று. இந்தியாவினுள் அவன் நுழைந்து பெற்ற வெற்றியே பின்னல் அவனது வம்சத்தார் பெரிய இராஜ்யத்தைத் தாபித்து அதைக் கட்டியாள்வதற்குச் சாதனமாயிற்று. சரித்திர முறையில் அவன் பிரசித்தி பெற்றது மேற்காட்டியபடியே யெனினும் அவனது ஜீவிய சரித்திரத்தையும், இலக்கிய நூல்களையும் ஆராயுமிடத்து அவனது பெருமைக்குக் காரணம் அவன் இளமையிற் பட்ட கஷ்டங்களுக்கிடையே புரிந்த அருஞ்செயல்களும், அவன் அவற்றை விடாது எழுதிவைத்துள்ள குறிப்புக்களுமேயாமென்பது தெளிவாகிறது. களத்தேயிருந்து அமர்புரியும் மறத்

தொழில் வல்லானேனும் அவனுக்குப் படிப்பில் பிரியமதிகம். தான் கேட்டவற்றை மனத்திருத்தி உண்மையாராயும் அறிவு அவனுக்குப் பூராய் உண்டு. அக்காலத்தில் பாரசீக மொழியினும் மேம்பட்ட தொன்றுமில்லை. பலவரிய இலக்கியங்கள் அப்பாஷையில் எழுதப்பட்டு பிரசித்தியடைந்திருந்தன. ஐரோப்பாவிலும், இந்தியாவிலும், முறையே லத்தீனும் ஸம்ஸ்க்ருதமும் அடைந்திருந்த பெருமையை பாரசீக மொழி பெற்றிருந்ததென்று சொல்லத்தடையில்லை. பாபர் பாரசீக பாஷையைக் கற்று வல்லவனாய் அம்மொழியிலேயே பல சிறந்த கவிகளைப் பாடியிருக்கிறான். அவனது தாய்ப் பாஷையாகிய துருக்கி பாஷையில் அபரிமிதமான ஞானமுடையவன். தெள்ளிய செவ்விய நடையில் வசனமாகவும் செய்யுளாகவும் அவன் இயற்றியுள்ள நூல்கள் பலவாம். அக்காலத்தில் போர்க்கலப் பயிற்சியைப் போலவே கல்வி யறிவும் அரசர்க் கின்றியமையாததாகத் துருக்கியர் கருதி வந்தனர். துருக்கி பாஷையைச் செவ்வையாகப் பிழைகளின்றி அழகாக எழுதுந் திறனைப் பெரிதாகக் கருதினார்கள். சமயோசிதமாய்ப் பேசும் ஆற்றலும், எடுத்தவிடத்தில் கவிபாடுந் திறனும், பாரசிக நூல்களினின்றும் சந்தர்ப்பம் நோக்கி மேற்கோள் எளிதிலெடுத்துக் காட்டும் வன்மையும், நிறைந்த கல்வி படைத்து அம்மொழியி லழகாக எழுதும் பயிற்சியுமே அக்காலத்துச் சிறப்பாக மதிக்கப்பட்ட குண நலங்களாம். உள்ள முருகக்கூறும் துக்கக் கதையினிடையே ஒரு செய்யுளை மேற்கோளெடுத்துக் கூறுவதும் துன்பத்திற் சிக்கி அபாய நிலையில் தத்தளிக்கும் சமயத்திலும் தன் கஷ்ட தசையையுணர்த்துவதான செய்யுளொன்றைக் கவனம் செய்வதும் பாபருக்கு எளிதிற் கூடுவனவாயின.

பாபரின் சுயசரிதம்.

ஆகவே, அவன் தன்னைப்பற்றி எழுதிவைத்திருக்கும் சரித்திரம், ஒரு வீரன் தேதியிட்டு சண்டைகள், முற்றுகைகள், போர்முனை நோக்கிச் செலவு முதலியவற்றைக் குறிப்பிட்டு வைக்கும் ஸ்வாரஸ்யமற்ற தினசரிப்பதிவுக ளடங்கியதன்று.

உலகானுபவம் நிறைந்தவனும், கீழ்நாட்டிலக்கியப் பயிற்சி மிகுதியாகவுடையவனும், பொருள்களை ஊன்றி நோக்கி யாராயுங் கூரறிவாளனும், மனிதரியல்பைச் செவ்விதினுணரும் ஆற்றலுடையானும், கடவுளது சிருஷ்டிப் பொருள்களில் அன்பு நிறைந்தவனும், தன் கருத்துக்களையும், முடிவுகளையும் சுவையுடன் கூடிய தெள்ளிய நடையில் எழுதும் பழக்கமுடையவனுமாகிய ஒருவன் எழுதி வைத்துள்ள ஆழ்ந்த பொருளடங்கிய விஷயங்களை அது தெரிவிப்பதாகும். பாபரின் குணவியல்போ மிகவும் அதிசயிக்கத் தக்கது. அவன் சதா உற்சாகமும், ஊக்கமும் கொண்டவன். பழக்கத்தினை முன்னிட்டு வாதாடும் முரட்டுக்குணமற்றவன். தப்புதற்கரிய இடுக்கணிற் சிக்கிய காலத்தும் தைர்யத்தையும் நம்பிக்கையையும் இழக்காதவன். அவனுடன் பழகுவோர் அதிசயிக்கத்தக்க பெரும் பண்பாளன். எல்லாரிடமும் தோழமை பூண்டு யாவரும் ஒப்ப ஒழுகும் நிறைகுணமுடையோன். பாபர் மனக்களங்கமற்றவன். நயமாய்ப் பேசி வஞ்சகமிழைக்கும் இழிகுணம் அவனுக்குக் கிடையாது. தனது குணதோஷங்களை மறையாதறிவிக்கும் தூய்மையுடையோன். அவன் உள்ளது உள்ளபடி பொய் விரவாதெழுதிவைத்துள்ள ஜீவிய சரித்திரத்தைப் படிக்கப் படிக்கப் பேரானந்தம் ஊறிக்கொண்டேயிருக்கும். தன்னைப் பற்றி எழுதிவைத்துள்ள எந்த ஜீவிய சரித்திரங்களும் மேற் காட்டிய அம்சங்களில் பாபரின் குறிப்புக்களுக் கிணையாகாவாம். பாபரிடமிருந்து தோன்றிய முகலாய பரம்பரையாரின் பெருமையும், அதிகாரமும் அடியோடு சிதைந்து போன பின்னும் பாபரின் சரித்திரக் குறிப்பின் புகழும், உண்மையும் மாறுமலும் குன்றுமலுமிருப்பதே பாபரின் அருங்குணங்களை இனிது விளக்கும் சான்றாகும்.

தைமூருக்குப் பின் நாட்டின் நிலை.

பாபரின் வாலிபத்தைப் பற்றிச் சுருக்கமாகக் கூறுவோம். இந்தியாவுக்கப்பால் ஆக்ஸஸ் நதியை யடுத்து வெகுதூரமளவும் வியாபித்திருந்த நாட்டினைத் தைமூர் தனது சந்ததியாருக்குவிட்டு மரித்தான். அவன் இறந்த

சிறிது காலத்துக்குள் அவன் வென்ற நாட்டின்வலி குறைய லாயிற்று. தைமூர் தான் வென்ற நாடுகளை ஒன்றுபடுத்தி ஒரு தனி இராஜ்யமாக நிலைபெறச் செய்ய முடியாமற் போயிற்று. தைமூர் ஆத்திரக்காரன். போர்முனை சென்று பகைவரை நாசமாக்கி நகர்களை அழித்தான்; தொள்ளை கொண்ட பொருள்களைத் தனக்குரிமையாக்கி நாட்டினை வறுமைக் குட்படுத்தினனே யன்றி தான் கவர்ந்த நாடுகளை ஒன்று சேர்த்து இராஜரிகம் ஏற்படுத்தி அரசாட்சி புரிந்திலன். காற்ருேடு கலந்து பரவிய நெருப்பினை யொத்த அவனது படையெழுச்சியால் நாடு பெற்ற நன்மை ஒன்று மில்லை. அவன் உயிருட னிருந்தவரையில் அவனது சத்துருக்கள் அவனது தண்டனைக்குப் பயந்து வாளா விருந்தனர். அவன் மரித்த செய்தி நாடெங்கும் பரவியவுடன் அவன் கைப்பற்றிய நாடுகள் அவனது வம்சத்தாரது ஆட்சியினின்றும் ஒவ்வொன்ருக விலகிக்கொண்டே வந்தன.

அப் பேரனலி லொடுங்கிக் கிடந்த கட்டைச் சிறு சுடரே சில வருடங்கட் கப்பால் பெருஞ் சுவாலையாக மறுபடியும் எழுந்து கொழுந்து விட்டெரியலாயிற்று. 1494-ம் ஆண்டினில் பதிஞன்கே பிராயமுடைய பாபர் என்னும் ஒரிளைஞன் ஜாக்ஸார்டி ஸென்னும் நதியை அடுத்துள்ள பர்காஞ மாகாணத்தின் உரிமையைப் பெற்ருன். அவன் தைமூர் வம்சத்தில் ஆறு தலை முறைகட் கப்பால்தோன்றி மூதாதையின் பாத்யதையை முன்னிட்டுக் கொண்டு நாட்டின் உரிமையைப் பெற்ருன். பர்காஞ நாட்டுத் தலைமையைப் பெற்றபின் பாபர் தைமூரைப் போலவே பிரசித்தி பெற்று உன்னத பதவியை அடைய வேண்டுமென்று நிச்சயித்து அதன் பொருட்டுப் பெரிதும் உழைத்து வந்தான். ஒரு சிறுவனுக்கு இவ் வரும் பெருங் கார்யத்தைச் செய்து நிறைவேற்றுவது அசாத்தியமே யெனினும் பாபர் தனது விடாமுயற்சியால் தான் கொண்டதை முடிக்கத் தீர்மானித்து ஓயாமல் உழைத்து வந்தான். தைமூர் அரசாட்சி புரிந்து பெருமை யடைந்த சாமர்கண்டில் தானும்

பாபர் காபூலை வென்று அரசுரிமை பெறுதல்.

அரசாண்டு அவன் செங்கோல் ஓச்சிய நாடுகளைத் தானும் தனது ஆட்சிக்குட்படுத்திச் சிறப்படைய விரும்பினன். அவனுக்கிருந்த பேரவாவினை இவ்வளவென்று சொல்லி முடியாது. ஆயினும் அவன் தன்னிடம் பொறாமை கொண்டிருந்த உறவின் முறையார், துரோகம் செய்வதிலேயே நாட்டம் மிகுதியுமுடைய தலைவர்கள், சதாகலகித்து அல்லல் விளைக்கும் படைவீரர், சிறிது சிறிதாக அதிகாரம் பெற்று வன்மை மிகும் **உஸ்பெக்** என்னும் பகைக் குடிகளுமாகிய இத்திறத்தார் மாட்டு அதிக ஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டியதாயிற்று. அவர்களால் அவனுக்கு எந்த நிமிஷத்திலும் ஆபத்து நேரிடக்கூடும். தைமூர் ஏறி அரசாண்ட சிம்மாசனத்தைப் பாபர் இருமுறை கைப்பற்றினன். இருமுறை அவன் தன் அரசையிழந்து நாட்டைத் துறந்து மலைப்பிரதேசங்களில் இடையரது குடிசைகளிலும், வட நாடுகளில் பகைவர்களாகிய தமது தாயின் பந்துக்களின் ஆதரவிலும் இருந்து வசித்துச் சொல்லொணுக் கஷ்டங்களை அநுபவித்து வருந்த வேண்டி வந்தது. அவன் பத்து வருஷகாலம் மன்றுடிப் பார்த்தான். ஒரு சமயத்தில் வெற்றி பெறுவான்; மறுசமயம் பகைவரிடம் தோல்வியுண்டு பரதேசியாய்த் திரிந்து காலங் கழிப்பான். ஆயினும் எவ்வகைத் துன்பம் அநுபவிக்கவேண்டி வரினும் அவன் தனது தைர்யத்தையும் நம்பிக்கையையும் ஒருநாளும் இழந்தவனல்லன். அவன் முடிவில் காபூலுக்குத் திரும்பி தைமூர் இந்தியாவின்மீது படையெடுத்துச் சென்றது முதல் அவனது பரம்பரையாரால் ஆளப்பட்டு வந்த காபூல் நாட்டாண்மையைக் கைப்பற்றிச் சிம்மாசன மேறினன். அவன் இங்குத்தான் தனக்கென ஓர் இராஜ்யத்தை ஸ்தாபித்தான். இராஜ்யம் சிறியதாயினும் அந் நாட்டைத் தன் ஸ்வாதீனத்தில் நிலைபெறச் செய்தல் பாபருக்கு மிகுந்த கஷ்டத்தைக் கொடுத்ததென்று சொல்லத் தடையில்லை.

மேலும் சாமர்கண்டை இருமுறை அரசாளும் சிறப்பிணைப் பெற்ற பாபர் காபூல் மலைநாட்டுத் தலைமை பூண்டு அத்தோ டமைந்திருப்பதற்கு உடன்படவில்லை. அவன்

மீண்டு மொருமுறை தனது மூதாதைகள் ஆட்சிபுரிந்த நாடுகளைக் கைப்பற்றி வெல்லத் தீர்மானித்து 1512-ம் ஆண்டில் மூன்ருவது முறை தைமூர் செங்கோல் செலுத்திச் சிறப்பெய்திய சாமர்கண்டைப் பிடித்து அதனுரிமைபெற முயற்சித்தான். ஆயினும் அவன் எண்ணியது ஈடேறவில்லை. இத்தடவையும் அவன் தோல்வியுற்ருன். அப்போதுதான் பாபர் சாமர்கண்டின்மீது தான் வைத்திருந்த நம்பிக்கையை விட்டுத் தன் மனத்தை இந்துஸ்தானத்தின்மீது செலுத்தலாமா வென்றெண்ணினன். இந்துஸ்தானம் எல்லா வளங்களும் நிரம்பிச் செல்வமுற்றுவிளங்கும் ஓர் அழகிய நாடென்பதைப் பாபர் அப்போது தான் உணர்ந்தான். பெருமை யடைந்து இராஜ்யங் கட்டியாள வேண்டுமாயின் இந்துஸ்தானத்தில் தனது கருத்தைச் செலுத்துவதே தகுதியென்று பாபர் கண்டு கொண்டான். இதுவரை தன் மலைநாட்டில் தனக்கு விரோதமாகக் கிளம்பிக் கலகம் விளைவித்த முரட்டு ஜாதியாரைப் போரில் வெல்லுவதற்காகப் பன்முறை வந்தபோது அவனது எண்ணம் இந்திய நாட்டின்மீது சென்றதுண்டு. சிற்சில சமயங்களில் இந்தியாவின் எல்லையைத்தாண்டி இந்நாட்டினுள் பிரவேசித்தது முண்டு. ஆயினும் அவனுடைய கருத்தை இந்தியாவின் ஆட்சியில் செலுத்தி இந்துஸ்தானத்தைக் கைப்பற்றுவதற்கு இருபது வருஷங்கள் சென்றன. அவ்விருபது வருஷங்களையும் பாபர் காபூலில் கழித்து வந்தான். ஆரம்பத்தில் அவன் சித்ரலுக்கு அருகே யுள்ள பீஜாரிற் புகுந்து அதனைத் தாக்கத் தொடங்கினன். இப்போதுதான் அவன் முதன் முதல் யுத்த முயற்சியோடு இந்தியாவிற் சென்று கால் வைத்தான். அடுத்தபடி அவன் ஜீலம் நதிதீரத்தை யடுத்துள்ள பீராவைச் சுவாதீனப்படுத்தினன். பிறகு நூற்றிருபது வருஷங்களுக்கு முன் தைமூர் வென்று ஆட்சிபுரிந்த நாடாகிய பஞ்சாபில் நுழைந்து அதில் தனது உரிமையை ஸ்தாபிக்க முயன்ருன். ஆயினும் அவ்வுரிமை அவனுக்கு ஸ்திரப்படவில்லை. அவன்

பாபர் சாமர் கண்டைக் கைப்பற்றுவதற்குச் செய்த முயற்சி.

திரும்பிக் காபூல்வந்து சேர்வதற்குள்ளாகவே இந்தியர் பஞ்சாபில் தமது பூர்வநிலையைப்பெற்று சுயேச்சையாய் ஆண்டுவரத் தலைப்பட்டனர். ஆகையின் பாபர் செய்த முயற்சி அச்சமயத்தில் பயனளியாது போயிற்று. ஆயினும், தனது தீர்மானத்தைக் கார்யகர மாக்கிக்கொள்ளச் சமயம் 1524-ம் ஆண்டினில் வாய்த்தது.

பாபர் இந்தியாவுக்கு வந்து அலாதீனுக்குச் செய்த உதவி.

அப்போது இந்தியாவில் ஆட்சி புரிந்தவன் சுல்தான் இப்ரஹிம் என்பதும், அலம்கான் அலாதீன் என்பவன் அவனுக்கு விரோதமாய்க் கிளம்பிப் பாபரின் உதவியை நாடினான் என்பதும் முன்னமே கூறப்பட்டன வன்றோ? பாபர் தனது எண்ணத்தை முடித்துக்கொள்வதற்கு இது ஒரு வியாஜமாய் முடிந்தது. பாபரின் உள்ளத்தில் இந்தியாவைப் பற்றிய தீர்மானங்கள் நிலைப்பட்ட பின்னரே அலாதீனின் சந்திப்பும் நேர்ந்தது. சமயம் எப்போது வாய்க்குமென்றுவலோடு முன் நோக்கிக் கொண்டிருந்த பாபரின் சந்தோஷத்தை இவ்வளவென்று சொல்லி முடியாது. டெல்லிக்குத் தலைமைபூண்டு சக்கரவர்த்தியாய்விட வேண்டுமென்று நினைத்து அலாதீன் காபூலுக்குச் சென்று பாபரிடம் தன்கருத்தை வெளியிட்டான். அதைக் கேட்டவுடன் பாபர் தன் எண்ணம் பலிக்குங் காலங் குறுகியதென்று அகங்களித்தான். இந்தியாவின் அரசாங்க விஷயமாகப் பல பிரிவுகளும் கட்சிகளும் ஏற்பட்டுக் கலவரம் மிகுந்திருந்தமை பாபருக்கு ஒ ரநுகூலமாய் முடிந்தது. பாபர் வெகு பலசாலி: அவன் எந்த நிமிஷத்திலும் பகைவரைப் போரிற் சண்டையிடுதற்குத் தயாராயிருந்தனன். அவனுடைய ஏற்பாடுகளை ஆமோதித்துத் துணை புரிதற்கு லோடி வம்சத்தைச் சார்ந்த ஒரு தலைவன் அவனுக்கு நெருங்கிய தோழனானன். இப்ராஹிம் சுல்தான் மிகவும் வெகுண்டு பீரா வழியாகத் தன் படையைத் திரட்டிக்கொண்டு லாகூருக்கு வந்து சேர்ந்தான். அவனது சைன்யம் தௌலத்கானை நாட்டினின்றும் துரத்தி வெற்றி கொண்டது; ஆயினும் காபூலில் இருந்து வந்த போர்

வீரர் டெல்லிச் சேனையைத் தாக்கிப் பலரைக் கொன்று அதனைச் சின்ன பின்னமாகும்படி சிதைத்தனர். அத்தோடமையாது லாகூர் தெருமுழுவதும் அவர்களைத் தூத்திக் கொள்ளையிட்டு கடைத்தெருவிற்குத் தீயிட்டுவிட்டனர். அப்பால் பாபர் பஞ்சாபில் நான்கு தினங்கள் தங்கித் தன் சேனையுடன் அதிவேகமாக திபல்பூருக்குச் சென்று அதனை முற்றுகைசெய்துக் கொள்ளையிட்டு அக்கோட்டைக்குள்ளிருந்த வீரரை எதிர்த்துக்கொன்றான். திபல்பூரில் தன்னிடம் நன்றிபாராட்டும் உத்தியோகஸ்தரிற் சிலரை ஆங்கிருந்து பகைவரால் ஊறு வாராதபடி அக்கோட்டையைக் காத்து வரும்படி கட்டளையிட்டு அவரை அங்குத்தானே நிறுத்தி, அலாதீனையும் சுல்தானகத் திபல்புரியில் ஆண்டு வரும்படி அவனுக்கு அதன் உரிமையை வழங்கிக் காபூலுக்குச் சென்றான்.

1525-ம் வருஷம் நவம்பர் மாதம் பாபர் இந்தியாவின் மீது கடை முறையாகப் படையெடுத்தான். அவனது மூத்த குமாரனான ஹூமாயூன் படக்ஷானிலிருந்து ஒரு சேனையைக் கொணர்ந்தான். அவனது தளகர்த்தர்களுட் சிறந்த க்வாஜா கான் என்பவன் காஸ்னியிலிருந்து வந்த சைந்யத்திற்குத் தலைமை வகித்தான். தௌலத்கான் பாபருக்குதவிபுரிவதாக வாக்களித்தானெனினும் அவன் நாற்பதினாயிரம் போர்வீரரைக் கூட்டிக்கொண்டு பாபர் சைந்யத்தோடு சண்டையிட நிச்சயித்துப் போர்க்களத்தையடைந்தான். பாபரின் சைந்யத்திலிருந்த வீரரின் தொகையோ வெகு சொற்பம். ஆயினும், அவனையும் அவனது சேனையையும் போர்முனையிற் கண்டதும் ஆப்கானியப் படை நாலா பக்கங்களிலும் சிதறியோடத் தலைப்பட்டது.

*பாபர் இந்தியாவின் மீது முடிவாகப் படையெடுத்தல்.*

1526ஆ ஏப்ரல் மாதம் 21உ யன்று முடிவான யுத்தம் பானிபட்டில் நடந்தது. இதே இடத்தில் இந்தியாவின் ஆட்சியைக் குறியாகக் கொண்டு மும்முறை போர் நிகழ்ந்தது.

*பானிபட் யுத்தம்.*

இங்ஙனம் சிறப்புற்ற அக்களத்தில் பாபர் தன் சேனைகளை யுத்தத்திற்குத் தயார்செய்து அணிவகுத்தான். அவன் எழுநூறு துப்பாக்கி வண்டிகளை ஒன்றன் பக்கத்தில் ஒன்ருக நிறுத்தினுன். மாட்டுத்தோலே முறுக்கிக் கயிருக்கி அவ்வண்டிகளை அதனுற் பிணைத்து அவ் வண்டிகளுக்கு இடையே தட்டிகளையும் கேடயங்களையும் அமைத்தான். குதிரைவீரர் தன் சேனையைத் தாக்காதபடி சில ஏற்பாடுகளைச் செய்து பாபர் தனது சைந்யத்தைப் பானிபட்டுக்குச் செலுத்தி வந்தான். வலது புறத்தில் நகரும், இடது பக்கத்தில் கால்வாய்களும், குழிகளும், மரங்களும் பாதுகாப்பாகும்படி பாபர் நடுவில் பீரங்கிகளையும் துப்பாக்கிகளையும் வைத்தான். அவன் வகுத்த அணியில் இடைவெளிக ளேற்படுத்தினுன். அவற்றின் மூலமாய் நூறு, நூற்றைம்பது பேர் ஏககாலத்தில் தாராளமாய் வந்து தாக்குதல் எளிதாகும்.

யுத்த ஏற்பாடுகள்.

ஏப்ரல் மாதம் 20உ இரவில் பாபரின் படைவீரர் ஆப்கானியரைத் திடீரென்று தாக்கலாயினர். ஆயினும் இருள் கவிந்துமூடிய அந்நள்ளிரவில் அவர் முயற்சி பலிக்கவில்லை: எனினும் அதனுல் ஓரநுகூல முண்டாயிற்று. பாபரின் வீரரைக் கண்டபின்பே சத்துருக்கள் தாம் தண்டிறங்கிய விடத்திலிருந்து வெளியே வந்தனர். முகலாயரைத் துரத்திவிடவே சுல்தான் இப்ராஹிம் மிகவும் களிப்புற்று போதுபுலர்ந்ததும் தன் சைந்யத்தைக் கொண்டுவந்து யுத்தகளத்தில் நிறுத்தினுன். அப்படையில் லக்ஷம் போர் வீரர் நூறு யானைகளோ டிருந்தனர். பகைவர் வெளிவந்ததைக் கண்ணுற்றுப் பாபர் தனது வீரரைச் சீராவுங் கவசமுந் தரித்துப் போரில் நிற்கும்படி கட்டளையிட்டான். தனது சேனையை அவர் வண்டித்தொடர்களுக்குப் பின்னுல், சிலர் மத்தியில் இருமருங்கிலும், சிலர் முனையில் இருமருங்கிலும், சிலர் மற்றவர்க்கு முன்னுமாக நிறுத்தினுர். சமயம் நேர்ந்துழி போர்புரிதற்குப் பிரத்தியேகமாகச் சிலர் நியமிக்கப்பட்டிருந்தனர். இருகோடி முனைகளிலும் மங்கோலியரை நிறுத்தியிருந்தனன். மங்கோலியர் பகைவரைத் தாக்குவ

தற்குச் சிற்சில சமயங்களில் அநுஷ்டித்துவந்த துலுக்மா வென்னு முறையைக் கையாடிப் பகைவரை எதிர்க்க வேண்டிப் பாபர் அங்ஙனம் மங்கோலியரை நிறுத்திவைத்து, தன் சங்கேதத்திற் கேற்ப நடந்துகொள்ளும்படி அவர்களுக்குக் கட்டளை யிட்டிருந்தான். இதனால் பின்னணியில் நின்று சண்டையிடும் பகைவரைத் திடீரென்று தாக்கி முறியடித்தல் எளிதென்று பாபர் நினைத்து அங்ஙனம் செய்தான்.

டெல்லிப் படையானது சிறிதும் இடையில் தாமதியாமல் வேகமாய் முன்னோக்கி வந்து கொண்டிருந்தது. அப்படை வீரர் பாபரின் சைந்யத்தை வலது பக்கத்தில் எதிர்க்க நிச்சயித்தனர். அதனை யறிந்த பாபர் தான் பிரத்தியேகமாய் வைத்திருந்த வீரரைக் கொண்டு அப்புறத்தில் பொருத வீரருக்குத் துணைபுரிய விரும்பி அவர்களை அங்கு அனுப்பினான். கால்வாய்களையும், மரங்களையும், தட்டிகளையும் அடைந்ததும் பகைவர் சிறிது தயங்கலாயினர். இது தான் சமயமென்று உணர்ந்து பாபரின் சேனை பின்புறமாக நின்று ஆப்கானிய வீரரைத் தாக்கவே அவ்வீரர்க்குள் பெருங் குழப்பமும் கலவரமும் உண்டாகத் தலைப்பட்டன. உடனே பாபர் தனது மங்கோலியரை இடைவெளி வழியாகச் சென்று பகைவர் பின்னாற் போய் அவர்களைச் சூழ்ந்து தாக்கும்படி கட்டளை யிட்டனுப்பினான். அவ்வாணையை அவர்களும் நிறைவேற்றித் தம் பரிகளில் வேகமாகச் சென்று பகைவரைத் தாக்கி அவர்மீது சரங்களை வர்ஷிக்கத் தொடங்கினர். ஆயினும் சக்கரவர்த்தியின் இடது பக்கத்தில் நின்றுகொண்டிருந்த வீரர் அவசரப்பட்டு முன் சென்றமையால் மிகவும் கஷ்டப்பட வேண்டியதாயிற்று. ஆயினும் சேனைத்தலைவன் அவர்கள்மீது கண் வைத்து இடையிலிருந்த வீரரை அவருக்குத் துணை புரிந்து போர் புரியும்படி கட்டளை யிட்டிருந்தான். அச்சமயத்தில் வலப்புறத்தி லிருந்தவருக்கும் சத்துருக்களால்மிகுந்த உபத்திரவம் உண்டாகத் தலைப்பட்டது. பாபர் அவர்களுக்குச் சகாயமாகத் தனக்கு வலப்புறத்து மத்தியில் இருந்த வீரரை

உடனே அனுப்பினன். உஸ்தத்அலி என்னும் துப்பாக்கி வீரன் முன்னே நின்றுகொண்டு குண்டுகளைப் பிரயோகித்தான். முஸ்டாபாவும் இடப்பக்கத்துக் கோடியில் நின்று பகைவரை எதிர்க்கலாயினன். இவ்விதம் சத்துருக்களை நாலா பக்கங்களிலும் முன் வரிசையிலும், பக்கங்களிலும், பின்புறத்தும் நின்று எதிர்க்கத் தொடங்கினர். அவர்கள் எறிந்த ஆயுதங்களால் பாபரது சைந்யத்திற்குச் சிறிதும் ஊனமுண்டாகவே யில்லை. அவர்கள் ஒன்று கூடி பாபரின் சைந்யத்தை எதிர்க்கும்போது பாபரது வீரர் அவர்களுடன் தைரியமாய்ச் சண்டையிட்டுத் துரத்தி யடித்தனர். அவர்கள் சிறிது நேரத்தில் தமது பலங்குன்றித் துருக்கியரும் மங்கோலியரும் அடங்கிய பகைவருக்குத் தோற்று அயர்ச்சியுற்றனர். அச் சைந்யத்தில் கலவரம் மிக்கது.

பாபரின் வெற்றி.

பகலாயிற்று. டெல்லி மன்னனின் பெருஞ்சேனை சிதறுண்டது. வீரர் உயிர்தப்பிப் பிழைத்தாற் போதுமென்றெண்ணிப் போர்க்களத்தை விட்டுப் புறங்காட்டி யோடினர். அக்களத்து மடிந்து குவிந்து கிடந்த பதினையாயிரம் பேர்க்கிடையில் இப்ராஹிம் சுல்தானும் விழுந்து உயிர் துறந்தான். அவனது தலையைக் கொண்டுபோய் வீரர் பாபருக்கு அளித்தார்கள். அனேக கைதிகளும், யானைகளும், பல்வகையான கொள்ளைப் பொருள்களும் பாபரிடம் கொண்டு வரப்பட்டன. சூர்யோதயமாகி ஒரு நாழிகைக்குள் யுத்தம் தொடங்கிப் பகல் உச்சி வேளை வரையில் நடைபெற்றது. அதற்குள் சத்துருக்கள் பலமுழுவதுங் குன்றி களத்தினின்றும் ஓடலாயினர். "என் ஜனங்கள் வெற்றி யடைந்து விட்டனர். எல்லாம் வல்ல இறைவனது அருளால் என் வேலை எனக்கு எளிதில் முடிந்தது. அந்தப் பெருஞ்சேனை அரை தினத்திற்குள் நீறுக்கப்பட்டது" என்று பாபரே கூறுகிறன். உடனே அவன் தனது படையை இரண்டு பிரிவுகளாக்கி அவற்றை முறையே டெல்லிக்கும், ஆக்ராவுக்கும் அனுப்பினன். ஏப்ரல்மீ 27உ வெள்ளிக்கிழமை முகலாயருள் முதல்வனன பாபர் சக்கரவர்த்தியின் பெயரை முன்னிட்

டுத் தலைநகரிலுள்ள மசூதியில் குடிகள் முன்னிலையில் விசேஷ ஜபம் ஒன்று நடந்தது.

டெல்லியிலும் ஆக்ராவிலும் அளவற்ற திரவியங்களும் பொருள்களும் குவிந்து கிடந்தமையின் சக்கரவர்த்தி அவற்றைத் தனக்காகப் போர் புரிந்த வீரர்க்குப் பகுத்துக் கொடுக்கலானன். தனது மூத்த குமாரனை ஹுமாயூனுக்கு இருபதினயிரம் பவுன் மதிப்புப் பெறும் எழுபது லக்ஷம் நாணயங்களையும், ஒரு பெரிய நிதிக்குவையையும் அளித்தான். அவனது பிரதானிகளாகிய பேகர்களுக்கு ஆயிரத்தெழுநூறு பவுன் முதல் இரண்டாயிருத்தெண்ணூறு வரையில் மதிக்கக்கூடிய ஆறு லக்ஷம் முதல் ஏழு லக்ஷம் வரையில் நாணயங்களைப் பரிசாக அளித்தான். யுத்தத்தில் சேர்ந்து சண்டையிட்ட ஒவ்வொரு வீரனுக்கும் அப்பொருளில் பங்கு கிடைத்தது. படையைச் சார்ந்து சென்ற வியாபாரிகளும் பிறரும் உட்பட யாவரும் தத்தமக்குரிய பங்குகளைப் பெற்றனர். வெற்றித் தினத்தைச் சக்கரவர்த்தி சிறப்பாகக் கொண்டாடினன். காபூலிலிருந்த ஆண், பெண், இளையவர், மூத்தவர், அடிமைகள் உட்பட எல்லாத் திறத்தினர்க்கும் ஒரு வெள்ளி நாணயம் வழங்கப்பட்டது. ராஜா விக்கிரமஜித்தனின் குடும்பத்தார் மிகச் சிறந்த மாணிக்கத்தை ஹுமாயூனுக்குக் காணிக்கையாகக் கொடுத்தனர். உலக முழுவதும் தினம் ஒன்றுக்குச் செலவாகும் தொகையிற் பாதியளவுக்குச் சரியான மதிப்புள்ள அவ்வருமணியை ஹுமாயூன் தனது தந்தையாரிடம் கொண்டுவந்து சமர்பித்தனன்*. பாபர் அதனை வாங்கி அதன் சிறப்பினை நோக்கி வியந்து அதனைத் தன் குமாரனுக்கே திருப்பி யளித்து விட்டான். பாபருக்குப் பணத்திலும், நகைகளிலும் விருப்பமே கிடையாது. தனக்குக் கிடைத்த தனைத்தையும் தன்னைச் சார்ந்த வீரர்க்கும் பிரபுக்களுக்குமே வழங்கிவிட்டான். அதனல் அவனுக்குப் பிச்சையெடுக்கும் பாதேசி என்று

*இக்கல்லே ஒருகால் உலகப் பிரசித்தமடைந்திருக்கும் கோகினூர் என்னும் இரத்தினமாயிருத்தல் கூடும் என்று ஐயுறுவாரும் உண்டு.

பொருள் தரும் 'காலந்தர்' என்னும் பெயர் வழங்கலா யிற்று.

யுத்தத்துக்குப் பின்னும், நாடெங்குங் குழப்பம்.

பாபர் பானிபட்டில் வென்றதன் பயனாக டெல்லியின் உரிமையையும் பட்டத்தையும் பெற்றானேனும் ஹிந்துஸ்தானம் இன்னும் அவனது ஆட்சிக்கு உட்படவில்லை. அக்காலத்து சிந்துநதி முதல் பீகார் வரையிலும், க்வாலியர் முதல் இமாலயம் வரையிலும் வியாபித்திருந்த டெல்லியும் பேருக்குமட்டும் பாபரை அரசனாகக் கொண்டு அவனது ஆட்சிக்கு அடங்கியிருந்தது. லோடி வம்சத்தார் பானிபட் யுத்தத்தோடு செல்வாக் கழிந்து சிதைவுற்றதும், அரசன் இறந்ததும் உண்மையே; எனினும், அவ்வரசனுக்குச் சகோதரனாக விருந்த ஒருவன் தனது பாத்தியதையை முன்னிட்டுக்கொண்டு பாபருக்கு விரோதமாகக் கிளம்பினான். ஆக்ராவுக்குக் கிழக்கிலும் மேற்கிலும் உள்ள நாடுகள் பாபருக்குச் சுவாதீனப்படவில்லை. தம்மினும் வேறுபட்டுப் புதுப் பாஷையை வழங்கி வந்த அன்னிய நாட்டினரிடம் குடிகளுக்கு நம்பிக்கையும் அன்பும் உதிக்கவில்லை. ஒவ்வொரு நகரிலும் ஒரு தலைவன் ஆட்சி புரிந்து சக்கரவர்த்திக்கு அடங்காமலேயிருந்தான். தோவாபிலும், இராஜ புதனத்திலும் உள் நாட்டினர் வலுத்த கோட்டைகளைக் கட்டிக்கொண்டு புறநாட்டார்க்குச் சிறிதும் இடங்கொடாமல் சுயேச்சையாய் நடந்து வந்தனர். பாபர் எவ்வளவு கொடுத்தும் போதாமையால் திருப்தியடையாமல் சேனைவீரர் வறுமையால் துன்புற்றனர். 'நான் ஆக்ராவுக்கு வந்தபோது கோடைகாலம். எல்லாக் குடிகளும் எங்களைக் கண்டு பயந்து அந்நகரைக் காலி செய்து ஓடிவிட்டனர். அதனால் எங்களுக்கும் எங்களுடைய விலங்குகட்கும் தானியம் முதலிய உணவுப் பொருள் ஒன்றுங் கிடைக்கவில்லை. அக்கம் பக்கத்திலிருந்த கிராமவாசிகளோ எங்களைப் பகைத்து வெறுத்து எங்களுக்கு விரோதமாகக் கிளம்பிக் கலகிக்கவும் எங்கும் சென்று கொள்ளையிட்டுப் பொருள் பறிக்கவுந் தலைப்பட்டனர். சாலைகளில் பிரயாணஞ்

செய்தல் பொருளுக்கு நாசமும், உயிருக்கு ஆபத்தும் விளைவிக்கக் கூடியதாய் இருந்தது. ஆங்காங்குச் சென்று இவ்வகையான அக்கிரமங்கள் நடவாதபடி காத்து வருவதற்கு என்னைச் சேர்ந்தவரை அனுப்புவதற்கும் அவகாசமில்லாமற் போயிற்று. சூரிய வெப்பமோ சகித்தற்கரிய கொடுமை செய்ததால் ஏக காலத்தில் பலர் தாம் நின்ற விடத்திலேயே விழுந்து பிராணனை விட்டனர்' என்று பாபர் எழுதுகிறான்.

பாபரின் மன வமைதியால் தன் வீரரைத் தன் வழித் திருப்பித் தன் பகைவரை அடக்கல்.

போர்வீரரும் முணுமுணுக்கத் தொடங்கினர். காபூலுக்குச் சென்று ஆங்குள்ள குளிர்ந்த காற்றை அநுபவிக்க விரும்பித் திரும்பிச் செல்வதற்குத் தயாராயிருந்தனர். 'வந்தோம்; வேண்டியது பெற்றோம்; இனி நமக்கிங்கென்ன வேலை? மீண்டும் நம் நாடு செல்வதே தகுதி' என்று நினைத்துக் குறிப்பாய்த் தம் கருத்தைச் சக்கரவர்த்திக் கறிவித்தனர். ஆயினும், பாபரின் மனம் இச்சிறு விஷயத்திற்குச் சலிப்புறவில்லை. பாபர் தன்னைச் சுற்றியிருந்த முக்கிய உத்தியோகஸ்தரை ஒன்று கூட்டி ஒருபத்யாசஞ் செய்தான். அவர்கள் தன்னுடன் இதுகாறும் பட்ட கஷ்டங்களை ஒவ்வொன்றாக நினைப்பூட்டி எடுத்துக் காட்டி, அவ்வரும் பிரயாசை வீணாகாது உழைத்தால் தனக்குக் கிடைக்கக் கூடிய லாபம் பெரிதென்றும், அதனைப் பெற்றனுபவியாது வந்த வழியே மீண்டும் திரும்புதல் நன்றன்றென்றும் விளக்கி அவர்களின் மனம் கரையும் வண்ணம் உபந்யஸித்தான். 'ஒரு பெரிய பகைவனை ஜயித்துவிட்டோம். செல்வம் மல்கிச் சிறப்படைந்துள்ள பெருநாடு நமக்கு உட்பட்டு நமது சுவாதீனத்தில் அமைந்திருக்கிறது. நாம் சாதிக்க முயன்றதில் ஏறக்குறைய முக்காற் பங்குக்குமேல் செய்து முடித்தாய்விட்டது. இவ்வளவு தூரம் நாம் முடித்தபின் நம்முடைய உழைப்பெல்லாம் வீணாகும்வண்ணம் பேடிகளைப்போல் தைரிய மிழந்து காபூலுக்குச் செல்வது தகுதியோ? என்னுடைய நண்பனென்று சொல்லிக்கொள்ளும் எவ்வீரனும் மறுபடியும் இவ்

வித எண்ணங் கொள்ளலாகாது. உங்களில் யாருக்கேனும் என்னுடனிருக்க மனமில்லாதிருக்குமாளுல் நான் அத்தகை யாரை நிர்ப்பந்தித்து ஈண்டு நிறுத்திக்கொள்ள உடன் பட மாட்டேன். அவர்கள் தம்மிஷ்டப்படி செய்யலாம்' என்று பாபர் கூறியதைக் கேட்டு வீரர் யாவரும் வெட்கத்தால் தலைகுனிந்து வாளாவிருந்தனர். தான் பிடித்த பிடி விடாது பாபர் தன் எண்ணத்தைச் சாதித்துக்கொண்டதே அவனது பெருமையை நன்கு விளக்குவதாம். இந்தியா அவனுக்கு அயல் நாடு. இந்தியர் அவனுக்குப் பகைவர். அவனுடைய போர்வீரரோ அவனுடனிருந்து ஓயாது சண்டையிட்டு அதனால் அலுப்புற்றவர். அப்படியிருந்தும் இந்தியாவின் நடுவில் பகைவரை வென்று தனது வீரரையும் உற்சாகப் படுத்தித் தான் கொண்டதை முடித்துக்கொண்ட பாபரின் தீரத்தையும் மன நிலையையும் என்னென்று வியப்பது! அவன் தன்னுடைய விடா முயற்சியின் பயனை அடையாமற் போகவில்லை. முதலில் தன்னைச் சேர்ந்தோரைத் தன் வயப்படுத்தி அவர்களைத் துணைக்கொண்டு தன் பகைவரிற் பெரும்பாலாரை அடக்கி வெற்றி கொண்டான். முதலில் தோவாபிலிருந்து ஓராப்கானிய உத்தியோகஸ்தன் மூலா யிரம் போடங்கிய ஒரு சேனையுடன் வந்து பாபரின் தலை மையை அங்கீகரித்தான். பாபர் இன்னொரு பகை யரசனை எதிர்த்து வெற்றி பெற்று அவனுடைய குமாரர்களைச் சிறை பிடித்தனன். அக்குமாரர்களை அவன் அன்புடன் ஆதரித் துக் காத்து வந்ததை யறிந்த பகைஞன் பாபரின் தயாள குணத்தைக் கண்டு வியப்புற்று அவனிடம் தோழமை கொள்ள விழைந்து அவனுக்குப் பணிந்து நின்றான். கிழக்கே ஆப்கானியர் கலகிக்கத் தொடங்கித் தோவாப் நோக்கிச் சென்று கொண்டிருந்தனர். ஹுமாயூன் தனது படையுடன் அவர்களை எதிர்த்து வருவதைக் கேள்வி யுற்றதும் ஆப்கானியர் ஓடவாரம்பித்தனர். ஹுமாயூன் அவர்களை விடாது பின் தொடர்ந்து சென்று ஜான்பூரையும் காஸிபூரையும் கைப்பற்றினுன். அவ்விடங்களில் சக்கா வர்த்தியின் படைவீரரிற் சிலரை நிறுத்தி ஹுமாயூன் தன் தந்தை ஓாபத்தில் அகப்பட்டுக் கொண்டிருத்தலைக் கேள்வி

யுற்று உடனே திரும்பிக் கால்பி வழியாக டெல்லிக்குச் சென்றான்.

ராணு சாங்காவின் போர்த்திறம்

ஹிந்துஸ்தானத்தில் தனது அதிகாரத்தைப் பாபர் நிலை நிறுத்துவதற்குத் தடையாக, ஒரு பெரிய விரோதி யாட்சி புரிந்து வந்தான். பாபருக்கு இவன் ஒருவனே ஓயாத கஷ்டங்களை யுண்டாக்கி வந்தான். அவ்விரோதி சித்தூரில் அரசு செலுத்திப் பெருமை பெற்ற ராணுசாங்கா வென்பவன். அவன் இராஜபுத்திர மன்னருட் சிறந்து தலைமை வகித்து வந்தான். அவன் பெருத்த சேனைபலத்தோடு புகழ் பெற்று விளங்கினான். எண்பதினாயிரம் குதிரைகளோடும், ஐஞ்ஞூறு போர் வேழங்களோடும், நூற்றிருபத்தொரு இராஜ புத்திரத் தலைவர்கள் அவனுக்குச் சகாயமாய்ப் போர் முனை யில் நின்று சதா யுத்தம் செய்யத் தயாராயிருந்தனர். மார் வார், அம்பேர், க்வாலியர், ஆஜ்மீர், சாண்டேரி முதலிய பல மாகாணங்களில் தலைமை வகித்துவந்த இராஜபுத்திரர் யாவரும் ராணுவுக்கு ஊழியம் செய்து வந்தனர். ராணுசாங்கா சாமான்ய வீரனல்லன். அவன் சென்று சண்டையிட்ட போர் முனைகள் கணக்கில் அடங்கா. அவனது உடல் முழு வதும் யுத்தத்தில் பட்ட காயங்கள் எண்பதுக்கு மேலிருந் தனவென்று கூறுவர். அவன் போரில் ஒரு காத்தையும் கண்ணையும் இழந்தான். போர் முரசம் ஒலித்தலைக் கேட்ட மாத்திரத்தில் அவனது உற்சாகம் பொங்கி மேலெழத் தொடங்கும். அவனே போர்க்களத்தில் முதல் வரிசை யில் நின்று சமர் புரிவான். அவனே பாபர் சக்கரவர்த் திக்கு விரோதமாகக் கிளம்பிப் பியானாவை நோக்கிச் சென்று கொண்டிருந்தான். சக்கரவர்த்தி பியானா கோட்டையைக் காத்துப் பகைவனை வளைத்துச் சண்டையிடும்படி ஒரு சிறு சேனையை முன்னே அனுப்பிப் பின்னர்த்தானே தன் சேனையைக் கூட்டிக்கொண்டு 1527ஆு பிப்ரவரிமீ பதி னோராந்தேதி யுத்தத்திற்குப் புறப்பட்டான். இதுவரை பாபர் தனது மதத்தினராகிய முஸ்லாமியரையே போர்க் களத்தில் எதிர்த்து வந்தான். இப்போதுதான் முதன்

முதல் அவன் புறச் சமயிகளாகிய இந்துக்களுக்கு விரோத மாகப் படையெழுப்பிச் சென்றுன். ஆகவே, அவன் ஜிஹாத் என்னும் மதப்போரினைப் புரியலானுன். ஹிந்து இராஜ புத்திரன் சிறந்த போர்வீரன். நன்ருய்ப் போர் முறையை அறிந்தவன். யுத்தாநுபவம் மிகுந்தவன். பாபர் பல நாட்டினரின் போர்த்திறமையை நன்கு அறிந்திருந்தான். மங்கோலியரும், உஸ்பெக் ஜாதியாரும், ஆப்கானியரும், துருக்கியரும் கையாண்டு வந்த போர் முறைகளை அவன் செவ்வனே அறிந்திருந்தானேனும் இராஜ புத்திரரைப்பற்றி அறிவதற்குச் சந்தர்ப்பம் இதுகாறும் அவனுக்கு வாய்க்க வில்லை. இராஜ புத்திரர் முயற்சி குன்ருதவர்; மறத்தொழி லில் விருப்பம் மிகுந்தவர். போர்முனையைப் பாயலென மதித்தவர்: ஜாதி யபிமானமும் நாட்டபிமானமும் மிகுந்த உத்தம வீரர். தம்மினும் மேம்பட்ட போர்வீரர்மாட்டும் அஞ்சா நெஞ்சத்துடன் தம் வல்லமையைக் காட்டித் தம் புகழை நிறுத்துவர். தமது உயிரினும் மானத்தையே மேலாக மதித்து யுத்தத்தில் தம் ஆவியை யிழக்கத் தயங் காதவர்.

முகலாயரின் யுத்த முயற்சி; முகலாயர் இராஜ புத்திர வீரரைக் கண்டஞ்சிச் சோர் வடைதல்.

சக்கரவர்த்தி சிக்ரி யென்னுமிடத்தில் தண்டிறங்கினுன். பியானுவுக்கு அனுப்பிய சேனைப் பகுதியும் அவனுடைய சேனையோடு கலந்துகொண் டது. இராஜ புத்திரரின் திறமையையும், தைரியத்தையும் நேரிற் கண்டவனுகையால் சக்கரவர்த்தியின் படைவீரர் அவனது பெருமையைப் பாபருக்கு எடுத்துக் கூறிப் புகழ்ந்தனர். யுத்தம் தொடங்கு முன் நடந்த ஒரு சிறிய நிகழ்ச்சியே இராஜ புத்திரர் சாமான்ய போர்வீரரல்லரென்பதைச் சக்கரவர்த்திக்கு விளக்கியது. அமீர்களுள் ஒருவன் நிதானியாது திடீரென்று முன்பின் யோசனையின்றித் தன் வீரரை முன்னுக்கனுப்பி இராஜ புத்திரரை வளைத்துக்கொள்ளும்படி ஏவியிருந்தான். இராஜபுத்திரர் இதனை எவ்வாறே உடனே அறிந்துகொண்டு பகைவர் தம்மை யடையு முன்னரே அவர்மீது பாய்ந்து தாக்கிச்

சிதறியோடும்படி துருக்கி வீரரை அடித்து ஓட்டினார்கள். சக்கரவர்த்தி இராஜ புத்திரரின் போர் வல்லமையை மெச்சித் தனது படையை அணிவகுக்கத் தொடங்கினான். பானிபட் யுத்தத்திற் செய்ததுபோலவே பாபர் இப்போதும் துப்பாக்கிச் சகடங்களை முன்னே வரிசையாக நிறுத்தி ஒவ்வொன்றுக்கு மிடையே சிறிது இடம்விட்டு அவற்றை ஒன்றோடொன்று பிணித்துவிட்டான். துருக்கி வீரருடன் வந்திருந்த முஸ்டாபா வென்னும் சேனைத்தலைவன் இடது கோடியில் ஒட்டொமானியர் செய்வதுபோல் பீரங்கிப் படையை நிறுத்தினான். துப்பாக்கிகளும் வண்டிகளும் இல்லாத விடங்களில் உஸ்தத்ஆலி பள்ளம் தோண்டுவித்து அதில் சக்கரங்களோடு கூடிய மரத்தாற் சமைந்த முக்காலிகளை நிறுத்தினான். போரினுக்குப் பூர்வாங்கமாக நடந்தேறவேண்டிய ஏற்பாடுகளைச் செய்துமுடித்தற்கு இருபத்தைந்து தினங்கள் சென்றன. பாபரின் வீரர்கள் இராஜ புத்திரரைக் கண்டு அவரது போர்த்திறனைப்பற்றிக் கேள்வியுறுகையில் தமது தைரியத்தை இழந்து சோர்வுற்றனர். அதற்கேற்பச் சோதிடனொருவன் வந்து சண்டை முகலாயர்க்கு விரோதமாய் முடியுமென்று பொய்யுரை புகன்றான். அவ்வுரையைக் கேட்டபின் அவ்வீரரது அச்சம் முன்னிலும் அதிகப்பட்டது.

பாபர் தன் துணைவரைத் தேற்றிப் போர்க் கெழுப்பல்.

இந்த நெருக்கடியான நிலையில்தான் பாபர் தான் இனிச் சாராயக் கிண்ணத்தைத் தொடுவதில்லையென்று பிரதிக்கினை பண்ணி அத்திராவகம் அடங்கிய பாத்திரத்தைக் கீழே உடைத்தெறிந்தான். அவன் ஊக்கந் தளர்ந்திருந்த தன் வீரரை அழைத்து அவரை நோக்கி, ‘ தலைவர்களே, வீரர்களே ! உலகிற் பிறந்த ஒவ்வொருவனும் என்றைக்காவது இறந்தேயாகவேண்டும். கடவுள் ஒருவரே அழிவற்று என்றும் ஒரே புடையாய் நிலைத்திருப்பவர். எவன் ஜன்மமெடுத்து இப்போக பூமியில் தோன்றிப் பிறக்கிறானோ அவன் காலபாசத்துக்குக் கட்டுப்பட்டுத் தன் வாழ்வை முடிக்கவேண்டியவனாகிறான். மர

ணத்தைப் பயக்கும் இல்வாழ்க்கையிற் புகுந்தவர் யாவரும் துக்க நிலயமாகிய இல்வுலகத்தை ஒரு நாள் நீத்தல் உண்மை. ஆகையின், மானங்கெட்டு உயிர் வாழ்தலினும் மானத்தோடு உயிர் துறத்தல் சிறப்பன்றோ? புகழொன்றே எனக்குப் போதும். வாழ்வு கழிந்தாற் பாதகமில்லை. என் பிராணனைக் காலன் கொள்ளட்டும்; ஏனெனின், புகழ் என்னிடமே நிலைத்துள்ளது. போரில் மரித்தோர்க்குக் கடவுள் அருள்புரிவர்; நற்பதமளிப்பர். போர்க்களத்து வெற்றியடைந்தோர் அழியாப் புகழ்பெற்றுக் கடவுளின் திருவருளைச் சிந்தித்து அருள் பெறுவர். ஆகையால் தோழர்களே! நமது உயிர் உடலைவிட்டு நீங்குமளவும் போர் முனையின் அகலாது நின்று பொருது நாம் வீரர் திலகரெனப் பிறர் வியப்பப் புகழுடைவோமாக என்று கடவுள் திருநாமத்தைச் சொல்லி நாம் யாவரும் ஒருமிக்க ஆணையெடுத்துக் கொள்வோம்" என்று அவர் மனந்தெளிந் துருகுமாறு பிரசிங்கித்தான்.

சிக்ரி யுத்தம்; கி. பி. 1527. இராஜ புத்திரரின் தோல்வி.

தேனினு மினிய இச்சொற்பொழிவினைக் கேட்ட வீரரின் மனநிலை முற்றும் மாறியது. ஒவ்வொருவனும் கோரானை யெடுத்துச் சக்கரவர்த்தி கூறியதுபோல் கடவுள்பேரால் சபத மொழி புகன்றனன். அதற்குப் பின் சேனையும் ஒழுங்குபட்டது. பாபர் பகைவனை எதிர்த்துத் தாக்க நிச்சயித்தான். புது வருஷம் பிறந்த தினமாகிய மார்ச்மீ 12உ அவன் அடியில் வருமாறு எழுதுகிறான்:—"நான் தயாரித்திருந்த முக்காலிகளோடும், இதர சாதனங்களோடும் என் துப்பாக்கிகளையும் சகடங்களையும் முக்காலிகளையும் முன்னிட்டுச் சென்று என் சைந்யத்தைப் பகைவர் இருக்குமிடத்தில் வலத்தும், இடத்தும், நடுவணும் அவரவர் இருந்த நிலை திரியாது செலுத்தினேன். முதலில் கட்டை வண்டிகளும் துப்பாக்கிச் சகடங்களும் சக்கரங்களின் மேலேற்றப்பட்ட முக்காலிகளும் சென்றன. துப்பாக்கி வீரர்க்கும் காலாட்களுக்கும் பிரிவு ஏற்படாதபடி தடுப்பதற்காக உஸ்தத்ஆலி தன் ஆட்களிற் சிலரை

முன்னிட்டுக் கொண்டு அச் சகடங்களுக்குப் பின்னல் சென்றுகொண்டிருந்தான். எல்லா வீரரும் தத்தம் நிலைக்கு வந்து ஒழுங்குபெற நின்றதும் நான் என் குதிரை மீதேறிக் கொண்டு நெடுக சென்று, நடுவிலும் வலத்திலும் இடத்திலுமிருந்த பேகர்க்கும் மற்றையோர்க்கும் ஊக்கமூட்டி, ஒவ்வொரு பகுதியிலுள்ளவரும் எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்றும், பகைவரை எப்படித் தாக்கி எதிர்க்க வேண்டுமென்றும் யுத்த முறைகளைச் சொல்லி முடித்தேன். எல்லா ஏற்பாடுகளும் முடிவுற்றதும் இரண்டு மைல்கள் தூரம் என் சேனையைச் செலுத்திக்கொண்டே சென்று போர் முனையை அடைந்தேன்.” 1527-ம் வருஷம் மார்ச்சு 16உ சனிக்கிழமை இருதிறத்தாரது சேனைகளும் கான்வஹா என்னுமிடத்திற் சந்தித்தன. இராஜ புத்திரர் யுத்த வெறிகொண்டு சக்கரவர்த்தியின் படையை வலதுபுறத்தில் தாக்கத் தொடங்கினர். பாபர் சிறிதும் தாமதியாது வெளியே நின்றுகொண்டிருந்த வீரரைக் கூட்டி வலப் புறத்து நின்று போர்புரிவோர்க்குத் துணை புரியும்படி கட்டளை யிட்டான். நடுவி லிருந்த துப்பாக்கிக்காரர்கள் வெடிதீர்த்துக்கொண்டே யிருந்தனர். இராஜ புத்திரரை யுத்தத்தில் அடக்குவது எளிதன்று. அவர் எதிர்க்கத் தொடங்கிஞல் அவருக்கு விரோதமாய் நின்று போர்புரிதல் மிகவும் கஷ்டமான காரியம். இராஜ புத்திரர் சற்றும் சோர்வடையாமல் பீரங்கிப் படையினருகே தள்ளிக்கொண்டு வேகமாக முன் நோக்கி வந்தார்கள். சண்டை வெகு மும்முரத்துடன் நடந்தது. பாபர் நேரில் நின்று பகைவரைச் சில மணிகள்வரை எதிர்த்தும் அவர்களை அவனுல் வெல்லமுடியாமற் போயிற்று. பாபர் தனது படையில் கோடியிலிருந்த துருக்கிய வீரரை முன்னுக்குச் செலுத்தி, மங்கோலிய முறையினை அநுசரித்து, சக்கரம்போற் சுழன்று திரும்பிப் பகைவர் மேல் பாய்ந்து அவர்களை எதிர்க்கும்படி கட்டளையிட்டான். அதே சமயத்தில் அவன் தனது துப்பாக்கி வீரரை முன்னே சென்று சுடும்படி ஏவினுன். உஸ்தத் ஆலியின் வீரர் துப்பாக்கியைப் பிரயோகித்துக் கொண்டே சென்றனர். அப்போது சக்கரவர்த்தித் தனது

பரியாளரை இருபுறங்களிலும் செலுத்தினான். இங்ஙனம் பாபர் பகைவரை நாலா பக்கங்களிலும் வளைத்துக் கொண்டு சண்டையிட்டான். இதனால் இராஜபுத்திரர் நிலை சிறிது மாறுதலடைந்தது. மேலும், பின்னிருந்து தாக்கத் தொடங்கினால் இந்தியரின் போர்த்திறம் பயனற்றதாய் முடியும். அதனால், இராஜபுத்திரர் சேனையில் குழப்பம் மேலிட்டது. அவர்கள் யாவரும் ஓரிடத்திற் குழுமிப் போரினை நீட்டித்து வந்தனர். போர்க்கள முழுவதும் இரத்த வெள்ளம் பெருகியது. உஸ்தத்ஆலி பகைவரை தன் துப்பாக்கிக் குண்டுகளுக்கிரையாக்கி எண்ணிறந்த இராஜ புத்திரரைக் கொன்று மாய்த்தான். முடிவில் இராஜ புத்திரரின் தைரியங் குன்றியது. அவர்கள் துருக்கிப் படைகளின் நடுவில் நுழைந்து நாலா பக்கங்களிலும் ஓடலாயினர். யுத்தகளத்தில் பொருது மடிந்தவர் பலர்; காயமடைந்து ஓடி யிறந்தவர் பலர்; பிழைத்தவர் வெகு சிலரே. யுத்தத்தில் மடிந்த இராஜ புத்திரத் தலைவர்களின் சிரங்களையும் உடல்களையும் சக்கரவர்த்தி ஒன்று கூட்டிப் பிணப்போராக்கினான். சாங்கா உயிர் தப்பி யோடித் தான் பெற்ற காயத்தாற் சில நாட்களில் உயிர் துறந்தான். அவன் மரபிலுதித்த எந்த இராஜ புத்திரனும் இச்சம்பவத்துக் கப்பால் பாபரின், சந்ததியாரோடு நேரிற் போர்முனை சென்று சண்டையிட்டதில்லை.

**பாபர் சாண்டேரியை முற்றுகை யிட்டுக் கைப்பற்றுதல்.**

இந்தியாவின்மீது படையெடுத்து ஓராண்டு முடியுமுன் பாபர் இரண்டு சிறந்த வெற்றிகளைப் பெற்றான். பானிபட் யுத்தத்தில் அவன் முகமதிய ஆப்கானியரது வலியைச் சிதைத்தான். கான்வாஹா யுத்தத்தில் வீரருட் சிறந்த இராஜபுத்திரரது பலம் ஒடுங்கியது. அதற்குப் பின் மால்வாவில் இராஜபுத்ரப் பிரதிநிதியாயிருந்த மேதினிராவின் கோட்டையாகிய சாண்டேரியை முற்றுகையிட்டுப் பாபர் அதனையும் தனக்குச் சுவாதீனமாக்கிக் கொண்டான். அப்போது நடந்த போரில் ஸ்திரீகள் குழந்தைகளுட்பட யாவரும் களத்தில் பகைவர் வாளுக்கிரையாகி மடிந்தனர். சிலர் கோட்டைமதில்மீதிருந்து

விழுந்து தமது உயிரை நீத்தனர். இத்தோடு பாபருக்கு இராஜ புத்திரரைப்பற்றி யிருந்த கவலை முற்றிலும் நீங்கியது.

பாபர் பீஹாருக்குச் சென்று ஆப்கானியர் பலத்தை முற்றிலும் அடக்கல்.

ஆப்கானியரின் பலம் இன்னும் முற்றிலும் அடங்கின பாடில்லை. அவர்கள் பீகாரில் வலிமையுற்றுச் செருக்கித் தம் மனம் போனபடி ஆட்சி புரிந்து வந்தனர். சக்கரவர்த்தி இராஜ புத்திரருடன் சண்டையிட்டு வந்ததே அவர்களுக்கோ ரநுகூலமாயிற்று. அவர் பாபரைப் பொருட்படுத்தவே யில்லை. இதனைக் கண்ட பாபர் சாண்டெரியிலிருந்து பீகார் நோக்கிக் கீழ்த் திசை வழியாகத் தன் படையைச் செலுத்திக் கொண்டு வந்தான். அவனது வரவினை யறிந்து ஆப்கானியர் கானூஜிலிருந்து விலகிக் கங்கை நதியின் மறுகரையிலிருந்து பாபரின் சேனையை எதிர்க்கத் தயாராயிருந்தனர். பாபர் எதிர்க்கரையை அடைந்து பகைவர் கங்கையின் அக்கரையில் இருத்தலை யறிந்து அந்நதியில் ஓரணை யிடுமாறு தன் படைவீரர்க்குக் கட்டளை யிட்டான். ஆப்கானியர் முகலாயரின் முயற்சியைக் கண்டு நகைத்து பாலங் கட்டுவோரைத் தாக்கத் தொடங்கினர். பாபர் தன்னுடனிருந்த துப்பாக்கி வீரரைப் பகைவர்மீது வெடி தீர்த்துச் சுடும்படி கட்டளை யிட்டான். அதனால் ஆப்கானியர் எண்ணியது பலிக்கவில்லை. பாலங் கட்டுவோரின் வேலை யாதொரு விக்கினமுமின்றி நிறைவேறியது. * உஸ்தத் ஆலி திக்காஸி என்னும் பெரிய பீரங்கியை அந்தத் தினத்தில் பதினாறு முறை பிரயோகித்தான். மார்ச்மீ 13உ பாலத்தைக் கட்டி முடித்தனர். காலாள் வீரரிற் சிலரையும், பஞ்சாப் படைவீரரையும் அப்பாலத்தின் வழியாக அனுப்பிப் பகைவர்களோடு போர் புரியும்படி பாபர் கட்டளை யிட்டிருந்தான். அடுத்த மூன்று தினங்களில் சக்கரவர்த்தியின் சைந்யம் முழுவதும் கங்காநதியின் அக்கரையிற் போய்ச் சேர்ந்தது. பகைவர் தீரத்தோடு சண்டையிட்டும் தோல்வி

* இந்நாட்டில் பதினாறு முறை பீரங்கியை ஒரு தினத்தில் முதன் முதல் பிரயோகித்தது இச்சந்தர்ப்பத்திலேதானென் றறிக.

யடைந்து அயோத்திவரையில் பின்னுக்குச் செல்லவேண்டிய தாயிற்று. ஆப்கானியரிற் கொலையுண்டோர் அளவிறந்த வர். முகலாயர் ஆப்கானியர் பலரைக் கொன்றபின் எஞ்சிய சிலரைக் கைதிகளாக்கி அவருடைய பொருள் முழுவதையும் கவர்ந்தனர். மழைகாலங் குறுகலும் பாபர் ஆப்கானியரின் பலத்தை ஒடுக்கி ஆக்ரா நகர் நோக்கிச் சென்றான்.

பாபர் ஆக்ராவை நகராக்கியது.

பாபர் காலத்தில்தான் ஆக்ரா தன் பழய நிலையிற் சிறிது மாறி நகராகியது. ஓடும் நீரைக் கண்டால் பாபருக்குக் களிப்பு மிகும். அவன் அநேக கிணறுகளைத் தோண்டுவித்தான். யமுனா நதியை யடுத்த புளியமரத் தோப்பின் நடுவில் குளங்கள் பல வெட்டி அவற்றைச் சுற்றிலும் ரோஜா, மல்லிகை, முல்லை முதலிய பலவகை மலர் தரும் செடிகளை அழகுபெற நட்டு வளர்த்தான். சலவைக் கல்லாற் சமைந்த கூடங்களோடும், ரோஜா மலர் வேய்ந்த நல்ல மளிகளோடுங் கூடிய சார்பாக் என்னும் அழகிய அரண்மனையில் பாபர் வசித்தான். அம்மாளிகையின் புது வனப்பினைக் கண்டு வியப்புற்ற இந்தியர் அதற்குக் காபூலென்று பெயர் கொடுத்தனர்.

மாமூத் லோடி ஆப்கானியரின் உதவியால் அரசு பெற முயன்று பாபரால் தோல்வி யுறுதல்.

பாபர் கவலையற்று ஆக்ராவில் வெகு நாள் இருக்க முடியவில்லை. பீகாரி லிருந்த ஆப்கானியரின் துடுக்கு இன்னும் அடங்கவில்லை. சுல்தான் இப்ராஹிமின் சகோதரனை மாமூத் லோடி என்பவன் பீகாருக்கு வந்து பாபருக்கு விரோதமாகக் கிளம்புவதற்குப் படைகளைத் திரட்டிக்கொண் டிருந்தனன். ஆப்கானியர் பலர் அவனோடு சேர்ந்து கொண்டனர். ஜான்புரியிலும், பீகாரிலுமிருந்த ஆப்கானியர் யாவரும் ஒன்று கூடிப் பாபரின் அதிகாரத்தைப் போராலழித்து மாமூத் லோடிக்குப் பட்டஞ்சூட்டத் தீர்மானித்தனர். பாபர் சிந்து நாட்டின் மீது சென்று அந்நாட்டினரைச்சுவாதீனப்படுத்துவதற்காகத் தோல்புரி வழியாகச் சென்று கொண்டிருக்கையில் பீகாரில் ஆப்கானியர் தனக்கு

விரோதமாகக் கிளம்பிச் செய்யும் முயற்சிகளைப்பற்றிக் கேள்வியுற்றான். உடனே அவன் ஆக்ராவுக்குத் திரும்பித் தன் படைகளைப் போருக்குத் தயாராக்கினான். ஆப்கானியர் படையில் லக்ஷம் வீரர் அடங்கி யிருந்தனர். ஆயினும் அவர்கள் பாபர் தம்மை நோக்கிப் படையுடன் வருவதைக் கேள்வியுற்றதும் ஒற்றுமை குலைந்து பிரிந்து போயினர். டெல்லிப் பட்டத்தைப் பெற விரும்பிய லோடி பீகாரி னின்று மோடி சூனார் கோட்டையை அடைந்து அதை முற்றுகை யிட்டான். ஷேர்கான் வாரணாசியிலிருந்து தப்பி யோடினான். பாபர் பக்ஸார் கோட்டையை நோக்கி விரைந்து சென்றனன். அப்போது ஆப்கானியர் பலர் பாபரைத் தாமாகவே யடைந்து அவனுக்குப் பணிந்தனர். தலைவர்கள் அடங்கிவிடவே மாமூதும் வேறு வழியறியானாய்ப் பங்காளம் சென்று ஆங்கிருந்த சைந்யத்தின் உதவியை நாடினான்.

பாபர் வங்காளத் தோடு சண்டை யிடுவதற்குச் செய்த ஏற்பாடுகள்.

வங்காள இராஜ்யம் பாபரின் ஆட்சிக்கு உட்படாமல் சுவாதீனப்பட்டிருந்தது. அதைச் சென்று கைப்பற்றவேண்டுமென்னும் எண்ணம் பாபருக் கிதுகாறும் உதித்ததில்லை. தன்னுடன் தோழமை பூண்டு வேறு விஷயங்களில் தலையிட்டுக்கொண்டு தனக்கு அவர்களால் உபத்திரவம் நேராதவரையில் சக்கரவர்த்தி வங்காளத்தினிடம் பகைமை கொண்டதில்லை. ஆயினும், இப்போது தனக்கு விரோதமாகக் கிளம்பிய வைரிகள் அதைத் தமக்குப் புகலிடமாகக் கொண்டு அங்குச் சென்றிருந்தமையால் பாபர் சும்மாவிருக்கக்கூடவில்லை. ஜான்பூரிலிருந்து கிடைத்த இருபதினாயிரம் வீரரையும் தன்னுடன் சேர்த்துக்கொண்டு பாபர் கோக்ரா வழியை அடைத்து நின்ற வங்காளியர்களைப் போரில் வென்று அப்பாற் செல்லத்தீர்மானித்தான். வங்காளியர்கள் சிறந்த துப்பாக்கி வீரர்களென்று பிரசித்தி யடைந்திருந்தனர். மேலும், வங்காளியரின் சைந்யம் மிகவும் பெரியதா யிருந்ததோடு போர் முறை யறிந்த சிறந்த வீரர்களை யுடையதுமா யிருந்தது. ஆகவே, பாபர் அவர்களையடக்

குவதற்குப் பலமான ஏற்பாடுகளைச் செய்தான். இரண்டு நதிகட்கு மிடையேயுள்ள ஒருயர்ந்த திட்டில் உஸ்தத் ஆலி தனது பீரங்கிக் குண்டுகளையும், சுழன்று தாக்கும் வெடி கருவிகளையும் அமைத்துக் கோக்ராவின் கீழ்க் கரையில் தனது துப்பாக்கி வீரர்களை நிறுத்தி யிருந்தான். இரண்டு நதிகளும் சந்திக்கு மிடத்திற்குச் சற்றுக் கீழ்ப்புறத்தில் முஸ்டாபா தனது குண்டுகளையும், துப்பாக்கி வீரர்களையும் நிறுத்திப் பகைவரைப் பக்கங்களில் சென்று தாக்குவதற்குச் சித்தமா யிருந்தான். பிரதான சேனைப் பகுதியை ஆறு பிரிவுகளாகப் பிரித்து அவற்றுள் நான்கினைச் சக்கரவர்த்தியின் குமாரனை ஆஸ்காரியின் தலைமையின் கீழ்க் கங்காநதியின் வடபுறமாகச் செல்லும்படி சக்கரவர்த்தி திட்டம் செய்திருந்தான். இப் படைவீரர் கோக்ராநதியைப் படகுகளின் மூலமாய்க் கடந்து சத்துருக்களை வளைத்துக்கொள்ள வேண்டுமென்றும், உடனே துப்பாக்கிப்படையும் காலாட்படையும் அனுப்பப்படு மென்றும் கூறி வீரர்களை உற்சாகப்படுத்தி யுத்த முனைக்கு அனுப்பினார்கள். ஐந்தாவது பிரிவினுக்குப் பாபரே தலைமை பூண்டான். அவன் இருநதிகளும் சந்திக்கு மிடத்தில் நிறுத்தப்பட்டிருந்த உஸ்தத் ஆலியின் பீரங்கிப் படைக்குத் துணைபுரிந்து இரவில் அவர்களையும், அந்நதியையுங் கடந்து செல்லத் தீர்மானித்தான். ஆறாவது பிரிவினைக் கங்காநதியின் வலக்கரையில் துப்பாக்கி வீரரோடு நின்று கொண்டிருந்த முஸ்டாபாவுக்குத் துணை புரியும்படி அனுப்பினான்.

வங்காளியர் மீது வெற்றி; ஆப்கானியர் சிதறியோடுதல்

1529ஆு மேமீ 2, 3-ம் தேதிகளில் இவ்விரண்டு சேனைப் பகுதிகளும் கங்கையைக் கடந்து செவ்வாய்க் கிழமையன்று கோக்ரா நதியை நோக்கிச் சென்றன. அந்நதியில் தமது கலங்களில் சென்றுகொண் டிருந்த வங்காளியர்களை நோக்கி உஸ்தத் ஆலி குண்டுகளைப் பிரயோகித்துக் கொண்டிருந்தான். இடையில் ஆஸ்காரி தன் சேனைகளுடன் கோக்ரா நதியைத் தாண்டிய செய்தி கிடைத்தது. மேமீ 6உ வியாழக்கிழமை காலையில் யுத்தங்

தொடங்கியது. வங்காளியரின் சேனை அஸ்காரியை நதியின் கரையிற் சந்திப்பதற்காக முன் நோக்கி வந்துகொண்டிருந்தது. உடனே பாபர் தனது ஐந்தாவது ஆறுவது பகுதிகளிலிருந்த படைவீரர், நீந்தியோ, படகுகளிலோ, நாணற் கட்டுக்களை யாதாரமாகக் கொண்டோ எவ்விதமாயாவது நதியைக் கடக்க வேண்டுமென்று அவர்களுக்குக் கட்டளையிட்டான். அப்போது அவனும் அவ்வீரரும் கொண்டிருந்த மனவுறுதியையும் தீரத்தையும் இத்தன்மையன வென்று சொல்லிமுடியாது. சக்கரவர்த்தியின் கட்டளையை அவ்வீரர்கள் நன்றாய்ச் செய்து முடித்தார்கள். பகைவர்களை முற்புறத்திலும், இருமருங்கிலும், பின்புறத்தும் ஆவேசத்தோடு எதிர்த்துப் போர்புரிந்தனர். சத்துருக்கள் சக்கரவர்த்தியின் திறமையையும், அவன் செய்த ஏற்பாட்டினையுங் கண்டு வியப்புற்றுச் செயலற்று நாலாபக்கங்களிலும் சிதறியோடியொளித்தார்கள். பாபர் ஜயசீலனாய்த் தனது வீரர் தன்னை ஆரவாரத்துடன் கொண்டாடித் துதிக்க யுத்தகளத்தினின்றும் தனது படைகளைக் கூட்டிக்கொண்டு திரும்பினான். ஆப்கானியரின் செருக்கும் இதனோடு முடிவுக்கு வந்ததென்று சொல்லத் தடையில்லை. பாபர் வங்காளத்துடன் ஒருடன்படிக்கை செய்துகொண்டு ஆக்ராவுக்கு வெற்றியுடன் திரும்பினான். மூன்று யுத்தங்களில் பொருது பாபர் வடஇந்தியா முழுவதையும் தனதாட்சிக்கு உட்படுத்திக் கொண்டான்.

பாபரின் ஆட்சித்திறம்; நிலவருமானம்.

இதுதான் பாபரின் பராக்கிரமத்தை யறிவிக்கும் முடிவான செயலாகும். மிகுந்த ஒன்றரை வருஷ காலமும் அவன் ஆக்ரா நகரத்திலேயே தனது வாணாளைக் கழித்தான். அவன் இராஜ்யங்களைப் போரால் வென்றனனேயன்றி அவற்றைக் கட்டியாண்டு இராஜரிகம் செய்வதற்குரிய நிலைத்த ஏற்பாடுகளைச் செய்யமுடியாது போயிற்று. அவன் தனது காலத்தையெல்லாம் பெரும்பாலும் யுத்த பூமியிலேயே கழிக்கவேண்டி வந்தது. அதனால் அவன் கவர்ந்த நாடுகளிற் பெரும்பாலன பேருக்குமட்டில் அவ

னுக்கு ஆதீனப்பட்டிருந்தன. அவனுடைய ஆட்சி சேனைப் பலத்தை யொட்டியே வன்மைபெற்றிருந்த தாதலின் இராஜரிகமுறைமை சரியாய்க் கவனிக்கப் பட்டதென்று சொல்வதற்கில்லை. ஆயினும், பாபர் தனது நேர்ப்பார்வையின்கீழிருந்த மாகாணங்களில் சிற்சில ஏற்பாடுகளைச் செய்தான். அவன் நாட்டினைப் பற்பல பாகங்களாகப் பிரித்துத் தனது உத்தியோகஸ்தர் வசத்திலும், ஜாகீர்தார்கள் வசத்திலும் ஒப்புவித்தனன். அந்த உத்தியோகஸ்தரும் ஜாகீர்தாரும் கிருஷிகரிடமிருந்து நிலத்தீர்வையையும், வியாபாரிகளிடமிருந்தும், வர்த்தகரிடமிருந்தும் கட்டணங்களையும், ஹிந்துக்களிடமிருந்து தலைவரியையும் வசூலித்துச் சேர்ந்த தொகையில் ஒரு பகுதியைச் சக்கரவர்த்திக் குரிமையாக்கி அவனுக்குப் போர்க்களத்துத் துணைபுரிந்து வந்தனர். ஆயினும், சில ஜாகீர்தார்கள் வலிமைபெற்றுச் சக்கரவர்த்திக்குப் பேருக்குமட்டில் சுவாதீனப்பட்டிருந்து தமக்குக்கிடைத்த வரும்படி முழுவதையும் தாமே அநுபவித்துச் சுயேச்சையாய் அதிகாரஞ் செலுத்திவந்தனர். எர்ஸ்கின் துரை எழுதுவதுபோல் இந்நாடு நிலைத்த ஒழுங்கான செங்கோன்மையின்றி ஆங்காங்குப் பல சிறு கூட்டங்களையுடையதாய்ப் பேருக்குமட்டில் சக்கரவர்த்தியின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. எல்லைப்புறப் பிரதேசங்களிலும், மலை நாடுகளிலும் வசித்துவந்த குடிகள் உண்மையில் சக்கரவர்த்திக்குப் பணிந்திலர். மேற்கே சிந்துநாட்டிலும், கிழக்கில் பீகாரியிலும் பாபரின் செல்வாக்கு ஓங்கியதேயில்லை. ஆயினும், பீரா, லாகூரிலிருந்து பாஹ்ரய்க், பீகார்வரையிலும் கிழக்குமேற்காய் வியாபித்துள்ள நாடுகளும், சையால்கோட் முதல் ரான்டம்பார் வரையில் வடக்குத் தெற்காய் வியாபித்துள்ள நாடுகளும் சேர்ந்து நிலத் தீர்வையாக ஐம்பத்திரண்டு கோடி டங்காக்கள் அல்லது டாம்கள் (அதாவது, இருபத்தாறு லக்ஷம் பவுன்) செலுத்தி வந்தனவென்று பாபரின் ஜீவிய குறிப்புக்களினின்றும் வெளியாகின்றது. ஏறக்குறைய நூறு வருஷங்களுக்கப்பால் அதனினும் பரந்த விஸ்தீர்ணமுள்ள நாடுகளிலிருந்து ஆக்பர் சக்கரவர்த்தி நிலத்தீர்வையாக ஒரு கோடியே எண்பது லக்ஷம் பவுன் பெற்று வந்ததாக ஏற்படுகிறது.

பாபர் ஹிந்துஸ்தானத்தைப் பற்றிக் கோண்டிருந்த அபிப்பிராயம்; பாபரின் சுதேசாபிமானம்.

பாபர் தனது அந்திய தசையின் இறுதி வருஷத்தில் வேறு வேலை யொன்றுமில்லாம லிருந்த ஒய்வு நேரங்களில் ஹிந்துஸ்தானத்தின் நிலைமையை விவரித்து எழுதியிருக்கிறான். அதைக் கவனித்துப் படிப்போருக்கு இயற்கைப் பொருள்களில் ஆசையும், பொருள்களை ஆழ்ந்து உற்றுநோக்கி'' அவற்றினியல்பையறியும், அவலும் பாபருக்குமிகுதியும் விசேஷித்து இருந்தமை புலனும். தான் வென்ற புது நாட்டில் அவனுக்கு விருப்பமும் ஆசையுந் தோன்றவேயில்லை. அவன் எழுதுகிறான் :—“ ஹிந்துஸ்தானத்திலுள்ள நாடுகளும் நகரங்களும் கண்களைக் கவரும் பான்மையனவல்ல. அது அந்தங்கெட்டு ஒரே மாதிரியமைந்துள்ள நகர்களையும் நிலங்களையுங் கொண்டுள்ளது. தோட்டங்களுக்கு வேலிகளும் சுவர்களுங் கிடையாது. அது பெரும்பாலும் ஒன்றும் பயிரிடாத வெட்டவெளியாய் நிற்கிறது.” காபூலில் மலைக்காட்சி விநோதங்களையும், பர்கானாவின் பழத்தோட்டங்களின் சிறப்பையுங் கண்ட கண்களுக்கு இந்திய நாடு விகாரமாகத் தோற்றிய தோரதிசயமன்று. அவன் பின்னும் எழுதுகிறான் :—“ ஹிந்துஸ்தானம் விநோதங்களற்ற ஒரு நாடு. ஜனங்கள் பார்வைக்கு அழகாயிராமல் விகாரமான தோற்றத்தோடுங் கூடியிருக்கின்றனர். ஜனசங்க வாழ்க்கையாலுண்டாகும் இன்பமின்னதென்பதை அவர்கள் ஒரு சிறிதும் அறிந்திலர். அவர்களுள் மேதாவிகளாய்ச் சிறப்புற்றோரும், மதியூகிகளென்று புகழ்படைத்தோரும் ஒருவருமிலர். அவர்கள் ஒருவருக்கொருவர் மரியாதையாய் நடந்துகொள்ளும் வகையினையும் அறிந்ததில்லை. அவர்களுக்கு ஜீவகாருண்யமும், சகோதர பாவமுங் கிடையா. அவர்கள் கைத்தொழில் வன்மையும், சில்ப ஞானமும் சிறிதும் அறியாதவர். இந்தியாவில் சிறந்த குதிரைகளும், நேர்த்தியான பழங்களும், சுத்தத்தண்ணீரும், நல்லுண்டிகளும், தகுந்த வசதிகளோடு கூடிய நீராடு துறைகளும், கலாசாலைகளும், மெழுகுவர்த்திகளும் காண்பது மிகவுமருமை.”

பாபர் இந்தியாவில் இன்னுஞ் சில்லாண்டுகள் தங்கிக் குடிகளோடு நெருங்கிப் பழகியிருந்தால் மேற்கூறியபடி எழுதியிருக்க மாட்டானென்பது திண்ணம். இந்நாட்டில் சில நன்மைக ளிருந்தன வென்பதை அவன் ஒத்துக் கொள்ளாமலில்லை. மழைக்காலத்தில் இந்நாடு வாசத்துக் கேற்ற சீதோஷண நிலையோடு கூடியதென்றும், கூலிக்காரர் வேண்டியபேர் இங்குக் கிடைப்பரென்றும் அவன் குறிப்பிடு கின்றான். ஆயினும், ஹிந்துஸ்தானத்தின் செல்வ வள மொன்றே அந்நாட்டின் சிறப்புக்குக் காரணமாய் அதற்குப் பெருமையளிக்கக் கூடியதென்று அவன் அபிப்பிராயப்பட் டான். 'தங்கமும் வெள்ளியும் நிறைந்த ஒரு பணக்கார தேசம்' என்று பாபர் ஹிந்துஸ்தானத்தைப்பற்றிக் கூறி யிருக்கிறான். அவன் ஆக்ராவிற் செங்கோல் செலுத்தியிருந் தனனெனினும், அவனது மனம் குளிர்ந்த நீரும், பழங்களும் நிறைந்துள்ள தன் தாய்நாடாகிய காபூலின் வளங்களைப் பற்றி நிற்க, தான் ஆதியில் காபூல் நதிக்கரையில் ஆநந்த மாய்த் தனது இளமையைக் கழித்ததுபோல் முதுமையி லும் இன்பமாய்க் காலத்தைக் கழிக்கத் கொடுத்துவைக்க வில்லையே என்று இரங்கி வருந்தியதுண்டு.

பாபரின் வியோகம்.

வாலிபத்தில் அவனுக்கு இருந்த பலம் ஒடுங்கிவிட்டது. சதா அலைந்து திரிந்து அமைதியற்றுப் போர்முனையில் சண்டைசெய்தும், அடிக்கடி காய்ச்சல் நோயால் வருந்தியும், இடையில் அளவுக்குமீறி மதுபானம் செய்தும், கஞ்சா குடித்தும் பாபர் தனது தேகாரோக்கியத்தைக் கெடுத்துக்கொண்டான். ஆயி னும், எக்காலத்தும் அவன் தனது ஊக்கத்திலும், உற்சாகத் திலும், வன்மையிலும் குறைந்ததில்லை. அவன் தனது கரங் களிரண்டிலு மிரண்டு மனிதர்களைத் தாங்கிக்கொண்டு கோட்டை மதிலைச்சுற்றிப் பள்ளங்களில் குதித்துக் குதித்து ஓடுவான். 1529வரு மார்ச்சீ அவன் எழுதுவதாவது :— "நான் விநோதார்த்தமாகக் கங்காநதியில் நீந்திச்சென்றே முப்பத்து மூன்று பாய்ச்சல்களில் அக்கரையை யடைந் தேன். அங்குப் போனதும் சில நிமிஷங்கள் வரை ஸ்வாசத்

திற்காகத் தாமதித்தேன். உடனே தண்ணீரிலிறங்கி நீந்தி நான் முதலில் இருந்த கரையை அடைந்தேன். கங்கா நதியையே யன்றி நான் கண்ட ஒவ்வொரு நதியையும் நீந்தியே கடந்திருக்கிறேன்.' அவன் குதிரையேறிச் சவாரி செய்கையில் ஒரு சிரமமுமின்றிப் பல நாட்கள் குதிரைமீதே வேகமாய்ச் செல்வான். சில சமயங்களில் தினம் ஒன்றுக்கு எண்பது மைல்கள்வீதம் புரவியேறிச் சவாரி செய்வான். இவ்வளவு திடமுடையவனாயிருந்தும் அவன் திடீரென்று தனது நாற்பத்தெட்டாவது வயதில் 1530ஆம் டிசம்பர் மீ 26உ ஆக்ராவிலுள்ள தனதழகிய அரண்மனையில் தேகவியோகமானான். அவன் அரச பதவியை வகித்த முப்பத்தாறு வருஷகாலமும் பட்ட கஷ்ட நிஷ்டூரங்கள் இவ்வளவென்று சொல்லிமுடியாது. தான் மரித்தபின் தன்னைக் காபூலில் ஒரு குறித்தவிடத்தில் சமாதி படுத்தும்படி அவன் கேட்டுக்கொண்டனன். அதற்கேற்ப நறுமணங் கமழும் பூஞ்செடிகள் நிறைந்ததும், குளிர்ந்த நீரோடை பாயப்பெற்றதுமான ஓரழகியவிடத்தில் மலையடுத்த தோட்டமொன்றில் அவன் தன் கல்லறையில் உலக சிந்தனையற்றுச் சாந்தியடைந்து விளங்குகிறான். அவன் வழித்தோன்றலொருவன் அவனுடைய ஞாபகார்த்தமாகக் கட்டிய மசூதியில் வந்து ஜபம்பண்ணிக் கடவுளை இறைஞ்சவும், அவனுடைய கல்லறையைத் தரிசிக்கவும் ஜனங்கள் கூட்டங் கூட்டமாய் அங்குச் செல்வதை இன்னும் காண்கிறோம்.

---

## II. ஹுமாயூன் (1530-1556)

ஹுமாயூனின் துணிசயம்.

தனது குமாரன் எளிதில் அரசுபுரியும் நிலைமையில் இராஜாங்கத்தை விட்டுப் பாபர் மரிக்கவில்லை. 1530-ம் ஆண்டினில் பாபர் இறக்கும்போது ஹுமாயூனுக்கு வயது இருபத்துமூன்றே; எனினும், அவன் போதுமான போர்த் திறமையும் அநுபவமும் பெறுமலில்லை. தந்தை புரிந்து வந்த இந்திய யுத்தங்களெல்லாவற்றிலும் ஹுமாயூனே சேனைத்

தலைமை வகித்தான். அன்றியும், ஹிந்துகுஷ் மலைகட்கப் பாலுள்ள படக்ஷான் பிரதேசத்தை தந்தையின் அநுமதி பெற்று வெகு திறமையோடு மாட்சி புரிந்து வந்தான். பாபருக்குத் தனது குமாரனிடத்தில் மிகுந்தவாஞ்சையுண்டு. சமயம் வாய்க்கும்போதெல்லாம் அவன் குமாரனை அருகி லழைத்து இராஜரிக முறைகளையும், நன்னடக்கையின் மேன் மையையும் கூறிப் புத்தி புகட்டுவான். பாபர் ஹுமா யூனைப்பற்றி எழுதுகிறான் :—'அவனது சந்நிதானத்தை யடைந்தோரின் மனம் ரோஜாவின் அரும்புகள்போல் மலரும் ; கண்ட கண்கள் ஒளி வீசும் ; அவனது மதுரமொழி கள் உள்ளத்தை யுருக்கு மாட்சி பொருந்தியன. மனிதப் பிறவியின் நோக்கமும் பயனும் இன்னதென்று அறிந்து அப்பயனை முற்றிலும் அவன் பெற்றிருந்தான்' உண்மை யாகவே, ஹுமாயூன் தீரன் ; யாவர்க்கு மன்பன் ; பிறரிடம் விஹிதனாய் நடந்தொழுகுபவன் ; சுவைப்படப் பேசிப் பிறரை மகிழ்விக்குமாற்றல் வாய்ந்தவன் ; தனது தந்தை யைப்போலவே குண நலம் நிறைந்தவன் ; நிபுணன் : கபட மற்றவன் : கருணையோடுங் கூடியவன் ; இடுக்கணுற்ற விடத்துத் தறுகணாளன் ; முயற்சியு மூக்கமுங் கைவிடாத வன் ; வரையாது வழங்கும் வள்ளன்மையும் பெரு நோக்கு முடையவன். இவ்வருங் குணங்கள் அவனிடம் பொருந்தி யிருந்தும் கார்ய நிர்வாகத்தில் மனவுறுதி யற்றவன் ; சலித்த சுபாவமுடையவன். அதனால் அவன் ஒரு காரியத்தில் நிலைத்து உழைக்குந் திடமற்றிருந்தான். அவன்திறத்து வெற்றி சிறிது கூடுமாயின் அதனை யொட்டியே பொருது பூர்ண ஜயம்பெறுமல் அவன் அந்தப்புரஞ் சென்று இன்ப வெள்ளத்திடை மூழ்கிக் காலத்தை வீணே கழிப்பான். அச் சமயத்தில் பகைவர் தனது அரண்மனையைச் சூழ்ந்து தாக்கி னும் கவலையற்றிருப்பான். இயற்கையில் அவன் கருணை யோடு கூடியவன். ஆகையின் பகைவரைத் தண்டிக்க வேண்டியபோது தண்டியாமல் மன்னித்துவிடுவான் ; போர் முனையில் சென்று எதிரிகளைத் தாக்க வேண்டிய காலத்து விருந்துண்டு பாட்டுக்கச்சேரியில் இன்புற்றிருப்பான். சதா தோழர்களோடிருந்து உல்லாசமாய்க் காலத்தைக் கழிப்பதி

லேயே நாட்டம் மிகுதியுமுடையவன். அவனது குணங்களைச் சிலாகித்து அவனை விரும்பாதவரே கிடையாது. ஆயினும், அவன் பிறரைக் கட்டியாளும் சிறப்பினை யடையவில்லை. அவனது நண்பர் அவனை மிகவும் விரும்பி அவனுடன் பழகிப் பல நன்மைகளைப் பெற்றனர். உயர்குலத்துதித்த ஒரு துரை மகனிடம் காணப்படும் குணங்கள் யாவும் அவனிடம் பொருந்தி யிருந்தனவேனும் சக்கரவர்த்தியாய் நாட்டினை ஒரு குடைக் கீழாண்டு பெருமை யடைதற்குரிய குணங்களைச் சிறிதும் பெற்றிலன். ஹுமாயூன் என்னும் பெயருக்கு அதிர்ஷ்டசாலியென்பது பொருள்; ஆயினும், இந்தியாவில் அரசாண்ட முகல் மன்னருள் அவனினும் அதிர்ஷ்டவீனன் ஒருவரும் இல்லை.

ஹுமாயூன் ஆட்சி பெற்ற போது நாட்டின் நிலைமை.

ஹுமாயூன் பட்டத்திற்கு வந்த காலத்தில் இராஜ்யம் மிகவும் அபாயகரமான நிலைமையில் இருந்தது. அரசனுக்குச் சிறந்த படைத் துணையும் திடமனமும் இருந்தாலன்றி அரசுரிமையை இழவாமல் நிலை நிறுத்துதல் மிகவும் அருமை. விடாமுயற்சியும், போர்த்திறனும் அபரிமிதமாகப் பெற்றிருந்தாலன்றி நாட்டாண்மை வகித்தல் எளிதன்றும். பாபர் ஹிந்துஸ்தானம் முழுவதும் சுவாதீனப் படுத்தியதில்லை. இப்போது ஐக்கிய மாகாணமென்றும், வட மேற்கு மாகாணங்களென்றும் வழங்கி வரும் பிரதேசங்களை மட்டில் பாபர் தனக்கு அடங்கும்படி செய்தான். அவ்விடங்களிலும் அவனுடைய அதிகாரம் நிலைத்திருக்குமென்று சொல்வதற்கில்லை. கிழக்கில் வங்காளமும், தெற்கில் சிறப்புற்று விளங்கிய மாளவமும், கூர்ஜரமும் தனியரசு பெற்று விளங்கின. இராஜபுதனத்துள்ள வீரர்களோடு பாபர் பொருதானெனினும், அவர்களது வீரஞ் சிறிதும் குன்றியதில்லை. சுயேச்சையைப் பெற்று முகம்மதியரின் செல்வாக்கை யொழித்தற்குச் சமயம் எப்போது வாய்க்குமென்று ஆவலோடு எதிர் நோக்கி யிருந்தனர். ஆப்கானியத் தலைவர் பலர் ஆங்காங்கு ஆதிபத்தியம் பெற்று, டெல்லியை முன்போலவே கைக்கொள்வதற்கு ஆவல்

மிகுந்திருந்தனர். பீகாரில் ஆப்கானிய வாச பரம்பரையில் எவனேனுமொருவன் டெல்லி யரசைப் பெறுதற்கு விழைந்து ஹுமாயூனுக்கு விரோதமாகக் கிளம்பினால் அவனுக்குத் துணைபுரிந்து போராடப் பலர் தயாராயிருந்தனர். ஆகையால் தன் தந்தை தனக்காக விட்டு மரித்த நாட்டிலும் ஹுமாயூனின் செல்வாக்கு ஓங்காதபடி எங்கும் கலகங்களும் குழப்பங்களும் பரவி யிருந்தன.

காம்ரானின் செல்வாக்கும் ஹுமாயூனின் வலியின்மையும்.

அவனது குடும்பத்திலுள்ளோரே ஹுமாயூனிடம் பகைமைகொண்டு அவனுக்கு விரோதமாகச் சூழ்ச்சித்து வந்தனர். பாபர் மரிக்கையில் ஹுமாயூனை அருகே யழைத்துத் தனது மற்றைப் புதல்வரைச் செவ்வையாய்க் கவனித்துவருப்படி கட்டளையிட்டுக் கைபிடித்து அவர்களை இவன் வசம் ஒப்புவித்தான். ஹுமாயூனைப்போல் சகோதரர்களிடத்து அன்பும் பொறையுங் கொண்டிருத்தல் மிகவும் அருமை. அப்படியிருக்க அச்சகோதரர் அவனுக்குச் சதா இன்னல் இழைத்துக் கலகித்து வந்தனர். அவனுடைய அன்பிற்கு அச்சகோதரருள் ஒருவனேனும் பாத்திரனல்லன். பாபர் காலத்திலேயே அவனது இரண்டாவதுகுமாரனான காம்ரான் என்பவன் காபூலுக்கு அதிபனானான். அவன் ஹுமாயூனின் ஆட்சிக்கு உட்பட்டிருப்பதாக வாயாற் சொல்லி வந்தனனேனும் மெதுவாய்த் தனது பதவியை உயர்த்திக்கொள்ள விரும்பிப் பஞ்சாபின் மேற் படையெடுத்து வந்து அதனைக் கைப்பற்றிக் கொண்டான். தம்பிகளினிடத்தில் பக்ஷமும் அன்பும் நிறைந்த ஹுமாயூன் காம்ரானிடம் இதற்காக மனஸ்தாபப்படவேயில்லை. பஞ்சாபைப் பறிகொடுத்தபின் தன் பலம் முற்றும் சிதறுமென்பதை அவன் சிறிதுங் கவனிக்கவில்லை. பஞ்சாபில் போர்த்தொழிலில் வல்ல வீரர் பலர் குழுமியிருந்தமையின் டெல்லிச் சக்கரவர்த்திகள் பஞ்சாபிலேயே தம் சேனையை வகுத்து வீரரைத் திரட்டிச் சேர்ப்பது வழக்கமாயிருந்தது. ஆப்கானிஸ்தானம், ஆக்ஸஸ் நதிப் பிரதேசம் முதலிய மலை நாட்டு வீரர்களே முகம்

மதியாது படைக்குப் பலங் கொடுத்து சக்கரவர்த்திக்குத் துணைபுரிந்து வந்தனர். பஞ்சாப் தனது தம்பியின் வயப் பட்டதும் ஹுமாயூனின் பலம் முற்றிலும் ஒடுங்கிய தென்று கூறத் தடையில்லை. தன் கைக் கீழிருந்த படை வீரர் அநுபவமில்லாதவர். சண்டைகளிற் சலித்துச் சோர்வுற்றவராகையின் அவர்களிடமிருந்து ஹுமாயூன் அதிகமாய் ஒருதவியும் எதிர் பார்க்கக் கூடவில்லை. சண் டையில் மரித்த பலர்க்குப் பதிலாகப் புதுவீரரைப் பெறு வது கஷ்டமாயிருந்தது. தன்னுடன் எஞ்சி நின்ற வீரர் சிலரும் போர்முனையை வெறுத்துச் சுகமாய்ப் பெண்டு பிள்ளைகளுடன் நாட்டில் செல்வம் படைத்துச் சுகமனு பவித்தலிலேயே நாட்டம் மிகுதியுமுடையராயினர்.

*ஹுமாயூனின் தோல்விக் காரணம்.*

காம்ரானின் குணங்கள் ஹுமாயூனின் குணங்களி னும் முற்றும் வேறுபட்டவை. அவன் எப் போதும் சுளித்த முகத்தோடுங் கூடியவன். அவன் இரும்பினும் கடிய நெஞ்சினன். அவனை வெல்வது மிகவும் கஷ்டமான காரி யம். **அஸ்காரி, ஹிண்டால்** என்னும் இரண்டு சகோதரர்களும் திறமை யற்றவர்; மனவுறுதியு மற்றவர். அவர்களைக் கொண்டு தமது நிலையை மேம்படுத் திக்கொள்ள நினைத்துக் கலகித்துப் போராடிய தலைவர்க்குக் கருவிகள்போலிருந்து வந்தனர். தமயனுக்கு விரோத மாய் அடிக்கடி கிளம்பித் துரோகம் புரிந்து வந்தார்கள் ஹுமாயூன் ஒரு நொடியில் அவர்களைத் தொலைத்துவிட்டு அமைதியோடு அரசு புரிந்திருக்கலாம். ஆயினும், அவன் அப்படிச் செய்யாது அவர்களிடம் தனக்குள்ள அன்பின் மிகுதியால் அவர்களை மன்னித்துக் கொண்டேவந்தான். அதனால் அவர்கள் துணிவு மிகுந்து மேன்மேலும் அவனை உபத்திரவித்து வந்தனர். ஹுமாயூன் தனக்குத் தானே பகைவனானான். அவன் தானிருந்த நிலைமையைச் சிறிதும் அறிந்திலன். இராஜதந்திரம் வாய்ந்த அரசனாயின் தனது பகைவருள் முக்கியமானவர்களை முதலில் வலியடக்கித் தொலைத்துப் பின் ஒவ்வொருவராக மற்றவர்களைப் போர்

முனையில் எதிர்த்து அவர்களையும் வென்றிருக்கலாம். ஹுமாயூன் அங்ஙனஞ் செய்யாது தனது படையைப் பல சிறு பகுதிகளாக்கி ஒவ்வொரு பகுதியையும் ஓரோரிடத்திற்கு அனுப்பி வைத்தான். சிதறுண்ட வீரர் தமது பலங்குன்றிப் போருக்கஞ்சி யொளிக்கத் தயாராயிருந்தனர். ஒரு பகைவனின் வலியடங்கி, அவன் தனக்குப் பணிந்து, தனது ஆட்சிக்கு உட்படு முன்னரே ஹுமாயூன் தன் சிறு சேனையை வேறொரு பகைவனை யடக்குவதற்கனுப்புவான். தெய்வச் செயலாய் அவனுக்கு எப்போதேனும் வெற்றி கிடைக்குமாயின் போர்முடியு முன்னரே சேனையைத் திருப்பிச் சென்று தன் நண்பரும் பிறரும் சூழ விருந்துண்டு வெற்றி விழவு கொண்டாடி இன்பத்தில் மூழ்கிக் கிடப்பான். அவன் தனது படைகளைப் பிரித்து அதன் தொகையைக் குறைக்காது அதனை ஒருங்கு சேர்த்துப் புது வீரரால் வளம்படுத்திப் போர்முனை சென்றால் அவன் எங்கும் வெற்றி யடைவது நிச்சயம். ஆனால் அவன் அங்ஙனம் செய்யவில்லை. அதனால் அவன் பட்ட துன்பங்கள் இவ்வளவென்று சொல்ல முடியாது. அவனது சைந்யத்திற் பெரும்பாலார் பாபர்காலத்தில் டெல்லியைக் கைப்பற்றி ராணுசங்காவின் திறலொழித்த வீரரேயாம். படைத்தலைமை வகித்தோரிற் பலரும் பாபர்காலத்திற் சிறந்து விளங்கினவரே யாவர். அப்படியிருந்தும், ஹுமாயூன் அவர்களின் தைர்யநாசத்திற்குக் காரணமாயிருந்து தனது மனத் தடுமாற்றத்தாலும், கவலையின்மையாலும் அவர்களுக்கிருந்த நம்பிக்கையும் நாளடைவில் மறையும்படி நடந்துவந்தான். படைத்தலைவர்களின் ஆலோசனையைக் கேட்பது மில்லை; தானேயும் தாமதியாது கார்யங்களை ஆராய்ந்து செய்வது மில்லை. அப்படி யிருந்தும் சைநிகரிற் பலர் அவனிடம் விசுவாசம் மிகுந்து அவனை விட்டுப் பிரியாதிருந்தது ஓர் அதிசயமே!

ஹுமாயூனைச் சுற்றிலும் பகை; ஷேர்கானின் முயற்சி.

அவன் அரசுரிமை வகிக்கையில் மூன்று பகைவர் அவனுக்கு விரோதமாய்க் கிளம்பத் தயாராயிருந்தனர். அவனுடைய தம்பி காம்ரான் வடமேற்கில் பிரபலமடைந்திருந்தான். அவன் தான் தமயனுக்குப் பணிந்தேயிருப்பதாகக்கூறிவந்தமையால் ஹுமாயூன் அவனுடைய இஷ்டப்படியே சுயேச்சையாய் ஆளும்படி அவனை விட்டு விட்டான். கிழக்கில் ஆப்கானியர் பீகாரில் செல்வாக்கை அதிகரித்துக் கொண்டு வந்தனர். டெல்லியிலிருந்து அரசு செலுத்திய லோடி சுல்தானின் சகோதரனொருவன் ஆப்கானியர்க்குத் தலைமை பூண்டு ஹுமாயூனுக்கு விரோதமாகக் கிளம்பி டெல்லி அரசைப் பெறுவதற்கு முயன்றுகொண்டிருந்தான். தெற்கே பஹதூர்ஷா வென்பவன் கூர்ஜாத்திலும் மாளவத்திலும் தலையரசு புரிந்து வந்ததோடமையாது இராஜபுத்திரர்களை எதிர்த்துப் போராடி வெற்றி கொண்டு ஆக்ரா நகருக்கருகே தனது சேனுபலத்துடன் வந்து கொண்டிருந்தான். அவன் மகம்மத் ஸாமான் என்பவனை ஆதரித்து அவனுக்கு டெல்லிப் பட்டத்தை அளிப்பதாக வாக்களிக்க மகம்மதும் தனக்கு டெல்லி யரசாட்சியை வகிக்கும் பாத்தியதை யுண்டென்று சொல்லி வந்தான். கூர்ஜாத்தின் மீது படையெடுத்து பஹதூர்ஷாவின் வலியை முதன் முதல் ஒடுக்குவதா அல்லது ஆப்கானியர் மீது படையெடுத்துச் செல்வதா வென்று ஹுமாயூன் ஆலோசித்து ஒரு முடிவுக்கு வராமல் தாமதித்துக் கொண்டே வந்தான். கடைசியில் பீகாருக்குச் செல்வதே தகுதி யென்று தீர்மானித்து ஹுமாயூன் புறப்பட்டுப் பீகார் நாடேகி மாமூத்லோடியை லக்னௌ என்னுமிடத்திற் சந்தித்த பொழுது 1531-ல் வெற்றி பெற்றுன். போரிற் பலங்குன்றிய ஆப்கானியரைப் பின்பற்றிச் சென்று நன்ருய் முறியடிப்பதற்குப் பதில் ஹுமாயூன் வெற்றி பெற்ருேமென்று களித்து சூணர் முற்றுகையை நடுவில் நிறுத்தி விட்டுக் களத்தினின்றும் திரும்பினுன். ஆப்கானியர் அந்தச் சமயத்திற்குத் தனக்கு அடங்கி விட்டதைக் குறித்து அவன் மிகவும் மனமகிழ்ந்தான். பின்னுல் சூணர்

கோட்டைக்கு அதிபதியாகிய ஷேர்கான் என்பவன் ஆப்கானிய படைகளைத் திரட்டித் தலைமைபூண்டு தன் அதிகாரத்தை விருத்தி செய்து வந்தான். ஷேர்கான் மிகவும் திறமை யுடையவன்; டெல்லி சக்கரவர்த்தியாய் விளங்கவேண்டுமென்னும் பேரவா அவனுக்கு வெகு நாளாய் உண்டு. எவ்வகையாகவாவது சூழ்ச்சி செய்து பட்டத்தைப் பெறுமலிருப்பதில்லை யென்று அவன் தீர்மானித்திருந்தான். அதனுல் தன் முயற்சியில் பிறர் தலையிட்டுக்கொள்ளாதிருக்கவேண்டி அவன் சண்டையை நிறுத்தி ஹுமாயூனுக்குப் பணிந்து விட்டவன் போல் அவனைச் சாந்தப்படுத்தி அவன் ஹிந்துஸ்தானத்தில் வெகு தூரத்துக்கப்பால் சென்று, பின் தன் படையை வலிமையுறச் செய்து போருக்குச் சாயத்தனுன்.

பஹதர்ஷா சித்தூரை முற்றுகை யிட்டு இராஜ புத்திரரை வெல்லல்.

ஹுமாயூன் கூர்ஜர நாட்டு வேந்தனுன பஹதர்ஷாவுக்குப் பயந்தே சூனர் கோட்டையை முற்றுகை யிடுவதை நிறுத்தித் திரும்பி விட்டான். பஹதர்ஷாவும் டெல்லியை எப்படியாவது தன் வயப்படுத்திவிட வேண்டுமென்றே உழைத்து வந்தான். அவனுல் ஏவப்பட்ட சிலர் டெல்லி யரசாட்சியின் உரிமை தமக்கே யுண்டென்று சொல்லிக் கொண்டு போருக்கெழுந்து ஆக்ராவிலும், கலிஞ்சரிலும் தோல்வியுற்றுத் திரும்பி விட்டனர். ஹுமாயூன் லக்னௌவிலிருந்து தனது சேனையுடன் மாளவத்திற்கு வந்தபோது பஹதர்ஷா சித்தூரினின்றும் இராஜபுத்திரர் கோட்டையை முற்றுகையிட்டுக் கொண்டிருத்தலை யறிந்தான். ஹுமாயூன் இராஜபுத்திரருக்குத் துணைபுரிந்து அவர்களின் உதவியைப் பெற்று பஹதர்ஷாவின் சேனைகளை எளிதில் முறியடித்திருக்கலாம். அவன் அப்படிச் செய்யாமல் பஹதர்ஷாவுக்கும் இராஜ புத்திரருக்கும் நடந்த போர் முடியும் வரையில் காத்திருந்தான். முஸ்லாமியர் புறச்சமயிகளாகிய இராஜபுத்திரருடன் போர்புரிகையில் அதில் தான் தலையிட்டுக்கொள்வது தவறென்று அவன் எண்ணி யிருந்தான்.

ஹுமாயூன் இப்படிச் செய்தது பஹதர்ஷாவுக்குப் பெரிய அனுகூலமாய் முடிந்தது. பஹதர்ஷா இராஜபுத்திர வீரரை ஆயிரக்கணக்காய்க் களத்தில் வெட்டிச் சாய்த்தான். பகைவர்க்குப் பணிவதினும் போரில் மரிப்பதே மேலெனக் கருதி இராஜபுத்திரர் ஆவேசங் கொண்டு போர் புரிந்து பகைவர் கத்திக்கு இரையாயினர். இராஜபுத்திர ஸ்திரீகளும் மானமழிந்து வாழ்தற்கஞ்சிப் போர்க்களங் குறுகி வீரர் செறிந்த அக்களத்தே வீழ்ந்து உயிர் முடித்தனர். அப் போரில் இராஜ புத்திரர்களின் சிரங்களும் உடல்களும் பல கூறுகளாகக் குவிந்து கிடக்கக் குருதி வெள்ளம் ஆறுய்ப் பெருகியது. பஹதர்ஷா ஜயசீலனுய்த் திரும்புமளவும் ஹுமாயூன் அக் காட்சியினைக் கண்டு பஹதர்ஷாவின் வீரத்தை மெச்சிக்கொண்டிருந்தான்.

ஹுமாயூன் பஹதர் ஷாவை எளிதில் வெல்லல்

கூர்ஜரத்தார் இராஜ புத்திரரை வென்றவுடன் அப்போராவேசங் குன்றுமுன் ஹுமாயூனை எதிர்க்கத் தொடங்கியிருந்தால் ஹுமாயூனையும் எளிதில் தோல்வியுறச் செய்திருக்கலாம். சித்தூரில் இராஜ புத்திரரை ஆப்கானியர் பீரங்கிப் படையின் உதவியால் எதிர்த்தே வெற்றி கொண்டமையின் பஹதர்ஷா ஹுமாயூனை எதிர்க்கையிலும் துப்பாக்கி வீரரின் சகாயத்தையே நாடினான். ருமிகான் என்பவன் பீரங்கிப்படைக்குத் தலைமைவகித்திருந்தான். அவன் போர்த்துக்கேசியரிடமும், மற்றுமுள்ள ஐரோப்பிய ஜாதியாரிடமும் நன்குய்ப் பழகியிருந்தமையின் துப்பாக்கிகளையும் பீரங்கிகளையும் பிரயோகிப்பதில் தேர்ச்சி பெற்றிருந்தான். பஹதர்ஷா அவனுடைய ஆலோசனையின்படியே நடக்கத் தீர்மானித்தான். அதனல் ஆப்கானியரின் கூர்ஜர சேனை உடனே சென்று முகலாயரை எதிர்ப்பதற்குப் பதில் கோட்டைக்குட்போய்த் தண்டிறங்கி வெளியே வாராமல் உள்ளே அடங்கியிருந்தனர். தம்மிடம் துப்பாக்கிகளும் வெடி குண்டுகளும் உள்ள வரையில் முகலாயர் தம்மை வெல்ல முடியாதென்று ருமிகான் கூறினன். ஆயினும், கூர்ஜரத்தார் அக் கோட்டையை

விட்டு வெளியேற முடியாதென்பதை அடியோடு மறந்து விட்டனன். தாம் இறங்கி யிருந்த விடத்துக்கடுத்த சுற்றுப் புறத்து நாடுகள் யாவும் முகலாயர் வசப்பட் டிருந்தன. அவர்கள் வெளியே யுள்ள பெரிய மைதான மொன்றில் தங்கிக் கோட்டையினின்றும் வெளியே திரும்ப முயற்சிக் கும் கூர்ஜர வீரரைத் தம் சரங்களால் தடுத்து வந்தனர். முகலாயரது அம்பு மழைக்குப் பயந்து கூர்ஜரத்தார் கோட் டையை விட்டு வெளியேற வில்லை. பசிப்பிணியால் வருந்தி வறுமையுற்று வீரர் யாவரும் சோர்ந்து துடித்தனர். நள் ளிருளில் பஹதர்ஷா ஐந்து வீரரைத் தனக்குத் துணையாகக் கூட்டிக்கொண்டு ஒருவருக்குந் தெரியாமல் இரகசியமாய் வெளியேறிவிட்டான். சற்று நேரங் கழிந்ததும் படை வீரர் தமது தலைவனைக் காணாது நாலா பக்கங்களிலும் சிதறி யோடத் தலைப்பட்டனர். ஹுமாயூன் இக்கலவரத் திற்குக் காரண மின்னதென் றறிந்து, பகைவரது கோட் டையை எளிதிற் கைப்பற்றி ஆங்குக் குவிந்திருந்த பொரு ளைத் தனக் குரிமைப் படுத்திக்கொண்டான். சண்டையிடத் தொடங்கு முன்னே வெற்றி தனக்குக் கிடைத்துவிட்ட மைக்கு அகங்களித்து கூர்ஜர நாட்டு மன்னனை எப்படியா வது பிடிக்கத்தீர்மானித்து அவன் சென்றவிட மறிந்து துரத் திச் சென்றான். ஹுமாயூன் இப்போது கொண்டிருந்த ஊக்கத்தை இவ்வாறென்று சொல்லமுடியாது. பஹதர் ஷாவை எதிர்க்கும்போது அவனுக் கிருந்த தீர்மானம் முன் னும் இருந்ததில்லை, பின்னும் இருந்ததில்லை. அவன் மாண்ட், சாம்பனிர், அமதபாத், காம்பே முதலிய இடங்களுக்குப் பஹதர்ஷாவை விடாது துரத்திச்செல்லப் பஹதர்ஷா அவனி டமிருந்து தப்பும் வகையறியாது டையு தீவில் அடைக்கல மாகப் புகுந்தான். தன் வசமிருந்த நாட்டினுக்குச் சமமான விஸ்தீர்ணங்கொண்ட மாளவம், கூர்ஜரம் என்னும் இரண்டு பெரிய மாகாணங்களும் நன்றாய் அளிந்து பக்குவப்பட் டிருந்த கனிபோன்று ஹுமாயூனுக்குச் சுவாதீனப்பட்டன. இவ்வளவு எளிதில் பகைவரை வென்றமை என்றும் நடந்த தில்லை யென்று திட்டமாய்க் கூறலாம்.

ஹுமாயூன் கைப்பற்றிய நாடுகளைத் தோற்றல்

ஆயினும், ஹுமாயூன் அவ்வெற்றியைத் தனக்குப் பிரயோஜனப் படுத்திக்கொள்ள வில்லை. சாம்பனீரிலும், காம்பேயிலும் கூர்ஜரப்போர் முனையில் தனக்குக் கிடைத்த பொருள் முழுவதையும் ஹுமாயூன் தனது முகலாய வீரர்க்கு வரம்பின்றி வாரி யளித்தான். பொருள் தம் கைக்கு வந்தபின் வீரர் தம் காலத்தை விநோதத்திலும், மதுபானத்திலும், வெறியாட்டிலும் கழிக்கத் தொடங்கினர். அப்போது அவர்கள் புரிந்த அக்கிரமங்கள் இத்தன்மையன வென்று சொல்லி முடியாது. சக்கரவர்த்தி தான் சௌர்யவான் என்பதையும், மனவுறுதியமைந்த சிறந்த வீரனென்பதையும், தனது பகைவரைத் துரத்திச் சென்று இருப்பாணிகளைப் பொருத்திச் சாம்பனிர் கோட்டையின் மீது ஏறிப் பஹதர்ஷாவின் வீரரைத் தாக்கியபோது விளக்கிக் காட்டினான். அவனை யுள்ளிட்டு அக்கோட்டையின் மீது சென்று அதனைத் தாக்கி வெற்றி கொண்டவர் நாற்பத்தொருவரே. அவனுடைய தைரியமே அவனுக்குத் துணையாய் நின்று அவனுக்கு வெற்றியை யளித்ததென்று சொல்லத் தடையில்லை. ஆயினும், அவன் தான் கைப்பற்றிய நாடுகளில் தனது அதிகாரத்தை நிலைநிறுத்துதற்குரிய ஏற்பாடுகளில் கருத்தைச் செலுத்தாமல் கூர்ஜா நாட்டைவிட்டுக் கிளம்பி மாளவஞ் சென்று அவ்விடத்தில் தான் பெற்ற வெற்றியினை விழாவாகக் கொண்டாடிக் களிப்புற்றான். கூர்ஜாத்தில் பிரதிநிதியாக நியமிக்கப் பட்ட அவனுடைய சகோதரனை **அஸ்காரி** என்பானும் **ஆமதபாதினை** யடைந்து விருந்திலும், விநோதத்திலும் தனது கருத்தைச் செலுத்திக்கொண் டிருந்தான். அவன் தானே சக்கரவர்த்தி யெனவும், தமயனைச் சிம்மாசனத்திலிருந்து கூடிய சீக்கிரத்தில் தள்ளிவிடத் தீர்மானித்திருப்பதாயும் பெருமை பேசத் தலைப்பட்டான். இதனைக் கேட்ட பஹதர்ஷாவின் நண்பனொருவன் முகலாயருள்ளும் பிளவு ஏற்பட்டிருத்தல் தனக் கனுகூலமே யென்று நினைத்துத் தான் மீண்டும் பொருது அரசைக் கவர்ந்து தலைவனுக்கு கொடுக்கத் தயாராயிருந்தான். டையூவில் தமது வியா

பாரத்தைப் பலப்படுத்துவதற்காகப் போர்த்துக் கேசியர் பஹதர்ஷாவினிடமிருந்து அவ்விடத்தில் கோட்டை கட்டிக் கொள்வதற்கு நியமனம் பெற்றிருந்தமையால் அவர்களும் அவனுக்காகச் சண்டைபிட முற்பட்டனர். முகலாயர் வெறிக்கக் குடித்து மயங்கித் துயில்கொண் டிருக்கையில் பஹதர்ஷா தன் வீரரோடு கிளம்பி ஒருவித சிரமுமின்றி நாட்டுரிமையைப் பெற்றான். படைவலியை யிழந்து நின்ற அஸ்காரி செயலற்றுப் பகைவனுக் கிடங்கொடுத்துப் பின் வாங்கினான். கூர்ஜரம் முன்போலவே பஹதர்ஷாவின் ஆட்சிக்குட்பட்டுவிட்டது. பீகாரில் ஹுமாயூனின் செல்வாக்கு ஒடுங்கியது. வங்காளத்தில் ஷெர்கானென்னும் ஆப்கானியன் பெருமையடைந்துகொண் டிருந்தான். கானூஜில் மகமத் சுல்தானென்பவன் அரசனாகி அதிகாரம் வகித்துவரத் தொடங்கினான். தான் முதலிலேயே செய்து முடித்திருக்க வேண்டிய காரியத்தை ஹுமாயூன் இப்போது செய்யத் தொடங்கித் தனது அறியாமைத்தனத்தால் இழந்த நாட்டினைக் கைப்பற்றுவதற்காக வடக்கு நோக்கிச் சென்றான். அவன் நாட்டைவிட்டுக் காலெடுத்துவைக்கு முன்னரே மாளவமும் அவனது ஆட்சியினின்றும் விலகி கூர்ஜர நாட்டரசனுக்கு உட்பட்டது. ஓராண்டில் ஹுமாயூன் எளிதிற் கைப்பற்றிய இரண்டு பெரிய நாடுகளையும் அடுத்த வருஷம் முடியுமுன் இழந்துவிட்டதோ ரதிசயமே!

கீழ் மாகாணங்களில் தனக்கு விரோதமாக எற்பட்ட கலகங்களை யடக்குவதற்காகவே ஹுமாயூன் கூர்ஜரத்தையும், மாளவத்தையும் கைவிடவேண்டிய தாயிற்று. ஆயினும் அவன மனம் யுத்த முயற்சியிற் சிறிதும் செல்லாமல் விநோதத்திலும், வேடிக்கையிலுமே பதிந்திருந்தது. கீழ் நாடுகளை யடக்கித் தன் சுவாதீனப் படுத்துமுன் மாளவத்தையும் கூர்ஜரத்தையும் பெற ஹுமாயூன் ஆலோசித்தான். இதனால் அவனது மனம் ஒரு நிலைப்பட்டதன் றென்பதும், அவன் போர்த்திற னற்றவனென்பதும் நன்கு விளங்கும். தனக்காகப் போர்புரியச் சித்தமாயிருந்த எல்லா வீரரையுங் கூட்டிக்கொண்டு அவன் 1537-ம் வருஷம் ஜூலை மாதம்

புறப்பட்டான். கூர்ஜா நாட்டுமன்னன் ஹுமாயூனுடன் சண்டையிட முடியாமல் சலித்திருந்த காலத்தில் ரூமிகான் அவனை விட்டு நீங்கி ஹுமாயூனைச் சென்றடைந்து அவனுக்கு அதுமுதல் சேவகஞ்செய்து வந்தான். பீரங்கிப் படைகளைக் கையாள்வதில் மிகவும் தேர்ச்சி பெற்றிருந்த ரூமிகானின் சகாயத்தால் ஹுமாயூன் ஷெர்கானில்லாத சமயத்தில் சென்று அவனுடைய சூனர் கோட்டையைக் கைப்பற்றிக் கொண்டான். ஷெர்கான் வங்காளஞ்சென்று தன் திறமையால் அம்மாகாணம் முழுவதையும் தனக்குரிமையாக்கிக் கொள்ளப் பாடுபட்டுக்கொண்டிருந்தான்.

ஷெர்கான் ஒரு சிறந்த வீரன். ஆப்கானியர்க்குள் அவனைப் போன்ற போர்வீரர் வேறெவரு மிலர். வங்காளநாட்டு மன்னரின் செல்வாக்கு சிறிதுசிறிதாகக் குன்றி வருவதைக் கண்ட ஷெர்கான் ஆப்கானியர் தாமிழந்த பதவியை மீண்டும் பெறுதற்குத் தருணமிதுவே வெனக் கொண்டான். கோரி மன்னர்கள் தோன்றிய சுர் வம்சத்தினனான ஷெர்கான் முதன் முதல் ரோடஸ் என்பதனருகேயுள்ள ஒரு சிறு மாகாணத்துக்குத் தலைமைபூண்டிருந்து, பாபர் காலத்தில் பீகாரை யாண்டுவந்த லோகானி ஆப்கானிய மன்னனுக்குப் பிரதம மந்திரியானான். அவன் தனது யஜமானன் மீது பாய்ந்துவந்த வேங்கையினைக் கொன்று அவனது உயிரைக் காத்ததால் 'புலியேறு' எனப் பொருள்கொண்ட 'ஷேர்கான்' என்னும் பெயரினைப் பெற்றான். பாபர் பீகாரை நோக்கிப் படையெடுத்து வருகையில் ஷெர்கானும் அவனுடைய கட்சியைச் சேர்ந்தானேனும் பின்னால் முகமத் லோடி பாபரை யெதிர்த்தகாலத்தில் பாபரைவிட்டு நீங்கி லோடி தலைவனுக்கு உதவிபுரிந்தான். மீண்டும் ஹுமாயூன் லோடியுடன் லக்னௌ என்னு மிடத்தில் சண்டையிடும் போது லோடி தோல்வியுறுவதைக் கண்டு ஷெர்கான் ஹுமாயூனைச் சேர்ந்துகொண்டான். 1532-ல் ஹுமாயூன் சூனர் கோட்டையை முற்றுகை யிடுகையில் ஷெர்கான் ஹுமாயூனை யடைந்து தான் சக்கரவர்த்திக்கு அடங்கி முக

லாயரிடம் தோழமை பூண்டிருப்பதாக வாக்களித்தான். அவன் வெளிக்கு அங்ஙனம் நடித்து வந்தானேனும் தனது பதவியை மேம்படுத்திக் கொள்வதற்குச் சமயம் எப்போது வாய்க்குமென்று ஆவலோடு எதிர் பார்த்துக்கொண்டிருந்தான். ஹுமாயூன் மேற்கில் சென்று வெகுநாள்வரை அங்கே தங்கியிருந்தது ஷெர்கானுக்கு அனுகூலமாய் முடிந்தது. அவன் தந்திரமாய்ப் பல நாடுகளைக் கைப்பற்றி அவற்றைத் தனக்குட்படுத்தினான். தன் சேனுபலத்தை விருத்திசெய்து பகைவரை எதிர்ப்பதற்குத் தயாரா யிருந்தான். ஹுமாயூன் ஷெர்கானுக்குச் சொந்தமான சூனர் கோட்டையை இரண்டாவது தடவை ஆறுமாதகாலம் முற்றுகை யிட்டுக்கொண்டிருந்தான். ஆப்கானியனே சூனரின்மீது தனது கவனத்தைச் செலுத்தாமலே வங்காளத்தின் தலை நகராகிய கௌர் என்னும் நகரைச் சுவாதீனப் படுத்துவதற்குரிய காரியங்களைச் செய்துவந்தான். அவனது மனவமைதியும், திடமுந்தானென்னே !

ஷெர்கானின் வலிமை மிகுதல்.

வங்காளமே ஹிந்துஸ்தானத்தில் நீர்வளமும் நிலவளமு மிகுந்து செல்வம் மல்கிய பெருநாடாகும். ஷெர்கான் அதனைச் சுவாதீனப்படுத்தி இராஜரீகத்தை நிலைபெறச் செய்பு முன்னமே அவனை அப்புறப்படுத்தத் தீர்மானித்து ஹுமாயூன் வெகு பரபரப்புடன் புறப்பட்டு வங்காளம் நோக்கி வந்தான். சக்கரவர்த்தி ஷெர்கானை மன்னித்து அவனை ஜான்பூருக்குத் தலைவனாகச் செய்ய வாக்களித்தும் ஷெர்கான் தனது முயற்சியைக் கைவிட்டு ஹுமாயூனின் தோழமையைப் பெற்று அமைந்திருக்கச் சிறிதும் சம்மதிக்கவில்லை. பீகாருக்கும் வங்காளத்துக்குமிடையேயுள்ள ராஜமஹால் குன்றின் கணவாய் மூலமாகவே வங்காளத்துக்குச் செல்லவேண்டு மாகையின் பகைவர் அம்மார்க்கமாய் வாராதபடி அக்கணவாயில் சைந்யத்துடன் காவல்காத்து வரும்படி தன்மகன் ஜலால்கான் என்பவனை நியமித்து ஷெர்கான் ஹிந்துக்களிடமிருந்து தந்திரமாய் ரோடஸ் என்னும் கோட்டையைக் கைப்பற்றித்

தனது சேனை, துப்பாக்கி, சஸ்திரங்கள், திரவியம், முதலிய சகல பொருள்களையும் எடுத்துக்கொண்டு தனது குடும்பத்தாரோடு அக்கோட்டையை அடைந்தான். ரோடஸ் கோட்டையைப் பகைவர் தாக்கிப் பிடித்தல் மிகவும் அருமையென்று கண்டு ஷெர்கான் அதில் தன் படைகளோடும், பொருள்களோடும் தங்கத் தீர்மானித்தான். அவன் நினைத்தபடியே செய்து முடிக்கும்வரை ஜலால் அக் கணவாயில் நின்று முகலாயர் படைகளை அழித்தோட்டித் தன் தந்தையினிடமிருந்து செய்தி கிடைத்தவுடன் அவ்விடத்தைவிட்டு நீங்கி ரோடஸ் கோட்டைக்கு வந்துசேர்ந்தான். அதன் பின்னர்த்தான் ஹுமாயூன் வங்காளத்துக்கு வருவது சாத்தியமாயிற்று. அவன் கி. பி. 1538-ல் வங்காளத்துக்கு வந்து பார்க்கையில் அந்நாடு பிணங்கள் நிறைந்து ஜன சஞ்சாரமற்றுப் பாழடைந்திருந்ததைக் கண்டான். அப்படி யிருந்தும் அவன் தன் வீரருடன் அங்குத் தானே ஆறுமாதகாலந் தங்கித் தன் மனம் சென்றபடி தன் இனத்தாருடன் கழித்துவந்தான். அவனுடைய எளிய நிலையை அவன் சிறிதேனும் அறிந்தானல்லன்.

ஷெர்கான் முடி சூடுதல்.

ஷெர்கான் பெரிய சூழ்ச்சிக்காரன். அவன் தனது தந்திரத்தாற் சாதியாத காரிய மொன்றுமில்லை. ஹுமாயூனுக்கு முகலாயரிடமிருந்து ஒருவித உதவியுங் கிடைக்காமற் செய்யவேண்டு மென்னுங் கருத்துப்பற்றியே ஷெர்கான் சக்கரவர்த்தியை வங்காளத்தில் வெகுநாள் வரையும் தங்கியிருக்கும்படித் தாராளமாய் இடங்கொடுத்து வந்தான். அவன் ஹுமாயூனின் சுபாவத்தை நன்கறிந்தவன். தானே சென்று எதிர்த்தாலன்றி ஹுமாயூன் வங்காளத்தைவிட்டு அசையான் என்று ஷெர்கான் அறிந்திருந்தான். யாவும் அவன் நினைத்தபடியே முடிந்தது. இந்நெருக்கடியான சமயத்தில் ஹுமாயூனின் சகோதரர்கள் அவனுக்கு உதவிபுரிய முற்பட்டிலர். வங்காளத்தில் சக்கரவர்த்தியுடனிருந்த ஹிண்டல் உணவுப்பொருள்கள் கொண்டு வருவதற்காகத் தமயனின் உத்தரவுபெற்று டிர்ஹட்டுக்குச் சென்றான். அவன்

வங்காளத்திற்குத் திரும்பாமலே ஆக்ராவுக்குச் சென்று அங்கேயுள்ள சில வீணர்களின் துர்ப்போதனைகளுக் குட்பட்டுத் தானே சக்கரவர்த்தியென்று விளம்பரப் படுத்திக் கொண்டு அவ்விடத்திலேயே நின்றுவிட்டான். ஹுமாயூன் தனது தம்பியின் சதிச்செயலைப்பற்றிக் கேள்வியுற்று வருந்தி அவனுக்குப் புத்திசொல்லி அவனைக் கூட்டிவரும்படி ஒரு பக்கீரை அனுப்ப ஹிண்டல் அவ்வெளிய முகம்மதியனைக் கொன்றுவிடும்படி கட்டளை யிட்டுவிட்டான். ஆக்ராவில் ஹுமாயூனிடம் விசுவாசம்நிறைந்த சிலர் ஹிண்டலின் துடுக்கையடக்கி, டெல்லியைக் காக்கத் தீர்மானித்துக் காம்ரானின்துணையைநாடினர். காம்ரானும் அவருடைய வேண்டுகோட்கிணங்கிக் கடுகிவந்து தம்பியாகிய ஹிண்டலின் பராக்கிரமத்தை ஒடுக்கினன்; எனினும், அவன் வங்காளத்தில் துணைவலியின்றி மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த சக்கரவர்த்தியைக் காப்பாற்றுவதற்குச் சிறிதும் முயற்சி யெடுத்துக்கொள்ளவில்லை. பிறருடைய நிர்ப்பந்தத்தின்பேரில் அரைமனத்தோடும் புறப்பட்டுச்சிறிது தூரம் சென்று உடனே திரும்பிவிட்டான். ஷெர்கானுக்கும் ஹுமாயூனுக்கும் நடக்கும் போரில் தான் தலையிட்டுக் கொள்ளாமல் ஹுமாயூன் தோல்வியுறும் வரையில் நிதானித்துப் பின்னர் ஷெர்கானை எளிதில் வெற்றிகொள்ளலாமென்று தம்பிகளிருவரும் நினைத்திருந்தனர். அவர் சுயநலப் பிரியராய்த் தம்முள் ஒருவனே அரசைப் பெறவேண்டுமென்று எண்ணியிருந்தனர். ஆயினும், அவர்கள் ஷெர்கானின் குணங்களை நன்றாய் அறிந்திருப்பின் இவ்விதந் துணிந்திராரென்பது திண்ணம். ஷெர்கான் வங்காளத்திலிருந்து செல்லும் எல்லாப் பாதைகளிலும் போர்வீரரை நிறுத்திக் காவல்செய்து வந்தனன். அவன் சுனார், ஜான்பூர் என்னுமிரு கோட்டைகளையும் முற்றுகையிட்டுக் கானோஜ்வரையுமுள்ள பிரதேச முழுவதையும் கைக்கொண்டு ரோடஸ் கோட்டையில் சுல்தான் ஷெர்ஷா வென்னும் பட்டம் புனைந்து அரசனானன்.

ஷெர்ஷா வங்காளத்துக் காசுரிமை வகித்து ரோடஸ் கோட்டையில் ஆண்டுவருவதை ஹுமாயூன் நாளடைவிற்

ஹுமாயூன் ஷேர்கானின் மீது படையெடுத்துச் செல்லல்.

கிடைத்தவதந்தி வாயிலான் அறிந்து, சினங் கொண்டு, ஆப்கானியரை யெதிர்க்கத் தன் படையைத் தயாரித்துப் புறப்பட்டான். ஆறுமாத காலம் வீணுய்க் கழித்ததற்குப் பச்சாத்தாபப் பட்டான். வீரர்கள் தம் நலன்கள் யாவு மிழந்து சிற்றின்பத்திற் பற்று மிக்குக் குடித்துத் தேகமிளைத்துச் சோர்வடைந்திருந் தனர். வறுமையும் பிணியும் அவர்களை வாட்டின. சக்கர வர்த்தியின் மொழிகள் அவர்கள் காதுகளில் விழவேயில்லை. அளவற்ற பொருள் வழங்கி அவர்களைச் சுவாதீனப்படுத்தி ஹுமாயூன் ஷெர்ஷாவின்மீது படையெடுத்துப் புறப்பட் டான். ஷெர்ஷா ஹுமாயூன் தன்மீது வருவதை அறிந்தா னேனும் முகலாயரைத் தானே சென்று தாக்குவதற்கு அவன் விரும்பவில்லை. சண்டையிட்டு முகலாயரை வெல்ல ஷெர்ஷா விரும்பவில்லை. முகலாயர்க்குத் தெரியாமல் திடீ ரென்று அவரது சைந்யத்தை வளைத்துக்கொண்டு அவர்க ளுக்குத் திகைப்புண்டாக எதிர்த்து உபத்திரவிக்க ஷெர்ஷா விரும்பினுன். ஆகவேதான் ஷெர்ஷா ஹுமாயூன் முன் நோக்கிச் செல்வதைத் தடுக்காமலிருந்தான். ஹுமாயூன் தனது படைவீரருடன் கங்காநதிக்கரை வழியாக மாங்கீர் வரை சென்று, ஷெர்ஷா நதியின் தெற்கே வலதுகரையி லிருத்தலைக் கண்டு நதியை அவ்விடத்திற் கடந்தான். தான் ஷெர்ஷாவுக்குச் சிறிதும் பயப்படாததை அவனுக்குப் புலப் படுத்த வேண்டியே அவன் அங்ஙனஞ் செய்தான்.

பின்பு, ஹுமாயூன் பாட்னு வழியாக நடந்து பக்ஸார் என்னுமிடத்தை அடைந்தான். ஷெர்ஷா முகலாய படைவீரர் பலங்குன்றி யிருத் தலை யறிந்து திடீரென்று குதிரைமீது வந்து அவர்களை ஜான்ஸா வென்னுமிடத்தில் சந்தித்து அவர்கள் மேலே செல்ல வொட் டாது தடுத்தனன். இருதிறத்துப் படைகள் ஒன்றை யொன்று எதிரிட்டு நின்றன. இரண்டுமாத காலம் இவ்விரு திறத்தாரும் தத்தம் நிலையிற் பெயரா தமைந்திருந்தனர். ஏனெனில், இதற்கு முன் நடந்த யுத்தங்களில் முகலாயர்

முகலாயரின் படுகோலை: ஹுமாயூன் உயிர்தப்பிப் பிழைத்தல்

பட்ட கஷ்ட நிஷ்டூரங்களுக் களவேயில்லை. ஆப்கானிய வீரரும் அங்ஙனமே அலுத்துச் சோர்வடைந் திருந்தனர். முகலாயர் தம் பரிகளை யிழந்து விட்டமையால் தரையில் நின்று போர் புரிய வேண்டியிருந்தது. உணவுப் பொருளும் சுருங்கி விட்டது. அண்டையிலிருந்த நாடுகளும் பகைவர் வசப் பட்டிருந்ததினால் வெளியிலிருந்து உணவுப் பொருள் பெறுவதும் இயலாது போயிற்று. ஆக்ராவிலிருந்து ஒரு உதவியுங் கிடைக்கவில்லை. இந்நெருக்கடியான நிலையில் ஹுமாயூன் பகைவருடன் சமாதானஞ் செய்து கொள்வதையன்றி வேறு வழி யொன்றும் அறியாதவனானன். ஆகவே, அவன் ஷெர்ஷாவுடன் ஒரு உடம்படிக்கை செய்துகொண்டான். ஷெர்ஷா சக்கரவர்த்தியின் ஏகாதிபத்தியத்தின்கீழ் வங்காளத்திற்கும், பீகாரின் ஒரு பாகத்திற்கும் தலைமை வகிக்க வேண்டுமென்று இருவரும் ஒப்புக் கொண்டனர். இவ்வாறு இவ்விருவருக்கு மேற்பட்ட விவாதம் தீர்ந்து சமாதானம் ஏற்படக்கூடிய நிலையில் ஆப்கானியர் திடீரென்று எழுந்து களத்தினின்றும் கலைந்து கொண்டிருந்த முகலாயர் மீது பாய்ந்து நாலா பக்கங்களிலும் அவர்களைச் சூழ்ந்து வளைத்துக் கொண்டனர். முகலாயர் இதனைச் சிறிதும் எதிர்பார்த்தவரல்லர். தலைவர்க்குள் சமாதானம் ஏற்பட்டுவிடவே சைநிகரும் கவலையற்றுப் பகைவர் நடுவில் தூங்கிக்கொண்டிருந்தனர். ஆப்கானியர் தூங்கிக்கொண்டிருக்கும் முகலாய வீரரைச் சிறிதும் இரக்கமின்றி வெட்டிக்கொன்றனர். உயிர்ச் சேதமின்றித் தப்பிப் பிழைத்தோர் சிலரே. ஹுமாயூன் கங்கை நதியில் விழுந்து தன் உயிரை மாய்த்துக்கொள்ளத் தீர்மானித்துத் தண்ணீரில் மூழ்கிவிட்டான். அப்போது அவ்வழியே சென்று கொண்டிருந்த நீர் கொண்டு செல்ல வந்தானொருவன் அரசன் நீரில் அடித்துச்செல்லப்படுவதைக் கண்டு பொறுது அவனது எளிமையைக் கண்டிரங்கி அவனுயிரைக் காப்பாற்றினன். அவனது படையினரிற் பெரும்பாலார் பகைவர்க்குக் கைதிகளாயினர். பலர் நதியின் வெள்ளத்தில் மூழ்கி மாண்டனர். சக்கரவர்த்தி அலைந்து திரிந்து தெய்வசகாயத்தால் 1539-ம் வருஷம் மே மாதத்தில் ஆக்ரா நகரை யடைந்தான்.

**கானூஜில் முகலாயரின் தோல்வி.**

அப்பால் இருதிறத்தாரும் யுத்த முயற்சியில் கருத்தைச் செலுத்தலாயினர். ஷெர்ஷா வங்காளத்தில் தனது வீரர்களை ஒன்று சேர்த்து வலிபெற்று வந்தான். ஹுமாயூனின் மனம் இன்னும் உறுதியான நிலையை அடையவில்லை. அவனது மனம் எதிலும் செல்லாமையால் காலம் வீணே கழிந்தது. ஷெர்ஷா செய்து வரும் முயற்சியைப் பற்றி கேள்வியுற்ற பின் ஹுமாயூன் இனித் தான் சும்மாவிருத்தல் சரியன்றென்றுகொண்டு தனது சகோதரனையும் தன்னுடன் சேரும்படித் தூண்டித் தனது வீரரை ஒன்று கூட்டினன். 1540வரு மே மாதம் 17உ முகலாயரும் ஆப்கானியரும் கானூஜுக்கருகே சந்தித்தனர். கங்கைக் கரையில் நடந்த அச்சண்டையின் முடிவாக முகலாயர் தம் வலியிழந்தனர். இலக்ஷம் போரடங்கிய சேனை சக்கரவர்த்தியின் வசத்தில் இருந்ததெனினும் அவ்வீரர்களிற் பெரும்பாலார் மனப்பூர்வமாய் சக்கரவர்த்திக்குச் சேவகம் புரிய எண்ணியவரல்லர். படைத்தலைமை வகித்த உத்தியோகஸ்தரும் திறமையற்றவர். அவர்கள் அடிக்கடி சக்கரவர்த்தியை விட்டு நீங்கிப் பகைவரோடு சேர்ந்து கொண்டனர். வறுமையுந் துன்பமும் அவர்களைத் தொடர்ந்தமையால் அவர்களின் வீரமும் தைரியமும் ஒடுங்கின. சண்டை தொடங்கிய சொற்ப காலத்துக்குள் அது முடிவுக்கு வந்ததென்னலாம். அப்போரினை நேரிற் கண்ட 'மிர்ஸாஹைதர்' என்னும் சரித்திராசிரியர் எழுதுகிறார்:— "பகைவர் ஓரம்பு எய்வதற்கு முன்னரே முகலாயர் தமக்குள் கலவரமிகுந்து நாலாபக்கமும் கூட்டங்கூட்டமாய் ஓடிச் சிதறித் தோல்வியுற்றனர். அவர்கள் எதிரிகளின் மீது ஒரு குண்டுகூட எறியவில்லை." வீரர் யாவரும் கங்காநதிக்கு ஓடினர். அவ்வளவு பேரையும் தாங்கக்கூடாமல் பாலம் உடையவே யாவரும் வெள்ளத்தில் வீழ்ந்தாழ்ந்து மரித்தனர். ஹுமாயூன் இம்முறை உயிர் தப்பிப் பிழைத்ததோரதிசயமே!

நதியில் விழுந்து உயிர் தப்பிய அந் நாண் முதல் பதினைந்து ஆண்டுகள் செல்லும் வரையும் ஹுமாயூன் நாடோ

டியாயலைந்து உயிர் வாழலாயினன். மூன்று வருஷ காலம் அவன் இராஜபுதனத்திலும், ஸிந்திலுமுள்ள பாலைவனங்களில் திரிந்து கொண்டிருந்தான். அப்போது அவனுக்குற்ற ஆபத்துக்கள் பல. அவன் பட்ட கஷ்டங்கள் கொஞ்சமல்ல. தன்னைத் தேற்றி ஆதரிப்பாரின்றித் தவித்துத் திரிகையில் அவன் ஓரெழிலணங்கைக் காதலித்துக் கடிமணம் புரிந்தான். ஆமர்கோட் என்னுமிடத்தில் அச்சுந்தரவதி 1542-ம் வருஷம் அக்டோபர் மாதம் பதினைந்தாந்தேதி ஓரழகிய ஆண் மகவைப் பெற்றாள். இம் மகன் தான் ஆக்பரென்னும் பெயர் பெற்று இந்தியாவிற் சிறப்புற்ற சக்கரவர்த்திகளுள் முதன்மையாய் விளங்கலானான். அக்குமாரன் பிறந்தபின் ஹுமாயூன் இராஜபுதனத்தை விட்டுப் புறப்பட்டுப் பாரசீகம் போய்ச் சேர்ந்தான். அந்நாட்டரசனின் உதவி பெற்று ஹுமாயூன் 1545-ம் வருஷத்தில் தனது தம்பியாகிய ஆஸ்காரியைத் தோற்கடித்து அவனிடமிருந்து காண்டஹாரைக் கைப்பற்றினான். இரண்டு வருஷங்களுக்குப் பிறகு தன் தம்பி காம்ரானிடமிருந்து காபூலை வென்றான். தன் தந்தை இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்னால் இந்தியாவினுள் பிரவேசிக்கும்போது அடைந்திருந்த நிலைமையில் ஹுமாயூன் இப்போது இருந்தான்.

அதற்குப்பின் ஹுமாயூன் இங்குமங்கு மலைந்து நாடுகளைக் கவர்ந்து வெற்றி கொள்வதும், பெற்ற நாடுகளைச் சண்டையில் தோற்றிழப்பதுமாய் ஒன்பது வருஷகாலங் கழித்தான்: ஹிண்டல் போரில் வீழ்ந்தான். மெக்காவுக்கு யாத்திரை செய்து கொண்டிருந்த ஆஸ்காரி வழியில் இறந்தான். காம்ரான் தனது தமயனுக்குப் பணியாமலே வெகு நாள் வரை கலகித்து வந்தான். ஹுமாயூன் அவனையும் வென்று அவனது கண்ணைக் கெடுத்து மெக்காவுக்கு அனுப்பி விட்டான். மெக்காவுக்குச் சென்ற சொற்ப காலத்தில் அவன் அங்கே இறந்தான். ஹுமாயூனுக்குற்ற துன்பங்களுக்குக் காரணராயிருந்தவர் இந்தச் சகோதரரே யாகையால் ஹுமாயூன் தன்னாற் கூடியவரை அவரை அன்பினால் வெல்ல முடியாமற் போனபின் இங்ஙனம் தண்டனை யிழைத்தது அவனது பெருங் குணத்திற்கோ ரிழுக்காகாது.

ஹுமாயூன் மேற் கூறியபடி தன் நாட்டை விட்டு வெளியே சென்று சஞ்சரித்து வருகையில் ஷேர்ஷா ஹிந்துஸ்தானத்திற் பெரும் பகுதியைத் தனக்குரிமையாக்கிக் கொண்டான். இந்தியாவிற் பிறந்து அந்நாட்டு முஸ்லிம் ஆப்கானியாது அபிமானம் பெற்றிருந்த ஷேர்ஷாவை அரசனாகப் பெறுவதில் ஜனங்கள் மிகவும் உற்சாகங் கொண்டிருந்தனர். அன்றியும், அவன் துரைத்தன நீதியையும், போர் முறையினையும் நன்கு அறிந்து அவற்றிற் பயிற்சி பெற்றிருந்தான். அவனைப்போல் திறமையும் அறிவும் படைத்தவர் ஒருவரும் இலர். அவன் தன் குடிகளுக்குப் புரிந்த நன்மைகளையும் சீர்திருத்தங்களையும் ஆய்ந்து பார்க்கின் அவனை ஆக்பர் சக்கரவர்த்திக்குச் சில அம்சங்களில் ஒப்பிட்டுக் கூறலாம். கீன் துரை எழுதுவதாவது, "அவன் ஆட்சி புரிந்தது சில்லாண்டுகளே; எனினும், அவனது ஆட்சி ஜனங்களின் ஒற்றுமையையும், கூட்டு முறையையுமே அடிப்படையாகக் கொண்டிருந்ததென்று கூறத்தடையில்லை. அவன் முஸ்லாமிய மதத்தில் மிகுந்த பற்றுடையவனேனும் ஹிந்து குடிகளை ஒருபோதும் வருத்தியதில்லை. தன் குடிகட்குள் நிகழும் விவாதங்களை அடக்குவதிற் சலியாமல் உழைக்கும் மனவுறுதி பொருந்தியவன். அவன் சோம்பலின்றி இராப்பகல் ஓயாமல் வேலை செய்வான். 'பெருமைப்பட வாழ்வோர் வேலைக்குத் தயங்காது எப்போதும் உழைப்பதே தகுதியாகும்' என்று அவன் கூறியுள்ளான். அவன் தன் நாட்டினை நூறு நூறு பகுதிகளாகப் பிரித்து ஒவ்வொன்றிற்கும் ஒருத்தியோகஸ்தனை நியமித்திருந்தான். இராஜ ஸமஸ்தானத்தில் வேலை பார்த்து வந்த உத்தியோகஸ்தர்களிடம் குடிகளின் குறைகளையும் சௌகரியங்களையும் அறிவித்து நாட்டினர்க்கு அமைதி யுண்டாக்குவதே மேற்காட்டியஉத்தியோகஸ்தரின் கடமையாகும். சமுகவாழ்க்கை வரையறைப் படுதற்குரிய சீர்திருத்தங்களைச் சட்டங்கள் மூலமாக முதன் முதல் அநுஷ்டானத்துக்குக் கொண்டு வந்த முஸ்லீம் மன்னன் ஷேர்ஷாவேயாம். அவன் ஏற்படுத்திய சீர்திருத்தங்களினால் நாம் அக்காலத்தில் இந்தியா

ஷேர்ஷாவின் அரசியல் வன்மை.

இருந்த நிலைமையை ஒருவாறு அறிதல் கூடும். இராஜ்ய வியவகாரங்கள் யாவற்றையும் அவன் ஒரு ஒழுங்குபடுத்திக் குடிகட்கு நன்மை புரிந்து வந்தான். ஆப்கானியர் கையை விட்டு இராஜரிகம் முகலாயரிடம் திரும்பிய பிறகும் ஷெர்ஷா வினிடம் உத்தியோகம் பார்த்து வந்த இராஜதந்திரநிபுணர்களே ஆக்பர் காலத்தும் அவனுக்குச் சேவகம் செய்ய முற்பட்டுச், சிறந்து விளங்கினார்கள். அவன் இறந்த பின் அரசாண்ட ஆக்பர் சக்கரவர்த்தி அவன் ஏற்படுத்திய சட்டத்தினை யொட்டியே புதிய சட்டங்களேற்படுத்தி இராஜரிகம் புரிந்து வந்தான்."

ஷேர்ஷாவின் ஆட்சித்திறம்

ஆயினும், ஷெர்ஷா சாந்த ஸ்வபாவனாயிருந்து இவ்வரும் காரியங்களைச் செய்து முடித்ததாக எண்ணுவதற்கில்லை. ஆபஸ்கானென்னும் சரித்திராசிரியன் எழுதுகிறான்:—'ஷெர்ஷா நாட்டில் இருந்தாலுஞ் சரி, வெளியே சென்று போர் முனையி லிருந்தாலுஞ் சரி அவனுடைய ஆட்சிக் கடங்கி அவனது சட்டங்களை ஏற்றுக் கொள்ளாத ஆப்கானியர் ஒருவரு மிலர். ஆப்கானிய மரபினர் யாவரும் அவனைத் தமது தலைவனாக அங்கீகரித்து வந்தனர். அரசனது தண்டனைக்குப் பயந்தோ அல்லது தாம் வகித்து வந்த பதவியை யிழத்தற் கஞ்சியோ குடிகள் அரச சாஸனங்களுக்குக் கட்டுப்பட் டிருந்தனர். தமக்கு வெறுப்பையும் அதிருப்தியையு முண்டாக்கக் கூடிய காரியத்தை ஒருவன் செய்ததாக அரசன் காதுகளுக் கெட்டினால் உடனே அவன் தன் சொந்த புதல்வனென்றும், சகோதரனென்றும், உறவினனென்றும், மந்திரியென்றும், பிரபுவென்றும் பாராமல் குற்றவாளியைப் பிடித்துச் சிரச்சேதஞ் செய்து விடும்படி கண்டிப்பாய்க் கட்டளை யிடுவான். அதனால் அரசன் தமக்கு நெருங்கிய நண்பனாயினும், உறவினனாயினும் சரி ஒருவரும் இராஜ சாசனங்களுக்கு மீறி நடவார். ஷெர்ஷா சிம்மாசனமேறிய நாள் முதல் அவனுக்கு விரோதமாகக் கிளம்புதற்குத் துணிவுடையோர் ஒருவரும் இலர். அவன் ஆட்சிபுரிந்த காலத்தில் இராஜத் துரோகிகள் சேர்ந்து கலகித்ததே கிடையாது. அமைதியோடு சிறப்

புற்று விளங்கும் இராஜரிகத்திற்கு ஒரு தடையும் ஏற்பட்டதில்லை. அரசவையைச் சேர்ந்த பிரபுக்களும், வீரர்களும் பிறர் பொருளை யபகரிக்கும் துணிவுடையவ ரல்லர். நாட்டில் கள்ளர்களாலும் கொள்ளைக்காரர்களாலும் குடிகளுக்குச் சிறிதும் பயமில்லாதிருந்தது. அக்காலத்தில், நெடுந்தூரம் வனங்களிற் செல்லுவதா யிருந்தாலும் ஜனங்கள் துணையின்றித் தனித்துப் பயமில்லாமற் சஞ்சரித்து வரக் கூடும். இரவிற் பயமில்லாமல் ஸ்திரீகளும் வனங்களில் தனித்திருக்கக்கூடும். பிரயாணிகள் தாம் கொண்டு செல்லும் சாமான்களை ஒரு மைதானத்தில் இறக்கித் தம் குதிரைகளை மேயவிட்டு வீட்டில் கவலையற்றுத் தூங்குவதுபோல் நடு வனாந்தரங்களில் அமைதியோடுந் தூங்குவது சாத்தியமாகும். அங்ஙனம் வழியே செல்லும் பிரயாணிகளுக்குத் துன்பம் நேர்ந்தால் தாம் அரச தண்டனையையடைய நேருமென்றஞ்சி மன்ஸப்தார்கள் பலர் தம் சேவகரை வழிகளில் நிறுத்தி அவர்களுக்கு ஒருவித தீங்கும் நேரிடாதபடி காவல் காத்து வருவர். நியாயத்திற்கு மீறித் தமது பராக்கிரமத்தால் மட்டும் ஜனங்களைக் கொள்ளையிட்டுப் பொருள் சேர்க்கும் வன்கண்ணர்க்கு ஷெர்ஷாவின் நாட்டில் இடமில்லை.''

ஷெர்ஷாவுக்குப் பின் நாட்டின் நிலைமை.

1545-ம் ஆண்டில் ஷெர்ஷாவுக்கு விரோதமாய் இராஜபுத்திரர் கலகம் விளைத்தனர். அக்கலகத்தை யடக்குவதற்கு ஷெர்ஷா சென்று கலிஞ்சரென்னுங் கோட்டையை முற்றுகையிடுகையில் அவன் பகைவராற் கொலையுண்டான். அவன் தேக முழுவதும் காயமடைந்து மரிக்குஞ் சமயத்திலும் அவனது மனம் குடிகளின் க்ஷேமத்துக்காகத் தான் செய்யவேண்டிய காரியங்களிலேயே பதிந்திருந்தது. அவனுக்குப் பின் அரசாட்சியைத் திறமையுடன் நிர்வகிக்கக் கூடியவர் ஒருவருமிலர். ஷெர்ஷாவின் குமாரனை இஸ்லாம்ஷா தனது உரிமையை முன்னிட்டுச் சிம்மாசனத்திற்கு வரும்போது பழையபடி ஆப்கானியர்க்குள்ளிருந்த பகைமை முதிர்ந்து பல கட்சிகள் ஏற்பட்டன. ஒன்பது வருஷங்கள் இஸ்லாம்ஷா ஆட்சி

புரிந்து பின் மரித்தான். அதற் கப்பால் இராஜ்ய முழுவதும் கலவரம் மிகுந்திருந்தது. இஸ்லாம்ஷாவின் சகோதரனை பன்னிரண்டு வயதுள்ள சிறுவனை அவனது சிற்றப்பனை அடில்ஷா வென்பவன் சிறிதும் இரக்கமின்றிக் கொன்றுவிட்டான். அடில்ஷா தீய வழிகளைக் கைக்கொண்டு இராஜ காரியங்களைக் கவனித்து வரும்படி தனது பிரதிநிதியாகிய ஹீமு வென்பவனை நியமித்தான். ஹீமு நாட்டு வியவகாரங்களை ஏற்றுக் கொண்டதும் எங்கும் குழப்பங்களும் கலகங்களும் உண்டாயின. இப்ரஹிம் என்பவன் டெல்லியையும் ஆக்ராவையும் கைப்பற்றிக் கொண்டான். சிகாண்டர் என்பவன் பஞ்சாபின் தலைமையை வகித்து இப்ரஹிமை யுத்தத்தில் தோல்வி யடையச் செய்து டெல்லியையும், ஆக்ராவையும் தனக்குச் சுவாதீனப்படுத்திக் கொண்டான்.

**ஹுமாயூனின் அந்திய காலமும் கொடிய மரணமும்**

இங்ஙனம் நாடெங்கும் குழப்பங்கள் மேலிட்டிருக்கையில் ஹுமாயூன் மீண்டும் தனது பதவியைப் பெற வெண்ணிச் சேனைகளைச் சேர்க்கத் தொடங்கினன். 1555-ம் வருஷத்தில் ஹுமாயூன் பதினையாயிரம் குதிரை வீரர்களைத் தயாரித்துக் கொண்டு காபூலிலிருந்து புறப்பட்டு இந்தியாவின்மீது படையெடுத்து வந்தான். அவன் பஞ்சாபை எளிதிற் கைப்பற்றிச் சிகாண்டரை சர்ஹிண்ட் என்னுமிடத்தில் பொருது வென்று அவனை வடக்கே துரத்திவிட்டு டெல்லிக்கும் ஆக்ராவுக்கும் அதிபனுனன். போர்க் களத்தினின்றும் ஓடிய ஆப்கானியரைத் துரத்திக் கொண்டு ஆக்பர் செல்ல ஹுமாயூன் தான் பெற்ற இராஜ்யத்தில் தனது ஆட்சி நிலை நிற்பதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்து வந்தான். ஹுமாயூன் தான் பெற்ற பாக்கியத்தை வெகுநாள் அநுபவிக்கவில்லை. அவன் பட்டம் பெற்று ஆறுமாத காலமாகு முன்னரே ஒருநாள் அவன் தன் அரண்மனையின் மாடிப் படிகளின் வழியாகக் கீழே யிறங்குகையில் கால் தவறி வீழ்ந்து கடுங் காயமுற்று அந்நோயே காரணமாக 1556-ம் வருஷம்

ஜூன் மாதம் 24-ந் தேதி நாற்பத்தொன்பதாவது வயதில் மரண மடைந்தான். வாழ்க்கையில் தான் எடுத்துக் கொண்ட வேலைகளில் தவறியது போலவே அந்திம தசையிலும் தவறி விழுந்து உயிர் துறந்தான்.



## ஆக்பர் சக்கரவர்த்தி (1556—1605)

ஹுமாயூனுக்குப் பின் நாட்டின் நிலைமை.

ஹுமாயூன் இறந்த பின் அவனுடைய அருமைக் குமாரனை ஆக்பர் சிம்மாசனம் ஏறினன். பதின்மூன்று பிராயத்தனாகிய அவ்விளைஞன் அரசுரிமை வகிக்கும்போது முகலாயரின் நிலைமை மிகவும் கேவலமா யிருந்தது. அவன் தந்தை இந்தியாவை மீண்டும் பெறு முன் பட்ட கஷ்ட நிஷ்டூரங்கள் இத்தன்மையன வென்று சொல்ல முடியாது. ஆக்பரின் ஸ்வாதீனத்தி லிருந்தவை டெல்லியும் அதைச் சுற்றிலுமுள்ள சிறு பிரதேசமுமே யாம். அவையும் அவன் கையை விட்டு எந்த நிமிஷத்திலேனும் நழுவி விடும் நிலைமையில் இருந்தன. மூலைக்கு மூலையில் கலகங்களும், யுத்த முயற்சிகளும் தலையெடுத்திருந்தன. ஹிந்துஸ்தானம் முழுவதையும் அடக்கிக் கைப்பற்றுவதென்றால் சாமானிய வேலை யன்று. இருபது வருஷ காலம் போர்க்களத்தில் நின்று ஓயாமல் சண்டையிட்டுப் பகைவரை முறியடித்த பின்னும் இராஜரிகம் உறுதிப் படவில்லை யென்னலாம்.

ஆக்பர் முடித்த வேலை.

முகலாய ராஜ்யம் உன்னத பதவிலிருந்தது ஆக்பர் ஆட்சி புரிந்த காலத்திலே யென்று பலர் அபிப்பிராயப்படுகின்றனர். உண்மையை ஆராயுமிடத்து ஆக்பர் நாடு வலிமையுறுதற்கு வேண்டிய வழிகளை நாடி யுழைத்தானெனினும், அம் முயற்சியின் பயன் முழுவதையும் அவன் கண்டு விட்டதாகக் கொள்வது சரியன்று. ஆயினும், முகலாயரின் அதிகாரம் உறுதிப்படுவதற்கு அஸ்திவாரத்தை ஆக்பர் அவன் காலத்தில் நாட்டினான் என்பதற்குச் சிறிதும் ஐயமில்லை.

அவனது உழைப்பு பலனளிக்கத் தொடங்கி நாட்டினர்க்கு நலத்தைப் பெருக்கியது. முகலாய ராஜ்யத்தை நிலைநாட்டி ஒழுங்கு படுத்தியவன் ஆக்பர் என்பதில் தடையில்லை. ஆயினும், அதற்காக அவன் பட்ட கஷ்டம் கொஞ்சமன்று. ஆக்பரைத் தவிர வேறெவனும் அவ்வளவு மனவுறுதியோடு அவ்வருங் காரியத்தைச் செய்து முடித்திருக்க மாட்டானென்பது திண்ணம். அரசியலறிவும், அனுபவ முதிர்ச்சியும், மாற்றோர் பால் பொறையுங் கருணையும், மிகுதியுமுடைய ஆக்பர் சக்கரவர்த்தித் தன் வாழ் நாட்களில் ஒரு நாளேனும் வீண் போக்காது உழைத்து வந்ததால்தான் அவன் காலத்தில் நாடு பெருமையும், சிறப்பும் வாய்ந்து விளங்கியது.

ஆக்பர், சக்கரவர்த்தியானதும் பஞ்சாபும் டெல்லியுமே அவனது அதீனத்திலிருந்தன. வங்காளத்திலும், கங்கா சமவெளியிலும் ஆப்கானியரின் செல்வாக்கு ஓங்கியிருந்தது. ஹிந்துஸ்தானத்தின் மேற்புறத்தில் இராஜபுத்திரர் சுயேச்சையாய் ஆண்டு வந்தனர். ஆங்காங்கே சிதறிக்கிடந்த சிறு சிறு மாகாணங்களில் தலைமை வகித்து ஆட்சி புரிந்தவர் அநேகர். ஆக்பரின் நிலைமை ஸ்திரப்படுவதற்குப் பல வருஷங்கள் செல்லும். சிற்றரசர்களின் துடுக்கை யடக்கி அவர்களை வெல்வது எளிதன்று.

ஆக்பர் பல நாடுகளைக் கவர்ந்து பெரிய இராஜ்யத்தை ஸ்தாபித்தல்.

முதன் முதல் ஆக்பர் ஆஜ்மீர், க்வாலியர் என்னும் மாகாணங்களைக் கைப்பற்றி லக்னௌ, ஜான்பூர் முதலிய இடங்களை நோக்கிச் சென்று அங்கு நின்றும் ஆப்கானியரைத் துரத்திவிட்டான். ஆக்பர் ஒரு சிறந்த யுத்த வீரன். அவன் மால்வாவின் மேல் சென்று அதைத் தாக்கிப் பின் காண்டிஷிலுள்ள பர்ஹன்புரியைக் கைப்பற்றினன். 1567-ம் வருஷத்தில் இராஜபுத்திரருடன் சண்டையிடத் தொடங்கிச் சித்தூரை முற்றுகை யிட்டான். அவர்களை வென்று தனக்கு அடங்கும்படி செய்வதற்கு ஆக்பர் எடுத்துக்கொண்ட சிரமம் கொஞ்சமன்று. ஐந்து வருஷகாலம் ஆக்பர் அவர்

களைப் போர் முனையில் எதிர்த்து முடிவில் அவர்களைத் தன் ஸ்வாதீனப்படுத்தினன். வங்காளம் 1575ம் வருஷம் ஆக்பரின் ஆட்சிக் கடங்கியது. சக்கரவர்த்தி கூர்ஜாத்தைப் பன்முறை எதிர்த்தும் அது கொஞ்சத்தில் அவனுக்கு அடங்கின பாடில்லை.

ஆக்பரின் சகோதரனன ஹகீம் என்பவன் காபூலுக்கிறைவனாய் அரசுரிமை வகித்து வந்தான். நாளடைவில் ஒரிஸாவும், காஷ்மீரும், ஸிந்துவும், காண்டஹாரும் ஆக்பரின் ஆட்சிக்குப் பணிந்தன. தக்ஷிணத்திலும் சிறிது பாகம் ஆக்பருக்கு அடங்கி அவனது ஆட்சிக்குட்பட்டிருந்தது.

**பைராமின் உதவி.**

இங்ஙனம் சக்கரவர்த்தி ஆதியில் ஒரு சிறிய மாகாணத்திற்குத் தலைமைபூண்டு நாளடைவில் தனது போர்த் திறமையானும், அருமுயற்சிகளானும் பற்பல நாடுகளைக் கவர்ந்து ஒரு பெரிய இராஜ்யத்தை ஸ்தாபித்தான். அவனது தந்தை அகால மரண மடைந்தபோது இளைஞன் இவ்வளவு மேம்பாட்டினை யடைந்து புகழ் பெறுவானென்று ஒருவரும் எதிர் பார்த்திலர். ஹுமாயூன் இறந்தவுடன் கூடிய சபையில் ஆக்பர் இந்தியாவில் தன் பதவியை உறுதிப்படுத்துதல் இயலாதென்றும், முகலாய சேனையைக் காபூலுக்குத் திருப்பிச் செல்வதே நன்மையென்றும் தீர்மானிக்கப்பட்டது. ஆயினும், அத்தீர்மானம் கார்யகர மாகாதபடி பைராம் என்பவன் தன் அபிப்பிராயத்தை வெளியிட்டு ஆக்பருக்கு இந்தியாவில் நாட்ட முண்டாகும்படி செய்தான். பைராம் என்பவன் அறிவும், ஆற்றலும், அநுபவமும் மிகுந்த ஒரு துருக்கி உத்தியோகஸ்தன். அவன் பாபர் காலம் முதற்கொண்டு முகலாயர்க்கு உண்மை ஊழியஞ் செய்து வந்தான். அரச விசுவாசமும், நாட்டபிமானமுமுடைய பைராம்கானே பாலிய தசையிலிருந்த ஆக்பருக்குப் பிரதிநிதியாய்க் கார்யங்களைக் கவனித்து வந்தான். அவன் நாட்டின் நிலைமையைச் செவ்வனே கண்டறிந்தவன். அராஜரிகமும், கலவரமும் நாடெங்கும் அதிகரித்

திருந்தமையே முகலாயர் தமது நிலையை உயர்த்திக்கொள்வதற்கோ ரநுகூலமென்று பைராம் உணர்ந்தான். டெல்லியில் அதிகாரஞ் செலுத்திவந்த ஸிகாண்டரை அந் நகரைவிட் டகற்றித் துரத்தியடிக்க அவன் மணிக்கோட்டை என்னும் குறிஞ்சி நாட்டைக் கைப்பற்றி வலிமை பெற்று விளங்கினான். வங்காளத்தில் சேனைத் தலைமை வகித்துவந்த ஹீமு வென்னும் ஹிந்து படைவீரன் சத்துரு பயமின்றித் துணிவோடும் ஆக்ரா நகர் வழியாகச் சென்று டெல்லியில் டார்டி பேக் என்பவனைத் தோற்கடித்து அந் நகரைக் கைப்பற்றியது மன்றி விக்ரமஜித்தமகாராஜ னென்னும் பட்டம் வகித்து முகலாயரின் படைகளை முறியடிப்பதற்காக முன்னோக்கிச் சென்றுகொண்டிருந்தான்.

முகலாயர் ஹீமுவை பானி பட்டில் சந்தித்தது.

அக்காலத்தில் முகலாய சைந்யத்தின் நிலை பரிதாபகரமா யிருந்தது. நாலாபக்கங்களிலும் சண்டையிட்டு அலுப்புற்று முகல் வீரர் முடிவில் ஆக்பர் தண்டிறங்கியிருந்த சர் ஹிண்டை அடைந்தனர். அச்சமயத்தில் காபூலில் பெருங் கலகமொன்று உண்டானதாகச் செய்தி கிடைத்தது. இந்த நெருக்கடியான நிலையில் அரசனுக்கு உதவி புரிவதற்குப் பைராம் சித்தனாயிருந்தான். பைராம் உத்தம வீரர்க் கின்றியமையா தனவாய தீரமும் வலிமையும் வாய்ந்தவன். போர் செய் முறைகளை நன்றாய் அறிந்திருந்ததுமன்றி அவற்றை அநுஷ்டானத்திற்குக் கொண்டு வருந்திறமை வாய்ந்தவன். அவன் தனது சேனையின் ஒரு பகுதியை முன்னதாக வனுப்பி ஹீமு ஏவிய ஆத்தோமானிய சேனையை மறித்துத் தகையும்படி செய்தான். 1556-ம் ஆண்டில் நவம்பர் மீ 5உ யன்று இருதிறத்தாரும் பானிபட்டு என்னு மிடத்தில் சந்தித்தனர். இந்த ஸ்தலமே இதற்கு முன் ஒருமுறை பாபர் ஆப்கானியரது படையைச் சங்கரித்த காலத்தும், பின்னால் மராட்டியரது செல்வாக்கை ஆமத்ஷா வென்பவன் சிதைத்த காலத்தும் போர் முனையாய்ச் சிறப்புப் பெற்றிருந்தது.

பானிபட் யுத்தம் ஹிமுவின் தோல்வி

பானிபட்டு யுத்தகளத்தில் ஹீமு தன் துப்பாக்கி வீரர்களை இழந்தான். வெடி குண்டுகளும் துப்பாக்கிகளும் பகைவர் வசமாயின. ஆயினும் முகலாயரை விரட்டி யடித்தற்குப் போதுமான சைந்யம் அவனிடமிருந்தது. அவன் தனது சேனையை மூன்று பிரிவுகளாக்கி இடையில் ஆப்கானியரும் இராஜபுத்திரரு மடங்கிய இருபதினாயிரம் குதிரை வீரர்களையும், அவர்க்குத் துணையாக ஐந்நூறு யானைகளையும் நிறுத்தினன். அந்த யுத்தத்தில் ஹீமு கொண்டு வந்து நிறுத்திய யானைகளின் தொகை ஆயிரத்தைஞ்னூறுக்கு மேலிருக்கும். ஹீமுவே முன்வரிசையில் நின்று தன் யானையை முகலாயரது இடப்புறத்தில் செலுத்திப் பகைவரை முறியடித்துப் பின் முகலாய சேனையை இடையிற் சென்று தாக்கினன். அவனது முயற்சி பயன்படவில்லை: ஏனெனின், சிறந்த வில்வீரர் நடுவில் நின்று கணக்கிறந்த சரங்களைத் தொடுத்து வர்ஷிக்கத் தொடங்கினர். கூரம் பொன்று வேகமாய்ப் பாய்ந்து ஹீமுவின் கண்ணைத் தொளைக்க அவன் கீழே வீழ்ந்து மூர்ச்சித்தான். அவனுக்குப் பின் தலைமை வகித்தற்கு வேறெவனு மின்மையின் ஹீமுவின் படைவீரர் களத்தினின்றுங் கலைந்து நாற்புறமுமோடத் தொடங்கினர்.

ஆக்பர் ஹிமுவைப் பொறுத்தல்

ஹீமுவை ஏற்றிச் சென்ற யானையை நேரே செலுத்தி ஆக்பரின் முன் நிறுத்தினர்கள். பிரதிநிதியாகிய பைராம் வாலிபனாகிய ஆக்பர் சக்கரவர்த்தியை நோக்கி, "புறமதப்பதராகிய இச்சண்டாளனை இவ்வாளுக் கிரையாக்கிச் சித்திரவதை செய்து மடியும்" என்று கட்டளையிட்டான். ஆக்பர் ஒரு சிறந்த வீரன்; பகைவரைப் பொறுக்கும் பெருங்குணம் வாய்ந்தவன். அவன் பைராமை நோக்கி, 'படையிழந்து பலங் குன்றி மரிக்கும் நிலைமையிலிருக்கும் இவனது உயிரைச் சிதைத்தலும் வீரமோ?' என்று விடை பகர்ந்து வாளா நின்றிட்டான். மகா வீரனென்று கீர்த்தி படைத்து விளங்கிய பைராம்கானிடமு மில்லாத இவ்வருங்குணம்

படைத்த ஆக்பர் வீரனது பொறையன்றோ பொறையெனப் படுவது?

ஹீமு தொலைந்தபின் ஆக்பரை எதிர்க்கக்கூடிய திறமை வாய்ந்தவர் வெகு சிலரே யென்னலாம். இனி அவன் சென்று பொருது பிறரை வென்றானே யன்றி ஆக்பரைத் தாமாக வந்து எதிர்த்துச் சண்டையிட்டவர் ஒரு வருமிலர். டெல்லியிலுள்ளோர் சக்கரவர்த்தியை ஆவலோடும் மரியாதையோடும் வரவேற்று உபசரித்துத் தமக்குள்ள இராஜ விசுவாசத்தை அறிவித்தனர். ஆக்ராபுரவாசிகளும் ஆக்பருக்குப் பணிந்து அவனது ஆட்சிக் கடங்கினர். அப்பால் ஆக்பர் எட்டுமாதகாலம் சிகாண்டரை வளைத்து முற்றுகையிட அவனும் பணிந்து மணிக் கோட்டையை ஆக்பருக்கு ஒப்புவித்து வங்காளம் நோக்கிச் சென்றான். இந்தியாவின் வடமேற்கு மூலை முழுவதும் ஆக்பருக்குச் சுவாதீனப்பட்டுவிட்டது. அந் நாட்டில் இராஜ நிர்வாகம் சரிவர நடைபெறுதற்கும், நிலத் தீர்வையைப் பற்றிக் கவனித்தற்கும் தகுந்த ஏற்பாட்டினைச் செய்து முடிக்க இரண்டொரு வருஷங்கள் சென்றன. பின் க்வாலியர் கோட்டையைக் கைப்பற்றி ஆக்பர் ஜான்பூர், வாரணாசி வரையிலுள்ள கங்கா சமவெளியை உரிமையாக்கிக்கொண்டான்.

*ஆக்பர் பிறநாடுகளை வென்று உரிமையாக்கல்*

பைராம்கானிடம் ஆக்பருக்கிருந்த மதிப்பு நாளுக்கு நாள் குறைந்து கொண்டே வந்தது. பைராம் இராஜ நிர்வாக வறிவுந் திறமையும் தந்திரமும் மிகுதியுமுடைய ஒரு சிறந்த வீரனெனினும் சிறிது அகம்பாவமுடையவன். அவன் சிறிது கடுமையாக நடந்து கொண்டதைப் பற்றி நாடெங்கும் அவனிடம் அச்சமும் அதிருப்தியும் மிகுந்திருந்தன. அவனது கொடுமையால் பதவி யிழந்தவரும், மாண்டோரும் பலர். அன்றியும் பைராம் ஆக்பர் ஒன்று மறியாத பேதை அல்லன் என்பதையும், சுய புத்தியால் தன் கார்யங்களைத்

*மாஹும் அனகாவின் செல்வாக்கு; பைராமை விலக்க முயற்சி.*

தானே நிர்வகிக்கும் திறமை வாய்ந்தவன் என்பதையும் சிறிதும் உணராமல் அவனைச் சிறுபிள்ளையென் றெண்ணி அலக்ஷ்யம் செய்து வந்தான். பைராம் தனக்குப் புரிந்த உதவியை தன் வாணுள் முழுதும் மறந்திலனுயினும் ஆக்பர் அவனது அதிகாரத்துக் குட்பட்டு நடப்பதற்குச் சம்மதிக்க வில்லை. அந்தப்புர மாதர்களும் ஆக்பரின் மனத்தைக் கலைக்கத் தொடங்கினுர்கள். ஆக்பரின் வளர்ப்புத் தாயான மாஹம் அனகா என்பவள் பைராமிடத்தில் ஆக்பர் காட்டி வந்த மதிப்பையும் அன்பையுங் கண்டு பொறுமல் இளைஞ னுக்கு அடிக்கடி புத்திசொல்லி வந்து அவனது மனத்தைக் கலைக்கத் தொடங்கினுள். ஆக்பர் டெல்லியில் சிலகாலம் பைராமை விட்டுப் பிரிந்திருந்ததையே ஒரு வியாஜமாக்கிக் கொண்டு மாஹம் அனகா ஆக்பரின் உள்ளப் போக்கை மாற்றி அவனுக்குப் பைராமிடம் அவமதிப்பும், வெறுப்பும் உண்டாகும்படி செய்துவிட்டாள். சிறுவனும் அவளுடைய போதனைக்குக் கட்டுப்பட்டுப் பைராமின் சம்பந்தத்தை முற்றிலும் அகற்றிக்கொள்ளத் தீர்மானித்தான். அக் காலத்தில் மாஹம் அனகாவுக்கு இருந்த செல்வாக்கும் அதிகாரமும் இவ்வளவென்று சொல்லிமுடியாது. அரண் மனைக் காரியங்களில் அவளிட்டதே சட்டமாக விருந்தது.

அவள் நாடிய கருத்தும் விரைவிலேயே நிறைவேறி பைராமின் யது. ஆக்பர் இராஜ நிர்வாக வேலையைத் பஹிஷ்காரம். தானே கைப்பற்றிக் கொண்டது மன்றி துரைத்தனம் நேரில் தன் மேற்பார்வையின்பேரிலேயே நடைபெறுமென்று நாடெங்கும் ஓரறிக்கை வெளியிட் டான். அரசுரிமையைத் தன் கைக்குட்படுத்தியதோடு நில்லாமல் பைராம் அதுமுதல் அவன் வகித்துவந்த பதவியி லிருந்து விலக வேண்டுமென்று உத்தரவு பிறப்பித்து அவனை நாட்டினின்றும் பகிஷ்கரிக்கும்பொருட்டு மெக்கா வுக்கு ஸ்தலயாத்திரை செய்து வரும்படி கடிதமொன்று எழுதி யனுப்பினுன். பைராம்கான் ஹுமாயூனுக்கும், பாபருக்கும் மனப்பூர்வமாய் உழைத்து ஊழியஞ் செய்து உதவியவன். அவனுக்கிருந்த நாட்டபிமானமும் இராஜ

விசுவாசமும் அவனது முதுமைப் பருவத்தில் அவனைக் கஷ்டநிலைக்குக் கொண்டுவந்து விட்டன. ஆக்பருக்கும் நெருக்கடியான நிலைமையில் உதவிசெய்து அவனுக்குள்ள அரசுரிமையை ஸ்திரப்படுத்தி அநுகூலம் புரிந்தவன் பைராமே. அப்படி யிருக்க ஆக்பர் இவனுக்குக் கடுந் தண்டனை விதித்தது ஆச்சர்யமேயாம்! ஆயினும், தனக்குள்ள அதிகாரமும், மதிப்பும் பைராம் உள்ளவரையில் குறைந்துவிடுமென் றஞ்சியே ஆக்பர் அங்ஙனம் செய்ய நேர்ந்தது. தான் பெருமையுடன் சக்கரவர்த்தியாய் விளங்குவதற்குப் பைராம் பெருந்தடையா யிருந்தானென்று கண்டே ஆக்பர் அவனுக்கு அத்தண்டனையை விதித்தான். பைராமின் உதவியின்றியே தன் கார்யங்களைச் செவ்வனே நிர்வகிக்கும் திறமை தனக் குண்டென்று அறிவித்தற்காகவே ஆக்பர் பைராமை நாட்டைவிட்டு வெளியேற்றுவதற்குத் தீர்மானித்தான். ஒருவன் ஒரேமாதிரி உன்னத நிலையில் வாழ்நாள் முழுவதும் இருத்தல் இயலாதன்றோ? ஊழ்வினையின் வலியை எதிர்ப்பார் யார்? வயோதிக தசையில் பைராம் கஷ்டப்படவேண்டி வந்தது அவனது தௌர்ப்பாக்கியமேயாம்.

**பைராமின் மரணம்**

பைராம் அரசனாணையைப் பெற்று அரேபியாவுக்குப் போகத் தீர்மானித்துக் கூர்ஜாம் நோக்கிச் செல்கையில் துர்ப்போதகர் சிலர் எதிர்ப்பட்டு ஆக்பருக்கு விரோதமாய்க் கிளம்பிக் கலகித்தால் மீண்டும் இழந்த பதவியைப் பெறுத லெளிதென்றும், அவனுக்குதவியாகப் பலர் போர்புரிய முன் வருவரென்றும் கூறிப் பைராமின் உற்சாகத்தைத் தூண்டினார்கள். பைராமும் அவர்கள் கூறியதை மெய்யென்று நம்பி முகலாய வீரர் சிலரைத் துணைக்கொண்டு கலகம் விளைவிக்க ஆக்பர் கோபங் கொண்டு போர் முனையில் பைராமை முறியடித்தான். பைராமும் தானெண்ணியது நிறைவேறாமற் போகவே தனது அடாத செய்கையை நினைந்து நினைந்து பச்சாத்தாபப் பட்டான். அவனது கழிவிரக்கத்தையும், பணிவையுங் கண்ட முகல்மன்னன் தனக்கியற்கையா

யுள்ள பெருமைக் குணத்தை அவனிடம் காட்டிப் பைராமை மன்னித்தான். ஆயினும், ஆக்பருக்குப் பைராமைத் தன் அரசாங்கத்தில் தகுந்த உத்தியோகங் கொடுத்து நிறுத்திக் கொள்ள இஷ்டமில்லை. அரசனின் கருத்தை அறிந்த பைராம்கான் மனத்தளர்ச்சி யடைந்து மெக்கா நகரம் செல்வதற்குப் புறப்பட்டான். வழியில் அவனுடைய வைரி யொருவன் பழையதுவேஷத்தை மேற்கொண்டு பைராமைக் கொலை செய்துவிட்டான். ஐயோ பாவம்! பைராமின் விதி இருந்தாவாறென்னே! அருங்குணங்கள் வாய்ந்து அரசியல் முறை யறியுமாற்றல் மிகுந்த அமைச்சனுக்கு இம்முடிவோ ஏற்படவேண்டும்! அவனது துர்மரணத்திற்குப், துர்த்தசைக்கும் ஆக்பர் காரணமென்பதற்குத் தடையுண்டோ?

மாஹம் அனகாவின் செல்வாக்கு ஒடுங்குதல்.

மாஹம் அனகாவின் செல்வாக்கும் வெகுகாலம் நிலைத்திருக்கவில்லை. பைராம் மரித்த சிலகாலம் வரையில் மாஹம் அனகாவே ஆக்பரின் முதன் மந்திரிப் பதவியை யேற்று அரசியல் முறைகள் யாவற்றினையுங் கவனித்து வந்தாள். அவளது மதி நுட்பத்தையும், அரசியலாற்றலையுங் கண்ட ஆக்பர் அவளது திறமையை வியந்து கொண்டாடி அவளை மேன்மைப்படுத்ியதுமன்றி அவளுக்கு இராஜ நிர்வாக சுதந்திரங்களெல்லாவற்றையுங் கொடுத்துவிட்டான். ஆயினும், தனக்குக் கிடைத்த பாக்கியத்தை அவளால் அநுபவிக்க முடியாமற்போயிற்று. அவளுக்கு **ஆதம்கான்** என்றொரு புதல்வனிருந்தான். தாய்க்குப் புத்திரனிடத்திலுள்ள வாஞ்சையின் மிகுதியால் அவனது குணக்கேட்டினையும், உரிமை யின்மையையுங் கவனியாமலே மாஹம் அனகா இராஜரிகத்தில் உயர் பதவியொன்றளித்து அவனுக்கு மேன்மேலும் சௌகர்யங்கள் பலவற்றை ஏற்படுத்திக் கொடுத்தாள். அக்குமாரனோ ஒரு வகையானும் அப்பதவியை வகித்தற்குப் பாத்திரனல்லன். அவன் மிகவும் அகம்பாவமுடையவன்; நேர்மையறியாதவன்; நடுநிலை தப்பித்தன் சோம்பேறித்தனத்தால் பிறரை ஆபத்

திற் சிக்ஷிக்கும் வன்னெஞ்சமுடையவன். மந்தமதியும், தீயொழுக்கமு முடைய அக்கயவனுல் துன்புற்ருேரும் அவதிப்பட்டோரும் பலர். கேவலம் தன் தாயின் அபிமானத்தால் மாத்திரம் அவன் முன்னுக்கு வந்தானே யன்றி தன் திறமையாலும் குணத்தாலு மன்று. அவன் தன் பொருமைக் குணத்தால் தன்னின் உயர்ந்தோர்பால் வைரங் கொண்டு அவர்களைத் தொலைத்தற்கு வேண்டிய சூழ்ச்சிகள் செய்து பலரை ஒடுக்கி வந்தான். அவனது துர்ப்புத்தியாலும், அழுக்காறு முதலிய தீயகுணங்களாலும் தனக்கும் தன் தாய்க்கும் அழிவைத் தேடிக்கொண்டே வந்தான்.

ஆதம்கானின் அடாத செய்கை; அரச தண்டனையால் அவன் இறந்தல்; அனகாவின் மரணம்.

அரசனுக்கு ஆதி முதல் தந்தைபோல் உதவி புரிந்து தன் அறிவாலும், ஆற்றலாலும், அனுபவத்தாலும் பிரதானி பதவியை வகித்து வந்த **ஷாம்ஸ் உத்தீன்** என்பவனைத் தொலைக்கக் கங்கணங் கட்டிக்கொண்டு அனகாவின் குமாரன் ஒருநாள் திடீரென்று நிராயுதபாணியாயிருந்த அம்மந்திரியைத் தாக்கி யெதிர்த்துக் கொன்று விட்டான். அக்கொலைஞன் அதோடமையாமல் தான் செய்த சதியை நினைந்து உண் மகிழ்ந்து செருக்குடன் அவ்விடத்திற்றனே நின்று கொண்டிருக்கையில் சக்கரவர்த்தி அவ்விடம் வந்து இரத்தமுங் கையுமாய் நின்று கொண்டிருந்த கொலைஞனைக் கண் டாற்றது, செய்தியின்னதென் றறிந்து ஒரு க்ஷணமுந் தாமதியாது அக்கயவனை நையப் புடைத்துத் தன் சேவகர்களை விளித்து அப்பாவியை உடனே கூட்டிச்சென்று மதிண்மேலிருந்து உருட்டிக் கொன்று விடும்படி கட்டளை யிட்டான். இங்ஙனம் தன் மகன் மாண்டதைக் கேள்வியுற்ற மாஹம் அனகா புத்ர சோகத்தால் மனமுடைந்து நாற்பது தினங்களுக்குள் உயிர் துறந்தாள்.

ஆதம்கானின் செல்வாக்கின் கீழ் நடந்த அக்கிரமங்கள்.

ஆதம்கானின் துர்க்குணங்களாலும் கொடுஞ் செயல்களாலும் ஆக்பருக்குக் குடிகளிடமிருந்து அன்பையும் நன்மதிப்பையும் பெறமுடியாமற் போயிற்று. ஆதம்கான் சுயநலப் பிரியன்; மாதர் வலைப்பட்டுச் சிற்றின்பத்திலேயே பெரிதும் நாட்டமுடையவன். அவன் மாளவஞ் சென்று அவ்விடத்தில் ஆட்சி புரிந்து வந்த ஆப்கானிய கவர்னரான பாஸ் பஹதூர் என்பவனை எதிர்த்து அவனை அந்நகரை விட்டுத் துரத்திவிட்டான். ஆதம்கான் நகரில் பிரவேசித்துப் பிரஜைகளைத் தன் மனம் போனபடி துன்புறுத்தி வாட்டி அவமானத்துக்குட்படுத்தினன். பாஸ் பஹதூரைச் சேர்ந்த ஸ்திரீகளில் ஒருத்தியிருந்தாள். அக்காலத்தில் இந்தியாவில் விளங்கிய ரூபவதிகளுள் அவளே சிறந்தவளென்று பேர் படைத்திருந்தாள். பாஸ் பஹதூரை அடித்துத் துரத்தி விட்டு அவளை எப்படியாவது தன் வசப்படுத்திக்கொள்ள வேண்டுமென்று ஆதம்கான் விரும்பினன். ஆனால், அம்மாதோ வெகு தந்திரசாலி; பெண்ணானாலும் அஞ்சாநெஞ்சம் படைத்தவள்; யுக்தியும், சமயோசிதவறிவும், ஆற்றலும் அவளுக்குண்டு: நிறைந்த ஞானமுடையவள்: ஹிந்தி பாஷையில் தேர்ந்த பாண்டித்திய மடைந்து அம்மொழியில் அவள் எழுதிய கவிகளால் புகழ்பெற்றவள். மற்றும் பலவகை நலன்களும் படைத்துள்ள அப்பெண்மணி ஆதம்கானின் கைகளிற் சிக்கிக்கொண்டாள். ஆதம்கான் நயத்தாலும், பயத்தாலும் அவளைத் தனக்குரிமையாக்கிக் கொள்ள நினைத்தான். அவள் அவனை ஏமாற்றி அவனிடமிருந்து தப்புவது முடியாத காரியமென்று கண்டு நாளொன்று குறிப்பிட்டு அன்றிரவு தான் அவனைப் பார்த்து உரையாட இணங்குவாக அவனுக்கு அறிவித்தாள். குறித்த தினத்தில் விலையுயர்ந்த நகைகளாலும், பட்டாடைகளாலும், தன்னை அலங்கரித்துக்கொண்டு கலவைப் பநிநீர், அத்தர், முதலிய வாசனைத் திரவியங்களால் பரிமளம் வீச அன்னமென்னடை நடந்து, தன் அறையில் புஷ்ப சயனம் போன்ற இலவம் பஞ்சமளியில் தன் முகம் தெரியாதபடி முன்தானையால் இழுத்து

மூடிப் படுத்துக் கொண்டாள். அவளுடைய தோழியர் அவள் தூங்கினளென்று நினைத்து காமப் பேய் பிடித்த கான் வந்ததும் அறையுள் நுழைந்து அவளை எழுப்ப முயன்றனர். அவள் அப்பாவியின் மோசக் கருத்துக் கிணங்குவதினும் இறப்பதே மேலென்றுன்னி நஞ்சுண்டு தன் உயிரைப் போக்கிக் கொள்ளத் துணிந்து அங் கணமே விஷத்தை யுட்கொண்டு அவ்வறையில் சென் றிருந்தாள். சேடியர் தமது முயற்சி வீணானது கண்டு கானைக் கூப்பிட்டுப் பார்க்கையில் அவன் அவள் விழியாத் துயில் கொண்டிருத்தலை நோக்கித் தான் ஏமாந்ததை எண்ணி யெண்ணி மனம் புழுங்கினன். சக்கரவர்த்தி இதை அறிவனாயின் தன் கதி யாதாமோ வென்றஞ்சி ஆதம் கான் பாஸ் பஹதூரின் அரண்மனையிலிருந்த ஸ்திரீகளைக் கைதிகளாக்கினன். ஆக்பரின் செவிகளுக்கிவ் விஷயம் எட்டியவுடன் அவன் கடுங்கோபங் கொண்டு உடனே திவ்யப் புரவியொன்றிலேறித் தாமதமின்றி விரைந்து மாளவம் வந்துசேர்ந்தான். தனக்கடங்கிய உத்தியோகஸ்தன் செயற்கரிய கொடுஞ் செயல்களைப் புரிந்து தன் ஆட்சிக்கு ஒரு குறைவை யுண்டு பண்ணுவதைக் கண்டு ஆற்றாதவனாய் ஆக்பர் ஆதம்கானைப் பிடித்துத் தண்டிக்கத் தீர்மானித்தான். ஆதம்கானின் தாயோ வெகு கெட்டிக் காரி. இடுக்கண் உற்றவிடத்துச் சிறிதும் சோர்வடையாள். சிறைக்கோட்டத்தில் கைதிகளாயிருந்த மாதர்களால் ஆக்பர் உண்மையறிந்தால் தன் புதல்வன் உயிர் தரியாதென்று கண்டுகொண்டு அவள் சக்கரவர்த்தி வருமுன்னமே இரகசியமாய்ச் சென்று பெண் கைதிகள் யாவரையும் சிறிதும் இரக்க மென்பதின்றி வதைத்து வாளுக்கிரையாக்கி விட்டாள். ஆக்பர்வந்து உண்மை யறியமாட்டாமல் ஆதம் கானை அச்சமயம் ஒன்றும் செய்யாமலே திரும்பிவிட்டான். தன் மந்திரி ஷாம்ஸ் உத்தீனுடைய உயிரை அக்கயவன் கவர்ந்த மாத்திரத்தில் ஆக்பர் அப்பாவியைத் தண்டித்துத் தொலைக்க வழி யேற்பட்டது. தாயும் மகனும் ஒரே வழி

அனகாவின் புத்திர யாத்திரை

யாய் மாண்டது நாட்டிற்கு எவ்வளவோ நன்மையை விளைவித்த தென்னலாம். ஆக்பரும் ஸ்திரீகளுக் குட்பட்டு அவர்களது கருத்தின்படி இராஜரிகம் புரிதற்கும் முடிவு ஏற்பட்டது.

**ஆக்பரின் குணாதிசயம்**

ஆக்பருக்கு இன்னும் வாலிபம் கழியவில்லை. உலகானுபவமும் போதுமானவளவு உடையவனல்லன். பிற்காலத்தில் அவனுக்குப் பெரும் புகழையும், நற்பெயரையும் உண்டாக்கிய நற்குணங்கள் அவனது இயல்பான குணங்களேயாம். அநுபவ முதிர்ச்சியால் அக் குணங்களும் வளம்பெற்று வலிமைகுன்றாது வளர்ந்துகொண்டே வந்தன. அவனது கூரிய மதியும், தாராள நோக்குமே அவனது மனத்தைப் பண்படுத்தி அவனது மதக் கொள்கைகளுக்கும் அரசியலுக்கும் காரணமா யிருந்தன. தன் காரியங்களில் முழு நம்பிக்கையும் பெருந்தன்மையும் அவனுக்குச் சுபாவமா யமைந்துள்ள குணங்களாம். பைராம் பானிபட் யுத்தம் முடிவு பெற்றதும் ஹீமுவைக் கொல்லும்படி அவனது உற்சாகத்தைத் தூண்டியபோது அவன் வழிப்படாது தன் இயற்கைக் கருணையைக்காட்டிப் பகைவனை மன்னித்த வகையும், தனக்கு விரோதமாகக் கிளம்பிக் கலகம் விளைவித்த பைராமைத் தண்டியாமல் தந்திரமாக அவனை உத்தியோகத்தினின்றும் விலக்கி மெக்காவுக்குச் செல்லும்படி உறுதியான கட்டளையிட்டதும், ஆதம் இழைத்த அநீதங்களைக் கடிந்து அவனடையவேண்டிய தண்டனையை அவனுக்கு விதித்ததும் ஆக்பரின் நடுவு நிலைமையையும், உத்தம குணத்தையும் விளக்குவதற்குப் போதிய சான்றாகும். அவனது குமாரனான ஜிஹாங்கீர் ஆக்பரின் தேகவமைப்பையும், உருவத்தையும் விரித்துரைக்கு மிடத்துத் தன் தந்தை நடுத்தர உருவமும், நீண்ட கரங்களும், வலுத்த உறுப்புக்களும், பரந்த நெற்றியும், கறுத்து நீண்ட புருவங்களுக்குக் கீழே பொருந்திய கூரிய கண்களும் உடையவனாய் மாநிற மேனியமைந்தவனென்று வர்ணித்திருக்கிறான். அவனது நாசியின் இடது புறத்தில் அதிர்ஷ்ட சூசகமும், மிகவும் அழகு செய்வது

மாகிய மச்சமொன்றிருந்தது. அவனது தேகக்கட்டையும், உடற் பொலிவையும், முகவழகையும் பார்த்தவர் யாவரும் மோகித்து இன்பமடைவர். தன் வடிவழகாற் பிறரைத் தன் வயப்படுத்துவதற்கேற்ற இன்மொழியையும், மணியைப்போலொலிக்கும் குரலினையும் படைத்திருந்தான். கல்விப் பழக்கம் சிறிதே யுடையவனாயினும் அவன் பேசுவதிற் சதுரன். தன் சம்பாஷணையால் பிறரை வசிகரிக்கும் வன்மையை மிகுதியும் உடையவன். சமயோசிதமாய்ப் பேசிக் கேட்போர் மனத்தை உருகச்செய்யும் மதுரமொழியாளன். வித்வான்கள் பலர் காலஞ்செல்வ தறியாமலே அவனது சம்பாஷணத்தில் மயங்கிக் கிடப்பர். பிறரிடம் காணமுடியாத அற்புதசக்தி அவனிடம் பொருந்தியிருந்தது. அவனுடைய பழக்கங்களும், கார்யங்களும் மிகவும் ரஞ்சகமானவை. அவனது வதனத்தில் விளங்கிய ஒளியிலிருந்து அவன் கடவுளின் அநுக்ரஹத்துக்குடையவன் என்பது வெளியாகும். ஆசாரங்களிலும், நடத்தைகளிலும் தான் நிர்ணயித்து எற்படுத்திக்கொண்ட நெறிகளிற் சிறிதும் பிறழாதவன். தினசரி கிருத்தியங்களை முறை தவறாது செவ்வனே செய்து வந்தான். காலத்தின் அருமையை நன்கறிந்தவன். அதற்குத்தக தனக்கும் பிறர்க்கும் உபயோகமான வேலைகளிலேயே ஊன்றிய கருத்துடையவனாய் ஒரு நிமிஷமும் வீண் காலங் கழியாது உழைத்து வந்தான். தினந்தோறும் அவன் நித்திரையிற் கழித்தது சொற்ப காலமே. உறங்கும்போதும் விழித்திருப்பவன் போலவே காணப்படுவான். ஆகார விஷயங்களிலும் நியமந்தவறாதவன். காலமும் அளவும் அறிந்து சாத்விக குணத்தை விருத்தி செய்யும் உணவை உண்பான். நாளைக்கு ஒரு வேளைக்கு மேல் சாப்பிடும் வழக்கம் ஆக்பருக்கில்லை. மதியை மந்தித்து விடக்கூடிய பானங்களை அவன் கண்ணெடுத்தும் பார்த்ததில்லை. கங்காநதியின் குளிர்ந்த நீரே அவனுகந்த நற் பானமாம். அந்நீருள் நஞ்சு கலவாதபடி அதை ஒரு சுத்த பாத்திரத்திற் பெய்து ஜாக்கிரதையாய் மூடி வைத்து வேண்டியபோது எடுத்து உபயோகிப்பான். மாம்சத்தை வாரத்திற் கிருமுறைக்கு மேல் உபயோகித்ததில்லை.

தன் தேகத்தை விலங்குகளைப் புதைக்கும் கல்லறையாக்கிக் கொள்ளத் தனக்கு விருப்பமில்லை யென்று ஆக்பர் அடிக்கடி சொல்லுவதுண்டு. தன் சரீர சுகத்தின் பொருட்டு மாமசத்தை அடியோடு ஒழிக்க அவனுற் கூடாவிட்டாலும் அதில் அவனுக்கிருந்த வெறுப்பு இவ்வளவென்று சொல்லி முடியாது. ஆக்பர் நல்ல உழைப்பாளி; வேலையில் அவனுக்கிருந்த ஊக்கமும், சோர்வின்மையும் அதிசயிக்கத் தக்கவையாம். தன் முழு பலத்தையும் உபயோகித்து நீடித்து வேலை செய்வதில் ஆர்வம் மிகுதியும் உடையவன். காளையர் பயிலும் வீரத் தொழில்களிலும், விளையாட்டுக்களிலும் வல்லவன். போலோ விளையாடுகையில் அவனுக்கிருந்த உற்சாகத்தை இவ்வளவென்று சொல்லி முடியாது. அவனுக்கு அதிலுள்ள அபிநிவேசத்தால் இராக் காலங்களிலும் வெகு நேரமளவும் ஆடுவது வழக்கம். அவன் வேட்டை யாடுவதில் மிகுந்த பிரியமுடையவன். சைந்யங்களை ஒரு களத்திலிருந்து வேறென்றுக்குச் செலுத்துங்கையில் சலிப்புற்றால் சைந்யத்தை அப்படியே வழியில் நிறுத்தி யானைகளையும் வேங்கைகளையும் வேட்டையாடத் தொடங்கி விடுவான். ஒரே தினத்தில் முன்னூற்றைம்பது யானைகளை வேட்டையில் ஆக்பர் பிடித்திருப்பதாகக் கேள்விப்படுகிறோம். தான் உபயோகித்த துப்பாக்கிகளுக்கு முறையே பெயரொன்றிட்டு ஒவ்வொன்றி னுதவியால் தான் புரிந்த அரிய செயல்களைக் குறித்திருக்கிறான். மான்கள், நரிகள், முதலிய காட்டு மிருகங்களை வளைத்து ஆயிரக்கணக்காக ஓரிடத்திற் கூட்டி ஆக்பர் வேட்டையில் அவற்றைச் சுட்டும் குத்தியும் கொல்வான். தன்னைப்போன்ற ஆர்வம் மிகுந்தவரை உற்சாகப்படுத்தி வேட்டை யாடும்படி ஏவி அதைக் கண்டு அளவில்லாத களிப்பை அடைவான். இவ்வகையான வேட்டைகள் இராக் காலங்களிலும் நடந்ததாகக் குறிக்கும் சித்திரமொன்று இப்போதும் காணப்படுகிறது. படைக்கலப் பயிற்சியில் ஆக்பர் தேர்ச்சி பெற்றிருந்ததுமன்றி அவன் தனது சாமர்த்தியத்தால் ஆயுதங்களைச் செய்வதற்கு நூதன முறைகளையுங் கண்டுபிடித்திருக்கிறான். வெடிக்கும்போது விரிந்து உடையாதபடி வட்ட வடிவமான துப்பாக்கிகளைச்

செய்வதற்கு ஒரு புதிய வழியை ஆக்பர் கண்டு பிடித்தான். ஒரே காலத்தில் பதினாறு துப்பாக்கிக் குழாய்களைச் சுத்தி செய்து துலக்கக்கூடிய ஓரியந்திரத்தையும், பதினேழு துப்பாக்கிகளை ஏககாலத்தில் நெருப்பு வைத்து வெடிக்கச் சாதனமாயுள்ள ஓரியந்திரத்தையும் ஆக்பர் கண்டு பிடித்தான். தன் நுண்ணறிவால் அவன் கண்டு பிடித்த விஷயங்களும், கையாண்டு வந்த யுத்த முறைகளும் இன்னும் பல வுள.

ஆக்பரின் தேக வன்மையும், விடா முயற்சியும்.

ஆக்பர் சோம்பேறியாய் ஒருநாளும் இருந்ததில்லை: எவ்வகையான வேலையிலும் அவன் களைப் படைந்ததில்லை. ஒரு பகலும், ஓரிரவும் விடாது சவாரி செய்து ஆஜ்மீரிலிருந்து இருநூற்று நாற்பது மைல்கள் தூரமுள்ள ஆக்ரா நகருக்குச் சென்றதாகச் சரித்திரங்கள் கூறும். குதிரைகள் நாற்கால் பாய்ச்சலாய் வாயுவேக மனோவேகமாய் ஓடுங்காலத்தும் காட்டு வழியில் இராக்காலங்களில் அவற்றைச் சாட்டையால் அடித்துத் தூக்கிச் செல்வது வழக்கம். யுத்தத்தில் ஆக்பர் அதிக வீரா வேசமுடையவன். சம பலமுள்ள இரு திறத்தார் ஆவேசத்தோடு போர் புரிவதைக் காணும்போது அவனுக்குண்டான சந்தோஷம் இவ்வளவென்று சொல்ல முடியாது. ஒரு சமயத்தில் தானேசுவரத்தில் திருவிழாவொன்று நடந்தது. புண்ய தீர்த்தக் கரையில் ஆயிரக் கணக்கான ஜனங்கள் குழுமியிருந்தார்கள். மதாபிமானம் நிறைந்த வைதிகர் பலர் வழக்கம்போல் நீர்த்துறையில் ஸ்நாந கட்டத்தை நெருங்கிக்கொண்டிருந்தனர். வருஷா வருஷம் அந்நகரில் இத்திருவிழா நடக்கும். எப்போதும் நீர்த் துறை விஷயமாய் வைதிகர்க்குள் போர் நிகழ்வது வழக்கம். நீராடு மிடத்தை முதலிற் பற்றுவதியார் என்பதைப்பற்றி நிகழும் வாதம் சிற்சில சமயங்களில் பெருஞ் சண்டையாய் முடியும். மதாவேசத்தால் நேரும் விவாதங்கள் முடிவில் தீராக்கோபத்துக் குள்ளாக்கிக் கட்சிகளை ஏற்படுத்திப் பெரும் போரை விளைவிப்பது இயற்கையே யன்றோ?

தானேசுவரத்தில் ஸ்நாந கட்டவுரிமைப் போராட்டம் நடக்கையில் ஆக்பர் அக் காட்சியைக் காணச் சந்தர்ப்பம் வாய்ந்தது. இருதிறத்தாரும் சமாதானத்துடன் ஒரு முடிவிற்கு வரக்கூடாமையால் அங்கு விஜயம் செய்திருந்த சக்கரவர்த்தியினிடம் சென்று தமது சச்சரவைத் தீர்த்து வைக்கும்படி வேண்டிக்கொண்டார்கள். பிரதி வருஷமும் நடப்பதுபோல் போரில் தம் புய வலிமையால் அவ்விவாதத்தைச் சாதித்துக்கொள்ள அநுமதியளிக்கும்படி அவர்கள் சக்கரவர்த்தியைப் பிரார்த்தித்தார்கள். ஆக்பர் அவர்கள் இஷ்டத்திற் கிணங்கிச் சம்மத மளித்ததுமன்றி தன்னுடன் வந்த போர்வீரர்களிற் சிலரை பலங்குன்றிய கட்சியிற் சேர்ந்து போர்புரியும்படிக் கட்டளையிட்டுப் பின் நடந்த யுத்தத்தைக் கண்டு மகிழ்ந்தான். சண்டை மும்முரமாய் நடந்தது: அதில் பலர் உயிர் துறந்தனர்; பலர் காய மடைந்தனர். இக்காட்சியை நேரிலிருந்து கண்டு ஆக்பர் அடைந்த ஆநந்தத்தை இவ்வளவென்று சொல்ல முடியாது.

ஆக்பர் ஆலி கூலிகானைப் போரில் வெல்லல்.

போர்முனையில் ஆக்பர் சளைத்துப் பின் வாங்கினான் என்பதே கிடையாது. ஆலிகூலிகான் ஸமான் என்னும் உஸ்பெக் தலைவனொருவன் ஆக்பரின் சகோதரனான ஹகீமின் பெயரைச் சொல்லிக் கொண்டு ஓயாது கலகித்து ஆக்பருக்குச் சதா தொந்தரவு விளைவித்துக்கொண்டிருந்தான். ஆக்பர் தனக்கியற்கையாயுள்ள கருணையைக் காட்டி அவனைப் பல தடவைகளில் மன்னித்திருந்தும் அவன் அடங்கினபாடில்லை. முடிவில் ஆக்பர் தனது பொறுமையை யிழந்து அவனை எதிர்த்துச் சிதற ஓட்டியதோடு நில்லாமல் அவனைத் தன் சைந்யங்கள் பின் தொடரத் துரத்திக்கொண்டே சென்றான். அவன் சென்ற வேகத்தால் அவனைத் தொடர்ந்து வந்த வீரரிற் பெரும்பாலார் முன் செல்ல முடியாமற் பின் வாங்கி நின்று விட ஆக்பர் அஞ்சி மிகுந்த ஐந்நூறுபேர்களோடும், சில யானைகளோடும் பகைவனைத் தாக்க நிச்சயித்தான். தனது

பலக் குறைவை அவன் சிறிதும் கவனித்தவ னல்லன். அப்போது நடந்த சண்டையில் அவன் தானே தலையிட்டுக் கொண்டு சளைக்காமல் போர்புரிந்தான். சண்டை நீடித்தது. வீரர் ஒருவரை யொருவர் யுத்தவெறி கொண்டு வதைத்து வீழ்த்தினர். ஜயாபஜயம் இன்னருடையதென்று சொல்ல முடியாத நெருக்கடியான நிலையில் ஆக்பர் தன் யானை மீதிருந்திழிந்து புரவி யொன்றன்மேல் ஆரோகணித்துக் கொண்டு தனது யானைகளை ஆலிகூலிகானின் சைந்யத்தினிடையே செலுத்தும்படி படைவீரர்க்குக் கட்டளையிட்டான். அவர்களும் சக்கரவர்த்தி கூறியவண்ணம் செய்ய ஹீராநந்தனென்னும் அவ் யானை பகைவர் நடுவிற் புகுந்து உயிர்ச்சேதம் விளைக்கத் தொடங்கியது. அதைக் கண்டாற்றுது கான் டையாறு வென்னும் தனது யானையை ஹீராநந்தனின்பேரில் ஏவிவிட இரண்டு யானைகளும் ஒன்றையொன்று ஆத்திரத்துடன் எதிர்த்துத் தாக்கின. ஹீராநந்தனே, டையாறுவின்மேற் பாய்ந்து தாக்கிக் குத்திக் கீழே வீழ்த்தியது. அதே சமயத்தில் ஆலிகூலிகானின்மீது அம்பொன்று பாய்ந்து பலத்த காயத்தை யுண்டாக்கியது. அவன் அவ் வம்பைத் தேகத்திலிருந்து பிடுங்கி எடுக்க முயல்கையில் இன்னெரு அம்பு அவன் ஆரோகணித்திருந்த குதிரையைத் தாக்க அது தன் நிலைபெயர்ந்து ஆலிகூலியைக் கீழே வீழ்த்தியது. அப்போது முகலாயர் சைந்யத்திலிருந்து நரசிங்கமென்னும் வேழம் ஒன்று வேகமாய் வந்து கீழே மூர்ச்சித்துக் கிடந்த ஆலி கூலியைத் தன் காலால் மிதிக்கத் தொடங்கியது. ஆலி கூலி கண் விழித்துத் தன் அபாய நிலையை ஒருவாறு அறிந்து அவ் யானைப்பாகனை நோக்கி, "நான் யார் என்பதை நீ அறிவை யன்றோ? ஆகையின் நீ என்னை உன் சக்கரவர்த்தியினிடம் உயிரோடு கூட்டிச் செல்வாயாயின் நீ அவனது சன்மானத்தைப் பெற்றுப் போற்றப்படுவாய்" என்று கூறினன். ஆனல், அப்பாகன் அவ்வுரைகளைச் சிறிதும் பொருட்படுத்தாமலே தன் யானையை அவன் மீதோட்டி அவனைக் கொல்வித்தான். அங்ஙனம் யானை மிதிக்க உயிர் துறந்தோர் பலர். அக்காலத்துப் பகைவரைத் தண்டிப்பதற்கு இது ஒரு முறை

யாய் வழங்கி வந்தமையின் ஆக்பரும் அதனைப் பின் பற்றிப் பலருயிரைக் களத்தே மாய்த்தனன். தன்னுடன் போர் புரிதற்கரிய ஆற்றலின்றி நிராயுதபாணியராய் போர் முனையில் இளைத்தோருடன் சண்டையிடுதல் அவனுக்கு இயல்பன்றாயினும் தன்னைப் புறங்கொடாது வீரத்துடன் எதிர்த்துப் பொருதோரைத் தைமூரைப் போலவே ஆயிரக்கணக்காக வெட்டிக் குவிப்பதற்குச் சிறிதும் பின்னிடான். அமர்க்களத்தில் பொருங் காலத்து அவன் முகத்தில் சினத்தால் தீப் பொறி பறக்கும். கோப மிகுதியால் தான் செய்வ தின்னதென் றறியான். ஒரு சமயத்தில் அரண்மனைக் காவலனொருவன் தன் கடமையிற் றவறி இராக்காலத்தில் தூங்கிவிட்டதைக் கண்ட ஆக்பர் சக்கரவர்த்தி மிகவும் வெகுண்டு அவனைக் கூட்டிச் சென்று கோட்டையின் மீதிருந்து கீழே புரட்டித் தள்ளிக் கொன்று விட்டான். ஆயினும், பொதுவாய் நோக்குமிடத்து ஆக்பர் பகைவரிடத்தில் கருணை காட்டி அவர் பிழையைப் பொறுக்குங் குணம் வாய்ந்தவனென்றே கொள்ளவேண்டும்.

சூரத் அக்பர் வசமாகியது. கி. பி. 1591

1572ம் வருஷத்தில் சூரத்தில் சக்கரவர்த்தியின் உறவினரான மீர்ஸாக்கள் அவனை எதிர்க்கையில் ஆக்பர் காட்டிய ஊக்கத்தையும், தைரியத்தையும் இவ்வளவென்று சொல்லி முடியாது. தனது சைந்யத்தை முன்னிட்டு வேகமாய்ச் சென்று ஆக்பர் சக்கரவர்த்தித் தன் பகைவரை மஹீந்த்ரி நதிக்கரையில் சந்தித்தான். அப்போது அவனுக்குத் துணையாயிருந்த வீரர் நாற்பதின்மரே. அறுபது புதிய வீரர் வந்து சேர, ஆக்பர் நூற்றுவரையும் துணைக்கொண்டு அந்நதியை நீந்தி அக்கரையிலுள்ள நகரையடைந்தான். அதற்கு முன்னரே பகைவர் அங்குள்ள மைதான மொன்றில் தண்டிறங்கி யிருந்தனர். அவர்களின் தொகையோ பதின்மடங்கு அதிகரித்திருந்தது. இருதிறத்தினர்க்கும் நிகழ்ந்த கடும் போரில் ஆக்பர் பட்ட கஷ்டம் கொஞ்சமன்று. ஆக்பரின் படைவீரர் முட்கள் செறிந்திருந்த ஓர் குறுகிய வழியில் நின்று போர்புரிய வேண்டி

யிருந்தது. அவ்விடை வழியில் மூவர் தாராளமாய் நிற்ப தும் அசாத்தியம். முன் வரிசையில் ராஜா பகவான் தாஸைப் பக்கத் துணையாகக் கொண்டு ஆக்பர் நின்று கொண்டான். எதிரியைச் சேர்ந்த குதிரை வீரர் மூவர் ஆக்பரை எதிர்க்க லாயினர். ஒருவன் வந்து ராஜா பகவான் தாஸை எதிர்க்கப் பகவான் தாஸ் சினந்து தனது ஈட்டியால் அவனைக் காயப் படுத்தினன். வீரனும் முட்களுக் கிடையே அகப்பட்டுக் கொண்டபடியால் ஒன்றுஞ் செய்ய முடியாமல் புறங் கொடுத்து ஓடவாரம்பித்தான். மற்ற வீரரிருவரும் சக்கர வர்த்தியை எதிர்த்தனர். ஆக்பர் சிறிதும் சோர்வடையாது அவர்களுடன் போர் புரிந்ததைக் கண்டு அவ் வீரர் தாமே தம் முயற்சியிற் சலித்துப் பின் வாங்கினர். இரண்டு உத்தி யோகஸ்தர் ஆக்பருக்குச் சகாயமாய் முன்வரச் சக்கரவர்த்தி அவர்களது உதவியைச் சிறிதும் நாடாதவனாய்த் தன்னை யெதிர்க்க முடியாமற் பின் வாங்கிய வீரரிருவரைத் தாக்கிப் பிடித்து வரும்படி அவர்களுக்குப் பணித்து அனுப்பினன். ஆக்பர் மிகவும் அபாய நிலையில் சிக்கிக்கொண்டதைக்கண்ட படைவீரர் வீராவேசங்கொண்டு பொருது பகைவரை முற்றி லும முறியடித்துத் துரத்தலாயினர். ஆக்பரின் மனவுறுதி யைக் கண்ட வீரரின் ஊக்கமும், உற்சாகமும் குன்றாது பெருகி வரவே முடிவில் முகலாயரே வெற்றி பெற்றுக் களிப் புடன் பரோடாவுக்குச் சென்றனர். அவ்விரண்டாண்டுகளி லும் நடந்த போரில் ஆக்பர் ஆமதாபாத்தைக் கைப்பற்றிக் காம்பே, பரோடா முதலிய நகர்களில் யாதொரு தடையு மின்றிப் பிரவேசித்தது மன்றி சூரத்திலுள்ள சிறந்த கோட் டையையும் தனக்கு உரிமையாக்கிக் கொண்டனன். சூரத் என்பது அக்காலத்தில் பிரபலமான கோட்டையாய் இருந் தது. போர்த்துக் கேசியரை அதனுள் வரவொட்டாது தடுக்கவேண்டி அதை வெகு திறமையோடுங் கட்டி யிருந்த னர். துருக்கி தேயத்து ஸுலைமான் மகிபனுக்குச் சொந்த மானவையும், அவனது பெயர் தீட்டப் பெற்றவையுமான சில பீரங்கிகள் அக்கோட்டையுள் இருந்தன. 1591ம் ஆண்டில் ஆக்பர் காத்தியவாரிலுள்ள ஜுனகாரேன்னுங் கோட்டையைப் பிடித்த காலத்தும் துருக்கி ஸுல்தானுக்

குச் சொந்தமான துப்பாக்கி யொன்றை அதிற் கண்டான். ஸுல்தானது கப்பற் படைகள் சூரத்திலுள்ள கோட்டைகளைத் தாக்கி அவற்றைக் கைப்பற்ற முடியாமல் தனது துப்பாக்கிகளை ஆங்காங்கே விட்டு நீங்கியிருத்தல் வேண்டுமென்பது இதனால் நன்கு விளங்கும்.

ஆக்பர் இராஜ புத்திரருடன் தோழமை கோள்ளல்.

ஆக்பர் தன்னுடன் சேர்ந்து யுத்தகளத்திற் பொருத முஸ்லிம் வீரரின் குணங்களை நன்கறிந்தவனாகையின் அவர்கள் தனக்கு விரோதமாகக் கிளம்பிக் கலகியாதபடி தன்னைக் காத்துக் கொள்வதற்கான முயற்சிகள் யாவும் அவன் எடுத்துக்கொண்டான். இராஜ புத்திரரது உதவியால் தனது முகமதிய வீரரின் துடுக்கை யடக்கத் தீர்மானித்தான். 1562ம் ஆண்டிலேயே பக்வான் தாஸின் தந்தையும், அம்பேர் நாட்டதிபனும், இப்போது ஜயபுரியில் அரசு செலுத்தி வரும் மகாராஜாக்களின் மூதாதையுமான ராஜா பிஹாரி மால் என்பவன் ஆக்பரின் பெருமையை அறிந்து அவனுக்குத் தான் கீழ்ப்பட்டிருத்தலை அறிவித்து மரியாதை செய்து கௌரவிக்கும் எண்ணத்துடன் ஆக்பரின் அரண்மனையை அடைந்தான். ஆக்பர் மிகவும் ப்ரீதியுடன் பிஹாரிமாலை வரவேற்று உபசரித்து அவனைத் தன் நண்பர்களுள் சிறந்தவனாகக் கருதியது மன்றி அவனுடைய புதல்வியை மணந்து அவளை மகிஷிகளுள் ஒருத்தியாக்கினன். ஆக்பருக்கு முன்னமேயே ருகய்யா, ஸலீமாவென்னும் மனைவியரிருவர் இருந்தனர். அவன் இராஜபுத்திரக் கன்னிகையை யணந்தது இராஜரிக தந்திரத்தை யொட்டிச் செய்ததாகும். பிஹாரிமாலின் பதவியை உயர்த்தி மன்ஸப்தார் என்னும் பட்டமளித்து அவனை ஐயாயிரம் படைவீரர்களுக்குத் தலைவனாக்கிக் கௌரவித்தான். அவனது புதல்வியின் இஷ்டப்படி ஹிந்து விவாகச் சடங்குகளை நிறைவேற்றியே ஆக்பர் அவளைத் தனக்குரிமையாக்கிக் கொண்டனன். இதனால் மத விஷயங்களில் ஆக்பர் வீர மகமதியர் கொள்கைகளை யுடையவனல்லன் என்பது விளங்கும். அவன் ஹிந்து, பாரசீகம், மொகல் என்னும் பல

வினங்களைச் சேர்ந்த ஸ்திரீகளை மணந்தனன். அங்ஙனம் அவனுக்கு மனைவியாய்ச் சிறப்புற்றோருள் அர்மீனியா நாட்டு ஸ்திரீயும் ஒருத்தியாவள். பற்பல சமயத்தினரும் அந்தப்புரத்தில் நிறைந்திருந்தனர். அதனால் அடிக்கடி சமய வாதங்கள் அந்தப்புரத்தில் நடப்பதுண்டு. அபுல் பாசில் அந்தப்புரத்தில் பலவகைப் பதவிகளை நிர்வகித்து வந்த ஐயாயிரம் மாதர்கள் இருந்தனரென்று கூறுகின்றான்.

ஹிந்துக்கள் அடைந்த நன்மைகள்.

ஆக்பர் இராஜ புத்திர கன்னிகையை மணம் புரிந்ததன் பயனாக ஹிந்துக்களுக்கோ ரநுகூலமுண்டாயிற்று. இஸ்லாமிய சட்டப்படி மகம்மதிய மன்னர் இதர மதஸ்தாரிடமிருந்து இறுத்து வந்த ஜேஸியா வென்னும் தலைவரியை வசூலிப்பதை ஆக்பர் சக்கரவர்த்தி 1562-ம ஆண்டு முதல் நிறுத்திவிட்டான். அடுத்தபடி ஹிந்து யாத்ரிகர் செலுத்தக் கடமைப்பட்டிருந்த வரியையும் ஆக்பர் நீக்கிவிட்டான். ஒருவன் தன் இஷ்டப்படிக் கடவுளை ஆராதிப்பதைத் தடுப்பது கொடுங் கோன்மையென்று ஆக்பர் அறிந்திருந்தான். இதனால் அவன் தனது பிரஜைகளின் அன்பிற்கும், மரியாதைக்கும் பாத்திரனாய் விளங்கினான். ஜனங்கள் ஜெஸியா வரியை மிகவும் வெறுத்து வந்தனர். தாங்கற்கரியபேரவமானம் விளைவிப்பதாகையின் ஆக்பர் ஏழை ஜனங்களின் நிலைக்கிரங்கி அவ்வரியை ரத்து செய்து விட்டான். ஆயினும் ஆக்பருக்குப்பின் முகலாய ஆட்சியைக் கைக்கொண்ட அவுரங்கஸீப் சக்கரவர்த்தி இடையில் நின்றிருந்த கொடிய வழக்கத்தை மீண்டும் கைக்கொண்டு ஜெஸியாவரியைச் செலுத்தும்படி பிரஜைகளை நிர்ப்பந்தித்து முகலாய இராஜ்யத்தின் தாழ்வைத் தேடிக்கொண்டான். ஆக்பர் இயற்கையில் ஜீவகாருண்யமும் பெருநோக்கு முடையவன். அவன் ஹிந்துக்களை ஆதரித்து அவருடைய ஒழுக்கங்களைப் புகழ்ந்து வந்தானெனினும் அவர்களுக்குள் வெகுகாலமாய் ஏற்பட்டிருந்த சில கொடிய வழக்கங்களை நிறுத்தி விட்டான். சிசு வென்று பாராமலே நடத்திவந்த பால்ய விவாகங்களையும், மிருக பலியிட்டுப் புரியும் யாகங்களையும்

ஆக்பர் விலக்கினன். வழக்குக்களை விசாரித்துத் தீர்ப்புச் செய்ததில் முன்னோர் கையாண்டு வந்த புதுமையானவையும், அநாகரிகமுமானவையுமான முறைகளை ஒழித்து நலம் புரிய முற்பட்டவன் ஆக்பர் சக்கரவர்த்தியேயாவன். புருஷரைப் பறிகொடுத்த நாரியர் புனர் விவாகம் புரிந்துகொள்ளலாமென்று சட்ட மேற்படுத்தியது மன்றி ஸஹகமனம் என்னும் சதி வழக்கத்தை முற்றிலும் வெறுத்துத் தன்னாலானவரையும் அக்கொடிய வழக்கத்தை நிறுத்த முயன்றான். ஆயினும் தன்னிச்சையாய்க் கணவருடன் மரிக்க வுடன்பட்ட மனைவியரின் மனவுறுதியைக் கலக்க அவன் முற்பட்டதில்லை. கன்னிகாதானம் செய்யுமுன் பெற்றோரின் அநுமதி மாத்திரம் சாலாதென்றும், பெண்ணையும் பிள்ளையையும் கலந்தே விவாகம் நிச்சயிக்கப்பட வேண்டுமென்றும் வற்புறுத்தி வந்தான்.

மீவார் அரசனை ஆக்பர் எதிர்க்க நினைத்தல்.

இராஜ புத்திராது கர்வத்தை யடக்கி அவர்களைத் தன் வயப் படுத்துவதற்குச் சாமோபாயம் பயனற்றதென்பதை ஆக்பர் நன்றாய் அறிந்திருந்தான். அவன் இராஜபுத்திராது இயற்கைக் குணங்களைச் செவ்விதின் ஆராய்ந்தறிந்தவன். அவர்களது வலியை அடக்கிய பின்னரே அவரது நட்பினைப் பெறுதலெளிதென்று ஆக்பர் கண்டான். ஆக்பர் காலத்து மீவாரில் அரசு செலுத்தி வந்தவன் உதய சிங்க னென்னும் மன்னவன். அவன் பாபரின் வைரியாகிய சாங்காராணாவின் குமாரன். அவன் வீரமும், வலிமையும், தீரமு மொருங்கே யமையப்பெற்றவன். அவன் ஆக்பரைச் சிறிதும் மதியாமல் அவனுக்கு விரோதமாகப் பல தடவைகளில் கலகித்து வந்தான். பாஸ் பஹதூரை ஆக்பரின் வீரர் மால்வாவைவிட்டு அப்புறப் படுத்தி வெளியே துரத்துகையில் உதயசிங்கன் அவனுக்கு உதவி புரிந்து தன்னிடத்தில் அவனுக் கிருப்பிடமளித்து அவனைக் காப்பாற்றினன். சக்கரவர்த்தியின் ஆட்சிக்குப் பணிந்து வேற்று மன்னர் பலர் ஆக்பரை அண்மி அவனைத் தங்களுக்கதிபனாக வங்கீகரித்து மரியாதை செய்ய உதயசிங்

கனே தனது கற்கோட்டையை விட்டு நகராமல் தன் இச்சையாய் அரசு செலுத்தி வந்தான். அவனுக்கிருந்த சைந்யம் சிறந்த வீரரும், யானைப்படையு மடங்கியதாகையால் அவன் சக்கரவர்த்தியைச் சிறிதும் பொருட்படுத்தவேயில்லை. தனிப் பாறையின்மீது நாநூறடி உயரத்திற் கட்டப்பட்டிருந்த சித்தூர் கோட்டையை ஒருவரும் எதிர்க்க முடியாதென்று அவன் அகம்பாவங் கொண்டிருந்தான். செங்குத்தாயிருந்த அக்கோட்டையின் சிகரத்தில் அவன் தனக்குறைவிடமமைத்து அதில் ஏராளமான உணவுப் பொருள்களும், நீர் நிலைகளும் சேகரித்து ஏற்படுத்திக்கொண்டான். எண்ணாயிரம் பேர் அடங்கிய சிறந்த இராஜபுத்திர சேனை ஒன்றுக்குத் தலைமை பூண்டு ஜயமால் என்பவன் அக்கோட்டையைக் காத்து வந்தான். ஆக்பர் 1567-ம் ஆண்டில் அக்கோட்டையை எதிர்க்க வரும்போது தனது திரண்ட படைகளைக் கோட்டையில் நிறுத்தி உதயசிங்கன் ஆரவலி குன்றுக்குச் சென்று அங்கு வசித்து வந்தான்.

**சித்தூர் கோட்டையின் அமைப்பு**

ஆக்பர் காலத்தில் சித்தூர் கோட்டையின் அமைப்பைப்பற்றி முல்லா ஆமத் என்பவன் அடியில் வருமாறு எழுதுகிறான்:—

கோட்டை ஒரு பெரிய சம்வெளியின் இடையே அமைந்திருக்கிறது. கோட்டையைத் தன் சிகரத்திலுடைய மலையைத் தவிர அதனைச் சுற்றிலும் வேறு மலைகள் கிடையா. அம்மலைக் கோட்டை அடிவாரத்தில் பன்னிரண்டு மைல்களும், சிகரத்தில் சுமார் ஆறு மைல்களும் விஸ்தீர்ணமுள்ள சுற்றளவை யுடையதாகும். கீழ்ப்புறத்தும் வடக்கிலும் அக்கோட்டை உறுதியான கல்மயமான முன்வாயிலை யுடையது. ஆங்குள்ளோருக்குச் சத்துரு பயம் சிறிதுங் கிடையாது. மற்றப் பக்கங்களும், குண்டுகளாலும், பீரங்கிகளாலும் தகர்க்க முடியாதபடி உறுதியாய் அமைந்திருந்தன. இத்துணைச் சிறப்பு வாய்ந்த கோட்டை வேறொன்று அக்காலத்தில் உலகில் வேறெங்கு மிருந்ததாகத் தெரியவில்லை. கோட்டையின் சிகரத்தில் பல வடுக்குக்களையுடைய உன்னத மாடிகளடங்

கிய கட்டிடங்கள் பல பிரபலமாய் விளங்கின. பந்தோபஸ்திற்காகக் கோட்டையில் சதா வீரர் பலர் காத்து வந்தனர். அங்கிருந்த வெடி குண்டுகளுக்கும் மருந்துக்கும் அளவேயில்லை.

சித்தூரைக் கைப்பற்ற ஆக்பர் செய்த ஏற்பாடுகள்

சக்கரவர்த்தி தன்னுடன் கூட்டிவந்த மூவாயிரம் அல்லது நாலாயிரம் பேரடங்கிய அற்ப சைந்யத்தைக் கோட்டையிலிருந்தோர் சிறிதும் பொருட் படுத்தவேயில்லை. ஆக்பர் அச் சைந்யத்தைக் கொண்டு சித்தூர் கோட்டையைப் பிடிப்பது அசாத்தியமென்று அவர்கள் கருதி யிருந்தார்கள்.

ஆனால் ஆக்பர் சக்கரவர்த்தியோ சாமானியனல்லன். யுத்த வகைகளையும். முற்றுகை முறைகளையும் அவன் நன்கறிந்தவன். செய்ய வேண்டியவற்றைத் தக்க காலங்களில் செவ்வனே செய்து தன் காரியங்களைச் சாதித்துக்கொள்ளும் திறனும், ஆற்றலும், மதியும் அவனுக்கு மிகுதியும் உண்டு. கோட்டையைச் சுற்றிலும் நெருங்க பீரங்கிக் குண்டுகளையமைத்து முற்றுகைக்கு இன்றியமையாத ஏற்பாடுகள் முழுவதையுஞ் செய்து முடித்தான். அதே காலத்தில் ராமபுரியையும், உதயபுரியையும் கைப்பற்றிச் சுற்றிலுமுள்ள பிரதேசத்தைப் பாழாக்கி வரும்படி தகுந்த வலிமை வாய்ந்த தலைவர்களைச் சேனைபலத்துடன் அனுப்பினான். கோட்டையின் நாற்புறங்களிலும் வளைத்துக்கொண்டு சிறிது சிறிதாக ஆக்பரின் படைகள் கோட்டைக்குள் நெருங்கி மிகுந்த ஆவேசத்துடன் எதிர்க்கத் தொடங்கினார்கள். கோட்டைக்குள்ளிருந்த வீரரின் தொகையோ எண்ணிறந்தது. அவர்களின் போர்த்திறமையால் சக்கரவர்த்தியின் வீரர் பலர் உயிர் துறந்தனர். குழிகள் தோண்டி நெடுக ஸாபத் கட்டி முடிக்கும்படி ஆக்பர் கட்டளை யிட்டான். கொல்லர்களும், தச்சரும், கல்வெட்டுவோரும், கருமான்களும் நாலா பக்கங்களிலிருந்தும் திரண்டுவந்து சேர்ந்தனர். மொத்தத்தில் ஐயாயிரம் பேரடங்கிய வேலைக்காரர்கள் இரவும் பகலுமாக வேலை செய்யத் தொடங்கினார்கள். ஹிந்துஸ்தானத்தில் விளங்கிய பெரிய கோட்டைகள் யாவற்றிலும் குண்டுகளும்,

பீரங்கிகளும், இயந்திரங்களும் ஏராளமாய் இருந்தமையால் அவற்றைச் சுலபமாய்க் கைப்பற்றுத லென்பதியலாது. ஆகையால் சாபத்துக்கள் நிருமித்து அவற்றினின்றும் பகைவரை எதிர்த்து கோட்டை மதிலைத் தாக்குவதே அக்காலத்து வழக்கமாகையின் ஆக்பரும் சாபத் கட்டி முடிக்கும்படி பணித்தான். சாபத்தென்பது மேற் கூரையுடன் கூடிய ஓரகன்ற வழியாகும். ஒரு நகரை முற்றுகையிடுவோர் அதிலிருந்துகொண்டே கோட்டையைத் தாக்க வேண்டும். கோட்டையிலுள்ளோர் பிரயோகிக்கும் குண்டுகளுக்குத் தப்பி அவருடன் போர்புரிதற்கு இது ஒரு சிறந்த வழியாகும். ஆக்பர் இரண்டு சாபத்துக்கள் கட்டத் தொடங்கினன். அவன் தன் சேனைகளுடன் வந்திறங்கிய பக்கத்தில் நேரெதிர்முகமாக நிருமிக்கப்பட்ட சாபத் மிகவும் அகன்றும் உயர்ந்தும் இருந்தமையால் அவ்வழியில் இரண்டு யானைகளும் பரிகளும் ஈட்டியைத் தூக்கிச் சுழற்றிப் போர்புரியும் பாகர்களையும், வீரர்களையும் தம் மீது கொண்டு தாராளமாய்ச் செல்வது சுலபமா யிருந்தது. குன்றின் தாழ்வரையிலிருந்தே தொடங்கிச் சாபத்துக்களைக் கட்டினர்கள். எழாயிரம் போர்வீரர் அடங்கிய குதிரைப் படையானது ஆக்பர் செய்துவந்த கட்டிட வேலையை நிறுத்த முயன்று தினந்தோறும் நூற்றுக் கணக்கான தொழிலாளிகளை வதைத்துக் கொன்றுவந்தது. பிரதி தினமும் மலைபோல் குவிந்துகொண்டே வந்த பிணங்களை உபகரணங்களாகக் கொண்டு முகலாயர் தம் ஊக்கஞ் சிறிதும் கைவிடாமல் அக்கட்டிடத்தை முடிப்பதிலேயே கண்ணுங் கருத்துமா யிருந்தார்கள். ஆக்பர் பலாத்காரமாய்த் தொழிலாளிகளைக் கூட்டி அவ்வேலையிற் புகுத்தியதில்லை. அவன் பொன்னைத் தாராளமாய் வாரி யளிக்கவே தாமே உடன்பட்டு வேலைசெய்ய இசைந்தோர் எண்ணிறந்தோராவர். அவர்கள் கட்டிய சாபத்துக்களிலொன்று கோட்டை மதிலினும் உயர்ந்து ஓங்கி யிருந்தது. அதன்பேரி லிருந்து கொண்டு போரினைக் கவனிப்பதற் கநுகூலமாய்ச் சக்கரவர்த்திக்கும் அவனைச் சார்ந்த ப்ரமுகர் பலர்க்கும் பல ஆசனங்களும் பலகைகளும் கிரமமாக அமைக்கப் பட்டிருந்தன.

சுரங்கங்கள் ஏற்படுத்தி அவற்றில் வெடிகுண்டுகளையும், மருந்துகளையும் பதுக்கி வைப்பதற்கு வேண்டிய வேலையும் மும்முரமாய் நடந்து வந்தது. சமயம் நோக்கியிருந்து சுரங்கத்திலிருந்த பீரங்கிகளுக்குத் தீமூட்ட உடனே உண்டான பேரிடியால் மாண்டவர் கணக்கிலடங்கார். மேலேயுள்ளோர் இதனைச் சிறிதும் எதிர்பார்த்திலர். சக்கரவர்த்தியின் சைந்யம் கோட்டையுள் பிரவேசிக்க வழி ஏற்பட்டு விட்டமையால் வெற்றி முழக்குடன் முன்னோக்கிச் சென்றுகொண்டிருந்தனர். ஆயினும், அவர்கள் இரண்டாவது சுரங்கத்தில் முறைதப்பிச் செய்த வேலையால் பெரும் அபாயம் விளைந்தது. அவர்கள் சிறிதும் எதிர்பாராத வேளையில் அது வெடித்துப் பெருஞ் சேதத்தையுங் குழப்பத்தையும் உண்டாக்கியது. வெகு சிரமத்துடன் முன்சென்று பொருதவீரரைச் சிதறவோட்டிப் பிணங்களை நாலாபுறத்திலும் வெகுதூரம் வரையிலும வீசியெறிந்ததுமன்றிக் கற்களையும் எங்கும் வாரியெறிந்து ஆங்குள்ளோர்க்குக் கடுங்காயத்தை யுண்டாக்கியது. அவ்வெடியா லெழுந்த புகையும், தூளும், கன்மாரியும் ஒருங்கு சேர்ந்து ஆப்கானியரின் படைவீரர்களுடைய கண்களிலடைந்து அவரது பார்வையை மழுங்கச்செய்தன.

சுரங்கத்தில் வெடிவிபத்து; முகலாயரது உயிர்ச்சேதம்.

இங்ஙனம் தான்செய்த முதன் முயற்சி பலியாதது கண்ட சக்கரவர்த்தி மனச் சோர்வடையாமல் இரண்டாவது சாபத்திலிருந்தோரை உற்சாகப் படுத்திக் கோட்டைக்குள் செலுத்தத் தொடங்கினன். சித்தூரை முற்றுகை யிட்டுப் பிடியாம விருப்பதில்லை யென்று உறுதி செய்துகொண்டான். அவனுக்கு அப்போதிருந்த மனவுறுதியையும், பிடிவாதத்தையும் சொல்லி முடியாது. இனி வேறெந்த கோட்டையும் ஆக்பருக்குத் தானே சுவாதீனப்படுவதினின்றும் தப்பலாகாதென்று ஆக்பர் நிச்சயித்துச் சாபத்தின்மேல் தன் கண்ணுக்குப் புலனுரும் விரோதிகள் யாவரையும் வதைப்பதற்காகக்

ஜயமால் உயிர்துறத்தல்; இராஜபுத்திரர் நெருப்பில் மாய்தல்.

கையில் துப்பாக்கியுடன் தனக்காக வமைக்கப்பட்ட ஆசனத்தில் அமர்ந்திருந்தான். சக்கரவர்த்தியின் வீரர்செய்த முயற்சியால் மதில்வாயிலுக்குச் செல்லக்கூடிய இடைவெளி உண்டாகி அதன் வழியாகப் பலர் சென்று கோட்டையைத் தாக்கத் தொடங்கினார்கள். கோட்டைக்குள்ளிருந்தோரை ஜயமால் உற்சாகப்படுத்திப் பகைவருக்குப் பணியாமற் போர்புரியும்படி கட்டளையிட்டான். அவன் ஒவ்வொரு வீரனிடமுஞ் சென்று அவனுக்கு ஊக்கமூட்டி வந்தமையால் அன்று பகல் முழுதும் இருதிறத்தார்க்கும் கடும் போர் நிகழ்ந்தது. பொழுதும சாய்ந்தது. ஆக்பர் தானிருந்தவிடத்தை விட்டகலாமல் கையில் துப்பாக்கியுடன் பகைவரைக் குறிநோக்கிச் சுட்டுக் கொன்றுகொண்டிருந்தான். கோட்டைச் சிகரத்தில் நின்றுகொண்டிருந்த ஜயமாலைக் கண்ட ஆக்பர் சக்கரவர்த்தி அகங்களித்து ஒரு நொடியுந் தாமதியாமல் குண்டொன்றால் ஜயமாலைச் சுட்டுக் கொன்றுவிட்டான். தமது தலைவன் மரித்ததைக் கண்டபின் கோட்டைக்குள்ளிருந்தோர் தமது தைரியத்தை யிழந்தனர். ஜயமாலுக்குச் செய்யவேண்டிய சரம கடமைகளை முறைப்படி செய்துமுடித்துப் பின் ஜோஹர் என்னுங் கொடிய சடங்கை யியற்றி அதில் விழுந்து தமது உயிரைப போக்கிக்கொள்ளத் தீர்மானித்தனர். அனல் மூட்டி ஆண்டெழுந்த தீ பெருங் கொழுந்து விட்டெரிகையில் தமக்குள்ள பொருளெல்லாவற்றையும் கொணர்ந்து அத்தீயிலிட்டெரித் தழித்தபின் மனைவிமக்களை அப் பெருநெருப்பில் வீழ்த்தி முடிவில் தாமும் அதில் குளித்து உயிர் துறந்தனர்.

நெருப்பு ஜ்வாலையைக் கண்ட சக்கரவர்த்தி தனது வீரரைக் கோட்டைக்குள் வேகமாய்ச் செல்லும்படி கட்டளையிட்டான். மூன்று யானைகள் கோட்டையுள் நுழைந்தன. இரஜபுத்திரர் சிறிதும் பின்வாங்காது முகலாயரைப் போர் வெறி கொண்டு எதிர்த்துச் சந்துகளிலும், தெருக்களிலும், கடைகளிலும் அவர்கள் வாராதபடி தகைந்தனர். அவர்கள் எளிதில் சத்துருக்களுக் கடங்கவில்லை. நண்பகல் குறுகியது. அதுவரையில் இரண்டாயிரம் பேர் மடிந்தனர். யுத்தத்தில்

ஆக்பரின் வெற்றி

உயிர் துறந்த எண்ணுயிரம் இராஜபுத்திரரைத் தவிர தீயில் விழுந்து மடிந்தோரும் கைதியாக்கப் பட்டோரும் பல்லாயிரவராவர். இதன் ஞாபகார்த்தமாக டெல்லிக் கோட்டைவாயிலில் ஜயமாலும் அவனது சகோதரனும் யானைமீதிருந்து போர் புரிவதுபோல் இரண்டு கற்சிலைகள் நாட்டி அப் பதுமைகளை வெகுநாள்வரை இராஜபுத்திரர் கௌரவித்து வந்தார்கள். 'இராஜபுத்திர ரிருவரையுந் தாங்கி நிற்கும் அவ்விரு வேழங்களின் கம்பீரமான உருவங்களைப் பார்க்கும்போது இத்தன்மைத்தென விரித்துரைக்க வொண்ணாத பயமும், பீதியும், மரியாதையும் எனக்குண்டாயின' என்று பேர்னியர் கூறி வியப்படைகிறுன்.

சித்தூரின் வலியொடுங்கிய சில மாதங்களுக் கப்பால் ராந்தம்பார், காலிஞ்சார் என்னும் இரண்டு கோட்டைகளும் ஆக்பருக்கு அடங்கி அவனது ஆட்சிக்குட்பட்டன. இராஜபுத்திரரும் தமது வலிமையில் குன்றி ஆக்பரின் ஏகாதிபத்தியத்தை அங்கீகரித்தனர். நீதிகோடாது நன்னெறியில் நின்று நலம் அளித்த ஆக்பரை வெல்வதரிதென்று கண்டு இராஜபுத்திரர் அவனுக்கு முற்றிலும் பணிந்தனர். ஆயினும், உதயபுரியின் ராணுவோ சித்தூரை மொகலாயர்கையில் ஒப்பித்துவிட்டபின்னும் ஆக்பருக்கு அடங்கவேயில்லை. அவனுக்குத் தன் மதத்திலிருந்த அபிமானத்தைச் சொல்லி முடியாது. அவன் ஆக்பருடன் தோழமை பூண்டு சம்பந்தம் பெற்றுச் சிறப்படைவதை முற்றிலும் வெறுத்தவனுகையால் ஆக்பர் அவனைத் தன் வயப்படுத்தி அவனது நட்பைப் பெறமுடியாமலே போயிற்று. இராஜபுத்திரருக்கும் முகலாயருக்கும் ஒற்றுமை யுண்டாக்கி அவர்களுக்குத் தலைமை வகிக்க வேண்டுமென்று ஆக்பர் முயற்சித்தான். இதையே நோக்காகக் கொண்டு ஆக்பர் பிகானிர் ராஜாவின் குமாரத்தியை மணந்து கொண்டான். இது முதல் இந்தியாவில் சிறப்புற்றிருந்த முதற் றரத்தினராகிய வீரரைச்

இராஜ புத்திரரின் வலி முற்றும் ஒடுங்கல்.

சேர்த்துப் பெரும்படை யுண்டாக்கி அவரது உதவி யால் இந்தியாவில் அரசுபுரிவது ஆக்பருக் கெளிதா யிற்று. எத்தனை யுத்த வீரர்கள் இராஜபுத்திர வம்சத்திற் பிறந்து ஹிந்து மதத்தைப் பின்பற்றித் தம் நாட்டிற்கும் சக்கரவர்த்திக்கும் அழியாப் புகழை உண்டாக்கி யிருக் கின்றனர்? முகலாய சைந்யத்திலும், இராஜரிகத்திலும் புகுந்து வெகு சிரத்தையுடன் தமது கடமைகளை நிறை வேற்றிப் புகழ்படைத்த **பகவான்தாஸ், மானசிங்கன், தோடர்மால்** முதலியோரை மறத்தலுங் கூடுமோ? ஆக்பர் கூர்ஜாத்தை ஒடுக்கித் தனக்குட்படுத்த இருபதாண்டுகள் சென்றன. அப்போது அவனுக்குத் துணையா யிருந்து சலியாது போர்புரிந்தவர் மானசிங்கனும், பகவான்தாஸு மாவர். அவர்கள் இராஜபுத்திரரா யிருந்தும் ஆக்பர் உதய புரி ராணுவின்மீது படையெடுத்துச் சென்ற காலத்து ஆக்பருக்குத் துணையாயிருந்து தம் மினத்தாருடன் போர் புரிய முற்பட்டனர். அவர்கள் ராணுவை ஸிந்துநதிக் கப் பால் துரத்தி அவனது கோட்டைகளாகிய **கோகண்டா**வை யும், **குன்பால்மீரை**யும் பிடித்து ஆக்பரின் ஆட்சிக்குட் படுத்தி அவனது சன்மானத்தைப் பெற்றனர்.

**ஆக்பரின் செங் கோன்மை; தோடர் மாலின் பெருமை.**

ஆக்பர் சக்கரவர்த்தி ஹிந்து ராஜாக்களை வென்ற வகை யும், அவர்களை முற்றிலும் தன் வயப் படுத்தி ஏகாதிபத்தியம் செலுத்திய நேர் மையும், அவனது பெருமையையும், புகழை யும் இனிது விளக்குவனவாம். யுத்தகளத் தில் தனக்குப் பணிந்த மாற்றலர்பால் அருளும் அன்புங் கொண்டு அவர்க் குதவி புரிவது ஆக்பருக்கு இயல்பாய் அமைந்த பெருங் குணமாம். நாடுகளில் உழுது சுக ஜீவனஞ் செய்துவந்த மக்களுக்குத் தனது சைந்யங்களால் யாதொரு தீங்கும் விளையாதபடி கவனித்து வந்தான். அவ னது இராஜ்யம் காண்ட ஹாருக்கும், வங்காளக் குடாக் கடலுக்கு மிடையே யுள்ள பிரதேசமுற்றுங் கொண்டதாய் நருமதா நதிக்குக் கீழே சற்றுத் தூரம் வரையிலும் ஹிந்

துஸ்தானம் முழுமையும் பரவி யிருந்தது. அலாவுத்தீன் காலத்திலும் மகம்மதிய இராஜ்யம் நருமதை வரையில் வியாபித்திருந்த தெனினும் ஆக்பர் சக்கரவர்த்திக்கும், அல்லாவுத்தீனுக்குமுள்ள குணபேதங்கள் பல வாகை யின் அவர்களது ஆட்சி முறையும் வேறுபட் டிருந்தன. முதன் முதல் ஹிந்து ராஜாக்களின் தோழமை பூண்டு அவர்களையே துணைக்கொண்டு, ஹிந்துஸ்தானம் முழுவதை யும தனக்கு உரிமையாக்கிக் கொண்டவனும், அங்ஙனந் தான் வென்ற நாடுகளை அரசியல் கோடாது செங்கோல் செலுத்திச் சிறந்த சட்டங்களை ஏற்படுத்தி நலம் புரிந்தவ னும் ஆக்பர் சக்ரவர்த்தியே. இதுவரை நடந்துவந்த இராஜ ரிகத்திற்கும் ஆக்பரின் ஆட்சி முறைக்குமுள்ள வித்யாசங் களைக் கவனித்துப் பார்க்கின் அவனது நடு நிலைமையும், தாராள சிந்தையும், ஆற்றலு மறிவும் தெள்ளிதின் விளங்கு வனவாம். இதுவரை ஆங்காங்குச் சக்கரவர்த்தியின் பெயரை மட்டில் சொல்லிக் கொண்டு தம் மிச்சைப்படி ஆட்சி புரிந்துவந்த அந்தந்த ஸ்தல வதிகாரிகள் இழைத்து வந்த அக்கிரமங்களுக்களவே யில்லை. சக்கரவர்த்தியோ தனக்குச் சேரவேண்டிய பகுதிப் பணத்திலேயே கருத் துடையனு யிருந்தமையின் இராஜரிக விஷயங்களில் தலை யிட்டுக் கொள்ளாமலே யிருந்தனன். ஆக்பரோ தனது பிரதிநிதிகள் புரிந்த அக்கிரமங்களைக் கண்டு ஆற்றாது அவற் றைத் தடுப்பதற்காகவே பன்முறை போர்முனை சென்று போர் புரிவான். தமது வருவாயிலேயே கண்ணுடைய ராய் ஏழைகளை வாட்டிப் பணம் பிடுங்கும் தலைவர்களிடத் தில் ஆக்பர் சற்றும் இரக்கங் காட்டியதில்லை. ஹிந்துக்க ளிற் பலர் படித்துத் தேர்ந்த மதியூகிகளா யிருத்த லறிந்து ஆக்பர் சக்கரவர்த்தி இராஜ நிர்வாகப் பொறுப்பை அவர் கள் கையிலேயே ஒப்புவித்தான். பொருட் பேற்றினையே நோக்காகக் கொண்டு தன்னை நெருங்கி யிருந்த மகமதியரின் இயல்பை ஆக்பர் நன்கறிந்து தகுந்தபடி அவர்களிடம் நடந்து கொள்வான். காத்ரி வம்சத்தைச் சேர்ந்த இராஜ புத்திரத் தோடர்மாலைப் போல் ஆக்பருக்கு எந்த மகமதி யனும் உண்மை ஊழியம் செய்ததில்லை யென்று கிட்ட

மாய்க் கூறலாம். தோடர்மால் இளைஞு யிருக்கும்போதே இராஜரிகத்தில் சம்பந்தப்பட்டிருந்தான். ஷெர்ஷா அரசுரிமை வகித்திருந்தபோது தோடர்மால் அவனிடம் உத்தியோகத்தில் அமர்ந்து அப்போது ஏற்பட்ட சீர்திருத்தங்களுக்குக் காரணனு யிருந்தான். நிலவரி விஷயமாய் அவனுக்கிருந்த அநுபவம் அபரிமிதமானது. நிலங்களைச் சோதித்து அவற்றின் தரத்திற் கேற்ப வரி விதிகளை முறைப்படுத்திப் புதுச் சட்டங்களை ஏற்படுத்துவதற்குரிய கூரிய மதி நுட்பமும், அரிசிய லறியும் அத்துணைச் சிறப்புடன் வேறெவரிடமு மிருந்ததில்லை யென்று கூறத் தடையில்லை. ஆக்பர் புதிதாய்க் கைப்பற்றிய நாடுகளில் முசபர்கானென்னும் அதிகாரிக்கு உதவியா யிருந்து நிலவரி சம்பந்தமான விஷயங்களிலுள்ள சிக்கல்களை யறுத்து ஒரு வழிப்படுத்தியவன் தோடர்மாலேயாம். 1556-ம் ஆண்டில் தோடர்மால் ஆலிகூலியை அடக்குவதற்கு ஆக்பருக்குத் தன்னுலியன்ற உதவியைச் செய்தான். முதன் முதல் முகலாயர் ஒரு ஹிந்துவை அனுப்பி முஸ்லீம் பகைவனது வலியை அடக்கச் செய்தது ஆக்பர் சக்காரவர்த்தி காலத்தில் தான் நடந்தது. மகமதியர்களைத் தலைவர்களாகத் தேர்ந்தெடுப்பதால் நேரிடக்கூடிய தீமைகளை ஆக்பர் நன்கறிந்திருந்தான். அவர்கள் தனது பகைஞனுகிய ஆலிகூலியுடன் சேர்ந்து கொண்டால் தன் நிலையாதாகு மென்பதை ஆக்பர் செவ்வனே அறிந்திருந்தான். ஆகவே தான் ஆக்பர் தோடர்மாலின் சகாயத்தை நாடி அவனது பதவியை உயர்த்தியிருந்தான். ஆலிகூலியை அடக்கியபின் தோடர்மால் கூர்ஜரத்தில் நிலவரி ஏற்பாட்டினை ஒரு ஒழுங்குக்குக் கொண்டுவருவதற்குப் பட்டகஷ்டம் கொஞ்சமன்று. 1574 முதல் 1577 வரை அவன் சைந்யத் தலைமை பூண்டு வங்காளத்துடன் பொருது 1581-ல் அதைவென்று சுவாதீனப்படுத்திஞன். அவனுடைய போர்த் திறமையையும், ஆற்றலையுங் கண்ட ஆக்பர் அவனைச் சிறப்பித்துக் கொண்டாடி வெஸிர் என்னும உத்தியோகத்தை அவனுக்குக் கொடுத்தான். மறு வருஷத்தில் தோடர்மால் முதன் மந்திரிப் பதவியைப் பெற்று பண வசூல் விஷயங்களை முற்றுங் கவனிக்கும்

பொறுப்பையு மடைந்தான். அவன் தீர்வை சம்பந்த மாய்ச் செய்துள்ள சீர்திருத்தங்கள் பலவுள. அவனுடைய மதி யூகத்தையும் அநுபவத்தையும் வியவாதோர் ஒருவரு மிலர். நிலவரி விஷயமாய் அவனது உழைப்பு அவனுக்குப் பெருமையும் புகழும் உண்டாக்கியதோடு ஜனங்களுக்கும் திருப்தியையும் அமைதியையும் உண்டாக்கியது. அவன் கொண்டுவந்த ஏற்பாட்டுக்குத் தோடர்மாலின் தீர்வை விதிகள் என்று பெயர். இங்கிலாந்தை நார்மானியர் ஆட்சி புரிந்த காலத்தில் ஏற்பட்ட டூம்ஸ்டேபுக் என்னும் புத்தகம் அந்நாட்டுச் சரித்திரத்தை அறிதற்குச் சிறந்த கருவியாய் நாளைக்கும் உதவி வருவது போலவே முகலாய ராஜ்யத்தின் சரித்திரத்தைச் செவ்வனே யறிதற்குத் தோடர்மாலின் புத்தகமும் தகுந்த சான்றாய்ப் பய னளிக்கின்றது. தோடர்மால் ஆக்பர் சக்கரவர்த்திக்கு உண்மை ஊழியஞ்செய்து நாட்டின் நலத்திற்கரும் பாடுபட்டு 1589-ம் ஆண்டில் தேக வியோகமானன். அவனது குணாதிசயங்களைப் பற்றி அபுல் பாசல் எழுதும்போது, 'தோடர்மால் தனக்கென வாழ்ந்து தன் பதவியை மேன்மேலும் உயர்த்திக் கொள்வதிற்றன் கருத்தைச் சிறிதும் செலுத்தியவ னல்லன். இராஜ சேவகத்திலேயே தன் வாணாள் முழுவதையுங் கழித்து அழியாப் புகழைத் தேடிக் கொண்டான்' என்று வியந்து கூறியிருக்கிறன். அக்காலத்தில் பிரசித்தி யடைந்த இராஜ நிபுணர்கள் பலபே ரிருந்தும் தோடர்மாலின் பெயரே நாளைக்கும் எங்கும் நிலைத்திருக்கிறது. தோடர்மால் இத்துணைச் சிறப்புற்று விளங்கியதற்குக் காரணம் அவனது தூய வுள்ளமும் சலிப்பில் உழைப்புமேயாம். ஆக்பர் காலத்தில் அநேக விதமான சீர்திருத்தங்கள் நடைபெற்றன. அவற்றுள் தோடர்மால் கொண்டுவந்த நிலவரிச் சீர்திருத்தங்களே ஜனங்களின் நன்மைக்கும், சுக வாழ்க்கைக்கும் முதற் சாதனங்களாய் அமைந்தன. இந்தியாவில் அரசர்க்குக் கிடைத்த வருவாயிற் பெரும்பான்மை நிலவரியாற் கிடைப்பதாகும். ஆக்பர் தலைவரி, யாத்ரிகர் வரி முதலிய ஐம்பது சில்லரை வரிகளை அடியோடு எடுத்துவிட்டபடியால் நிலத் தீர்வை யொன்றனையே ஆக்பர் ஜனங்களிட

மிருந்து எதிர் பார்த்தான். குடிகளை வருத்தாமல் இராஜரிகம் நடைபெறுதற்குப் போதுமான வளவில் தீர்வைத் தொகையைத் துணிந்து நிச்சயித்தான்.

இனி அந்நிலவரி ஏற்பாட்டினைச் சிறிது ஆராய்ந்து அதன் குணகுணங்களை எடுத்துக் காட்டுவோம். பயிரிடுங் கிருஷிகனே நிலவுரிமையைப் பெற்றிருந்தான். நில விளைவில் அவனுக்கு வேண்டிய பாகத்தைத் தான் செலவிட்டதுபோக எஞ்சியதை அரசாங்கத்திற்குச் செலுத்தக் கடமைப்பட்டிருந்தான். சிற்சில சமயங்களில் அரண்மனை உத்தியோகஸ்தனோ இராஜரிக கார்ய நிர்வாகஸ்தனோ சக்கரவர்த்தி தனக்கு இனமாக விட்ட ஒரு ஊருக்கேனும் பல ஊர்களுக்கேனும் முழுவுரிமையைப் பெறுவானாயின் அவன் பெறக்கூடிய வருமானம் முழுவதும் அவனுக்கே சேரும். அரசாங்கத்தாருக்கு அவ் வருமானத்தில் ஒரு சிறிதும் பாத்தியதை கிடையாது. ஆயினும் இதனால் அவனுக்குப் பாரம்பரியமான பாத்தியதை ஏற்பட்டு விடுவதில்லை. அவன் பெற்ற மான்யத்தை அவன் பின்னோரும் அநுபவிக்கும் உரிமையை அவன் தானாவது கொடுத்தவனாவது மரிக்கும் சமயத்தில் மனுமூலமாய் ஸ்தாபித்து நிலைபெறச் செய்தாலன்றி நிலம் அவனதாகாது. ஹிந்துஸ்தானத்தில் முஸ்லீம்களின் ஆட்சி முறையில் இவ்வேற்பாட்டின்படி ஹிந்து குடிகள் முற்றிலும் பராதீனராய் அரசாங்கத்திற்கு உட்பட்டிருந்தனர். முகமதிய மன்னர்களுள் ஷெர்ஷாதான் இவ் வழக்கத்தின் கேட்டினை முதன்முதல் கண்டறிந்தான். அரசாங்கத்திற்குச் சேரவேண்டிய பகுதிக்கும் விவசாயிகளின் பயிர்ச் செலவுக்கும் ஓரளவேற்படுத்தி வரையறை செய்தால் பல நன்மைகள் உண்டாகுமென்று அவன் நினைத்தான். அவ்வளவினை யொட்டியே அக்காலத்தில் நடைபெற்ற ஏற்பாடானது இன்னும் நம் நாட்டின் பற்பல பாகங்களில் நிலவிவருவதைக் காணலாம்.

தோட்ர் மாலின் நிலவரி ஏற்பாடு.

நில விஸ்தீர்ணத்தைத் தீர்மானிப்பதில் எங்கும் ஒரே கருவியையும் முறையையுங் கையாண்டு எல்லா நிலங்களையும் அளந்து அவற்றுள் சில பயனற்றவை, சில பயிரிடப்

படாதன, சில விளைச்சலோடு கூடியன, என மூன்றுவகை யாகப் பாகுபடுத்தி யிருந்தனர். மூன்றுந் திறத்ததே நிலத் தீர்வைக்கு ஆதாரமாய் இருந்தது. புன்செய்த்தானிய விளை வுகளில் மூன்றில் ஒருபாகம் அரசாங்கத்திற்கும், எஞ்சியது பயிரிடுவோர்க்கும் சேர்வனவாயின. இம்முறை இஸ்லாமிய சட்டத்திற்கு முற்றிலும் மாறுபயது; ஏனெனில், இவ்வேற் பாட்டின்படி நிலத்தரத்தில் ஏற்பட்ட வித்தியாசம் மாத்தி ரம் அங்கீகரிக்கப்பட்டது. பிரஜைகளுள் முகமதியர் இன் ஞர், அல்லாதார் இன்ஞர் என்னும் ஜாதி வேற்றுமைபற்றி நிலத் தீர்வை தீர்மானிக்கப்படவில்லை. ஷெர்ஷாவின் ஏற் பாட்டினை யொட்டியே ஆக்பர் காலத்தில் நிலவருமானத்தில் அரசாங்கத்துக்குச் சேரவேண்டிய பாகம் இவ்வளவென்று நிர்ணயிக்கப்பட்டது. ஆக்பரின் இராஜ நிர்வாக வறிவினுக் கும், தந்திரத்திற்கும் இது ஒரு சான்றுகும். தன் நாட்டி னர்க்குள் ஜாதி பேதத்தை யொழித்து ஒற்றுமை யுண் டாக்குவ தின்றியமையாததென்று அவன் கருதியது போலவே பழைய முறையைத் தன்ஞற் கூடியவரையும் பின்பற்றியே இராஜரிகம் செய்தலே நேர்மையென்று அவன் கருதியிருந்தான். தொன்முறைத் தொடர்ச்சியே ஓரரசாங்கம் நீடித்து நிற்பதற்கு ஊன்றுகோல்போலா மென்று அவன் எண்ணினன். நிலத்துக்குரியவன் அதை அவனிஷ்டப்படி அநுபவிக்கவும் தன் உழைப்பின் பயனுல் லாபமடையவும் ஆக்பர் தன்ஞலானதைச் செய்து நலம் அளித்தான். பணமின்றி வருந்திய பயிராளர்க்குக் கட னீந்து துணை புரிவான். அங்ஙனம் உதவிய தொகையைத் திருப்பிக் கொடுக்கச் சௌகரியம் வாய்ந்த காலத்தில் வாங் குவதன்றி இடையே அதன் பொருட்டு அவன் நிர்ப்பந் திப்பதில்லை. பத்தொன்பது வருஷங்களுக்கு ஒரு முறை நிலவரியை நிர்ணயிப்பான். ஆக்பர் சிம்மாசனமேறிய இரு பத்திநான்காவதாண்டின் இறுதியில் முந்திய பத்து வரு ஷங்களாக அரசன் பெற்றுவந்த தொகையினைக் கூட்டிப் பத்தால் வகுத்துச் சராசரி எடுத்து அதன் அளவாகவே இனி வருமான வரிகள் வசூலிக்கப்பட வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது.

குறித்த வளவுக்குமேல் உத்தியோகஸ்தர் குடிகளிடமிருந்து தீர்வைபெற முயற்சித்தால் குடிகள் சுலபமாய் அரசனுக்கு மனுச்செய்து நியாயமடைவதற்குரிய சௌகரியங்கள் செய்து கொடுக்கப்பட்டன. முறையும் அளவுந் தப்பி வரி வசூலிப்போர்க்குக் கடுந்தண்டனை விதிக்கப்பட்டு வந்தது. வசூலைச் செய்வதற்குப் பெருந்தடையா யிருந்த சேவகர் பலரை அவ்வேலையினின்றும் விலக்கிவிட்டான். பயிருடையோர் தனித்தும், கூட்டாயும் தாம் கிருஷி செய்த நிலத்தின் உரிமைகட்குப் பொறுப்பாளியாய் நின்றனர். நிலத்துக்குடையோர் தம் நிலத்தை இரண்டு வருஷங்களுக்குமேல் காம்பாய் வைத்திருக்கலாகாது. விதைக்கும் செலவுக்கும் முன்பணம் வேண்டும்போது அரசாங்கத்தாரிடமிருந்து அப்போதைக்கப்போது பணம் கிடைத்து வந்தது. கீழ் உத்தியோகஸ்தர்களின் நடத்தையையும், வேலைத் திறத்தையும் பிரதி வருஷமும் அறிந்து அரசாங்கத்தார்க்குத் தெரிவித்தற்குப் பலர் நியமிக்கப்பட்டனர். அவர்கள் வருமானத்தையும் ஒன்றுசேர்த்து மாதத்திற்கு ஒருமுறை இராஜாங்க நிதிக்கு அனுப்பவேண்டும். அதிவிருஷ்டியாலும், விருஷ்டியின்மையாலும் பஞ்சம் நேருமாயின் அவ்விஷயத்தை உடனே சக்கரவர்த்திக்கு அறிவிப்பதற்குச் சிலர் நியமிக்கப்பட் டிருந்தனர். கிருஷிகர் செலுத்த வேண்டிய கிஸ்திப் பணத்தை நான்கு சமபாகமாகப் பிரித்து, நான்கு முறை வாங்கிக் குடிகளுக்கு ரசீது கொடுத்து, வருஷ முடிவிற்குள் பாக்கி நில்லாதபடி முழுத்தொகையையும் வசூலித்துக் கொடுப்பது மேலதிகாரிகளாகிய கலெக்டரின் கடமையாகும். ஜனங்கள் தாமே பிறர் கேளா முன்னம் தமது நிலத் தீர்வையைச் செலுத்தக் கடமைப்பட்டிருந்தனர். உத்தியோகஸ்தரும் தம்மாலியன்றவரை நிலங்களை ஜப்திசெய்து ஏலம் போடுவதை விலக்க முயல வேண்டும். ஒவ்வொரு குடியானவனும் படைத்திருந்த நிலத்தின் விஸ்தீர்ணமும் அதற்காக அவன் செலுத்தக் கடமைப்பட்டிருந்த தீர்வையும் ஒன்றும் விடாமல் பூராய் எழுதிய கணக்கு திருத்தமாய் இருக்கவேண்டும். *

* (H. G. Keene—Sketch of the History of Hindustan 160-2 etc.)

மேற்காட்டிய முறையையே ப்ரிட்டிஷ் துரைத்தனத்தாரும் பின்பற்றி வருவதால்தான் சிரமமில்லாமல் எளிதில் தீர்வை விஷயம் நடைபெற்றதென்று திட்டமாய்க் கூறலாம். தோடர்மாலின் ஏற்பாட்டில் இன்னொரு விஷயம் கவனிக்கத் தகுந்தது. இதுவரை ஹிந்தி பாஷையிலேயே துரைத்தனக் கணக்குகளும், சட்டங்களும் எழுதப்பட்டு வந்தன. தோடர்மாலின் புதிய முறைப்படி துரைத்தனத்துக்குரிய எல்லா விஷயங்களும் பேர்ஷியன் பாஷையில் எழுதப்பட்டன. இதனுல் யாவரும் இராஜ பாஷையைக் கற்றல் அவசியமாயிற்று. நியாயஸ்தலங்களிலும், அரசவையிலும் வழங்கிவந்த பாரசீக பாஷையை ஹிந்துக்கள் அதுமுதல் வெகு ஆர்வத்தோடுங் கற்கத் தொடங்கினர். அதனுல் ஹிந்துக்களுட் சிலர் பாரசிக பாஷையில் பூர்ண பாண்டித்தியம் பெற முற்பட்டு முகமதியரையும் விஞ்சி விட்டனர். ஹிந்துக்களே முகம்மதியருக்குப் பாரசிகம் பயிற்றும் குருமணிகளாய் விளங்கிச் சக்கரவர்த்தியினிடம் பரிசும், சன்மானமும் பெற்றனர். பாரசிக பாஷா ஞானம் பரவத் தலைப்படவே வட இந்தியாவில் உர்துவென்னும் புதுமொழி யொன்று தோன்றுவதாயிற்று. ஹிந்துக்கள் பாரசிக பாஷையைப் போதிக்கும் ஆசிரிய பதவியைப் பெற்றிராரெனின் இப் புதுமொழி யுண்டாவதற்கோர் ஏதுவுமின்ரும். ஆக்பரும், தோடர்மாலும் சேர்ந்து உழைத்ததனுல்தான் ஹிந்துக்களுக்கு இராஜரிக ஞானமுண்டாகத் தலைப்பட்டதெனக் கூறல் மிகையன்ரும். அவர்களது நன்முயற்சியின்ருமாயின் ஹிந்துக்கள் முகமதியரினும் பலபடித் தாழ்ந்த நிலையிலேயே இருக்கவேண்டும்.

**படாயனியின் அபிப்பிராயம்.**

நாட்டினை வென்று ஆட்சி புரிந்த முஸ்லாமியருக்கும், அவ்வாட்சிக் கடங்கி யுட்பட்ட ஹிந்துக்களுக்கும் இருந்த வேற்றுமை ஒழிந்து இருதிறத்தார்க்கும் ஏற்பட்ட சமநிலையைக் கண்டு சில முகமதியர் ஆக்பரது ஆட்சியை அடியோடு வெறுத்தனர். அக்காலத்து விளங்கிய படாயனி யென்னும் சரித்திராசிரியன் ஆக்பரின் ஆட்சியில் தான் கண்ட

குணங்களையும், குறைகளையும் அடியில் வருமாறு எழுதியிருக்கிறான்.

"இவ்வருஷத்தில் (1574) நாட்டில் பயிரிடுமுறையைச் செவ்வனே கையாண்டு குடிகள் தம் நிலையை மேம்படுத்திக்கொள்ளுமாறு சக்கரவர்த்தி ஒரு கட்டளை பிறப்பித்தான். நீர்வள முண்டாயினு மின்றாயினும், நகர்களினருகேனும் குன்றுகளை யடுத்தேனும், காடேனும் வனமேனும், நதி நீர்நிலைகூப முள்ளவையேனும் அன்றேனும் நாட்டிலுள்ள எல்லாப் பாகங்களும் ஒன்று விடாமல் அளக்கப்பட்டன. மொத்த நிலமும் சாகுபடி செய்தால் ஒரு கோடி டங்காக்கள் மதிப்புள்ள விளைவளிக்கும் பல பாகங்களாகப் பிரிக்கப்பட்டன. நடுநிலை கோடாதவனும், திறமை வாய்ந்தவனுமான ஒருத்தியோகஸ்தன் அந்தந்தப் பாகங்களை அடிக்கடி மேற்பார்வையிட்டு வந்தான். அவ்வுத்தியோகஸ்தனுக்குக் குரோரி என்று பெயர். அவனது முயற்சியால் மூவாண்டுகள் கழியுமுன் நாட்டிலுள்ள நிலங்கள் யாவும் சாகுபடி செய்யப்படவேண்டுமென்றும், துரைத்தன நிதி நிறையவேண்டுமென்றும் ஒரு திட்டம் ஏற்பட்டிருந்தது. அதற்கேற்ப மற்றும் பலவித சட்டங்கள் விதிக்கப்பட்டன. எனினும், அவ்விதிகளைச் சரியாய் அநுசரித்தல் அரிதாயிற்று. அவ்வுத்தியோகஸ்தர் நாளடைவில் நெறிதப்பிப் பேரவாக்கொண்டு சுயநலப் பிரியராயினர். அதனால் நாட்டிற் பெரும்பான்மையும் காம்பாகவே கிடந்தது. குடிகள் தம்மனைவி மக்களை விற்று வயிறு வளர்க்கலாயினர். எங்கும் குழப்பம் மிகுந்தது. தோடர்மால் அனேக க்ரோரிகளைத் தண்டிக்க முற்பட்டுப் பலரைக் குற்றவாளிகளாக்கி அவர்களைப் பலவகை ஹிம்சைகட்கு முட்படுத்தினன். நெடுங்காலம் சிறையிலடைபட்டு மரித்தோர் எண்ணிறந்தோராவர்."

படாயினியின் கூற்றினை முழுவதும் உண்மையென்று கோடற்கில்லை யெனினும் அதிலிருந்து நாம் ஆக்பர் விதித்த

ஆக்பர் ஏற்பாட்டின் குண தோஷங்கள்

சட்டங்களின் இயல்பையும், அவன் அவற்றை நிறைவேற்றுவதற்குக் கொண்ட மனவுறுதியையும் அறிகிறோம். சீர்திருத்தங்களைப் பழித்துரைக்க முற்பட்டவனேனும் படாயினி ஆக்பரின் நல்லுள்ளத்தினையும், அவனது செயலின் தன்மையினையும் அறியாதவனல்லன். முகல் அரசாங்கத்தில் உத்தியோகஸ்தராய் வேலை பார்த்துவந்த ஹிந்து, முஸ்லிம் என்னும் இருதிறத்தினரும் நாடு முழுதும் பரவிக் கிடந்தனர். சில ஜில்லாக்களில் போரூழியத்திற்குப் பதில் ஜனங்கள் அரசாங்கத்தாருக்கு வரி செலுத்திவந்தனர். அவ்வரியை ஆங்காங்குள்ள உத்தியோகஸ்தர்கள் வாங்கிவந்தனர். அவ் வுத்தியோகஸ்தர் தமது அந்தஸ்திற்கேற்ப விதிக்கப்பட்ட தொகையின் அளவுக்கு வீரர்களையும், பரிகளையும், வேழங்களையும் களத்தே கொண்டுவந்து நிறுத்துவர். அப்போது அவரது பதவியும் தீர்மானிக்கப்படும். அவர்கள் பத்து, இருபது, சதம், ஸகஸ்ரம் எனும் முறைப்படி மன்ஸப்தார்களாக நிச்சயிக்கப்படுவார்கள். இவ்வழக்கம் ஆக்பர் காலத்தில் முதன் முதல் ஏற்பட்டதுமன்று. அவனுக்குமுன் அரசாண்ட மன்னர்காலத்திருந்த வழக்கங்களையே மேற்கொண்டு அவற்றிலுள்ள தீமைகளையும், குறைகளையுங் களைந்து சீர்திருத்தினனென்றே கொள்ளவேண்டும். மன்ஸப்தார்கள் சோம்பேறிகளாய்த் தம் மனம்போன வாழ்வு வாழ்ந்து வரம்புகடந்து பணத்தைச் செலவிட்டு மேன்மேலும் பொருளின்மேல் பேரவாக்கொண்டு வந்தமையால் அவர்கள் நாளடைவில் தம் சீர்மை குன்றி வறியராயினர். அதனால் போர்வீரர்க்குச் சேரவேண்டிய பணமுமில்லாமல் அவதிப்படலாயினர். அப்போது அமீர்கள் அற்பவூழியஞ் செய்வோரைத் திரட்டி அவர்களைத் தகுந்தபடி உடைதரிக்கும்படி செய்து வீரர்களை அனுப்புவதுபோல் அவர்களைப் போர்க்கோலத்துடன் அனுப்பிவைப்பார்கள்.

படாயினி எழுதுகிறான் :—'மன்ஸப்தார்களின் செலவிலும், வரி வசூல் முறையிலும் சிறிதும் மாறுபாடு ஏற்

படவில்லை. ஆனால், எளிய போர்வீரரின் வயிற்றில் மாத்திரம் மண்தான் விழுந்தது. அவன் முன் தனக்கிருந்த உற்சாகத்தையும், கிளர்ச்சியையும் முற்றிலும் இழந்தவனானன். துணி நெய்வோரும், பருத்திப் பதனிடுவோரும், மாவேலை செய்வோரும், பிறரும் குதிரையொன்றை வாடகைக்குப் பேசி யமர்த்திக்கொண்டு சிலரைத் தமக்கு வீரராக உடன் கூட்டிச் சென்று சக்கரவர்த்தியின் தயையால் மன்ஸப்தார் பதவியைப் பெற்று ஒரு க்ரோரியாகவோ, படைத் தலைவனாகவோ ஆவது வழக்கமாயிற்று. சிறிது நாளைக்குள் புரவியையிழந்து அத்தகையோர் காலாட்படையிற் சேர்வர். .........இங்ஙனம் நடந்த மோசம் நாடெங்கணும் பாவத் தொடங்கியது. சக்கரவர்த்தியும் இதனை அறியாதவனல்லன். ஆனால், நல்லவேளையாய் அவன் தனது பகைவர் யாவரையும் வென்று சத்துரு பயமின்றி இருந்தமையால் வீரர் துணையை நாடாதிருந்தான்."

ஆக்பர் நாட்களில் தோன்றிய ஏற்பாட்டில் பல குறைபாடுகள் பிற்பட்டு உண்டாயிருக்கக் கூடுமென்பது உண்மையே. ஆயினும், அப் போர்வீரரால் ஆக்பர் சக்கரவர்த்திக்குப் பகைவரை முறியடித்து அடக்குவதற்குப் பல நன்மைகள் உண்டாயிருக்க வேண்டு மென்பதற்கு ஐயமுமின்று. ஆக்பர் தனது ஏற்பாட்டினல் நேரக்கூடிய குறைகளையும் தீமைகளையும் களைவதற்குத் தன்னுற் கூடியவரை முயன்றும் அது பலியாமற் போனமை அவனது பெருமைக்கும் புகழுக்கும் எவ்வாற்றானும் இழுக்காகாது. உலகில் எதுதான தன் அளவில் நின்று தூய்மையிழவாது சிறப்புற்றிருக்கிறது? அக்காலத்தில் துரைத்தனத்தை எய்ப்பதும், ஏழைகளை வருத்துவதும் சகஜமேயன்றோ? படாயினி மேற்கூறியாங்கு ஆக்பரின் ஆட்சிமுறையைப்பற்றிக் கூறியதற்குக் காரணந்தா னென்னையோவெனின் பொதுவில் சக்கரவர்த்தித் தன் கொள்கைகளை நாட்டில் நிலைபெறச் செய்தற்குப் போதுமான கவலை எடுத்துக் கொள்ளாமலும் மனவுறுதி காட்டாமலு மிருந்தமையே

ஆக்பரின் மனத் தூய்மையும் மதப்பற்றும்.

யாம். அவனது உள்ள விரிவும், கருணையும் அவன் செய்த எல்லாச் சீர்திருத்தங்களுக்கு மடிப்படையாய் அமைந்திருந் தன. அவன் ஹிந்துக்களும் இஸ்லாமிய பிரஜைகளைப் போல் வரி செலுத்துவதில் எல்லாச் சுதந்திரங்களையும் பெற வேண்டுமென்று கருதியதுபோலவே மத விஷயங்களிலும் அவன் இருதிறத்தார் மாட்டும் ஒரேவிதமாய் நடந்து கொண்டான். பாரசிக பாஷா ஞானம்பெற்ற உடன் பிறந்தோ ரிருவர் சூபியாது மதமுடிவுகளை ஆக்பருக்குச் சொல்லி விளக்கிவருகையில் ஆக்பரின் மனம் மெழுகுபோல் உருகுவதாயிற்று. பைய்ஸி என்னுங் கவிராயனின் நட்பும், அவனது சகோதரனும் பல நூல் வல்லுநனுமான அபுல் பாசலின் பழக்கமும் ஏற்பட்டபின் ஆக்பரின் மதப்பற்றும் வைரமும் குலையலாயின. 1568-ம் ஆண்டில் ஆக்பர் சித் தூரை முற்றுகையிட்ட காலத்தில் அவன் பைய்சியின் நட் பினையும் அதற் கப்பால் ஏழாண்டுகள் சென்ற பின் அவன் மூலமாக அபுல்பாசிலின் உறவினையும் ஆக்பர் பெற்றான். ஆக் பரின் உள்ளம் கடினமானதன்று. மெழுகுபோல் கரைந்து உருகும் இயல்பினது. அவன் எல்லா மதங்களிலும் போற் றற் குரிய பல நன்மைகளும் உண்மைகளும் உள்ளன வென்று கண்டறிந்தான். இளமைதொட்டு ஆக்பருக்குப் பண்டிதர்பாலும், மதப்ரசாரகர்பாலும் நேயம் உண்டாய் நாளடைவில் அது முதிர்ந்துகொண்டே வந்தது. நூல் வல்லாரைக் கூட்டி அவர்களது சம்பாஷணைகளைக் கேட்பதி னும் அவனுக்கு இன்பம் பயப்பது வேறொன்றின்றும். ஆக் பர் கல்விமான்களை ஆதரிக்கும் பெரும் பண்பினன். அருங் கலா விநோதனாகிய சக்கரவர்த்தி தன் அரண்மனையில் பெரிய நிலையமொன்று தாபித்து அதில் சிறந்த நூல்களை ஏராளமாகச் சேர்த்து வைத்திருந்தான். அவன் அந்நூற் பொருளைப் பன்முறை அறிஞர்பாற் கேட்டுவப்பதையே தனக்குரிய காலப்போக்காகக் கொண்டவன். அபுல்பாசில் பெரிய வேதாந்தி; நிறைந்த கல்வி கேள்வியுடையவன்; தூய நடத்தையோடு மொழுக்கத்தோடுங் கூடியவன். அவன் சக்கர்வர்த்தியின் அருங்குணங்களை வியந்து அவனிடம் தோழமைபூண்டு தனது உடல் பொருள்

ஆவி எனும் மூன்றினையும் அவன் உகந்த பணிசெய்தலி லேயே நாட்டிவந்தான். சமய வாதங்கள் அரச சபையில் நடைபெறும்போது அவன் காட்டிய உற்சாகத்தை இவ் வளவென்று சொல்லமுடியாது. 1574-ம் வருஷத்தில் பாதி புரி நகரில் பூஜாக்ரகமொன்று நிருமித்து ஆக்பர் அதையே தனது முக்கிய வாசஸ்தான மாக்கிக்கொண்டிருந்தான். சமயவாதங்கள் யாவும் இபதத்கானு என்னும் ஆராதனக் கூடத்தில் நிகழும். பாதிபுரி யென்பது திவ்யஸ்தலங்களுள் ஒன்று. அநேக மதங்கள் வளருமிடம் என்னலாம். ஆக்ப ருக்கு ஸ்தலயாத்திரை செய்வதில் விருப்பம் அதிகம். அவன் அநேக திருப்பதிகட்குச் சென்று ஆங்காங்குள்ள முஸ்லா மிய குரவரின் கல்லறைகளைத் தரிசிப்பதுண்டு. அவன் முடி தரித்துப் பதினான்கு வருஷ மளவும் அவனுக்குப் பிறந்த குழந்தைகள் யாவும் மரித்துவிட புத்திரப் பேற் றினை அடையாமையின் அக் குறையைப் போக்கிக்கொள்ள விரும்பிப் பல பதிகட்குச் சென்றான். ஆக்ரா நகர்க்கருகே யுள்ள சிக்ரி யென்னுங் கிராமத்தில் வதிந்து வந்த ஒரு துறவியை அண்டி ஆக்பர் தனது குறையை அறிவித்தான். அத்துறவியும் சக்கரவர்த்தியின் இஷ்டத்தைப் பூர்த்தி செய்வதாக வாக்களிக்க ஆக்பர் தனது மகிஷியான அம்பெர் இராஜ குமாரியைத் துறவியின் ஆச்சிரமத் தில் சிலகாலம் விட்டு வைத்தான். இடையில் ஆக்பர் பல தடவை சிக்ரிக்கு வந்து போகும்படி ஏற்பட்டது. அதனால் சிக்ரியில் செல்வம் பெருகி மல்கியது. ஸலிம் சிஷ்டியின் புகழும் வளர்ந்து யாண்டும் பரவலாயிற்று. அவன் புது மடமொன்று தாபித்து மசூதியொன்றுங் கட்டினான். அவன் பெருமையைப் பலர் கேட்டறிந்து சிக்ரிக்கு வந்து குடியேற லாயினர். அதனால் அதில் அழகிய கட்டிடங்களும், மாளிகைகளும் எழுந்தன. சிக்ரி தன் பழைய நிலை மாறிப் புது நகராயது. அதன் பெயரும் மறைவதாயிற்று. ஜய புரி என்று பொருள் கொண்ட பாதிபுரி என்னும் புதுப் பெயரை அதற்கிட்டு வழங்கலாயினர். ஆக்பருக்கும் அதற் குப் பின் ஒரு குழந்தை பிறந்தது. அம்மகவுக்கு அப்பெரி யோனின் பெயரையே யிட்டுச் சலீம்என்று அழைத்தார்கள்.

பிற்பட்டு ஜிஹாங்கீர் என்று பிரசித்தி பெற்ற சக்கரவர்த்தி சலீமென்னும் ஆக்பரின் புத்திரனே. அந்நிகழ்ச்சிக்குப் பிறகு பாதிபுரி புதுவளம் பெற்றுப் பொலிவடைந்திருந்தது. ஆக்பர் அந்நகரை அலங்கரித்துச் சிறந்த சிற்பிகளைக் கொண்டு அதைப் பெரு நகராக்கினன்.

ஆக்பருக்குப் பின் ஆக்ராவின் நிலை.

அந்நகருக்கு அப்போதிருந்த பொலிவையும், அது இப்போது தன் பொலிவு குன்றிப் பாழ் நகராய்க் கிடக்கும் கிடப்பையும் நோக்கும் போது நமக்கு நம்மையறியாமலே ஓரச்சமும், வியப்பும், கொதிப்பும் உண்டாகின்றன. அந்நகர் இப்போது ஆத்மா நீங்கிய உடல்போல் தனித்து நிற்கின்றது. அதன் எழு பெரு வாயில்களும், அற்புத மாளிகைகளும், பெருமையுற்றிலங்கும் மசூதியும், சலவைக் கல்லால் அழகுபெறச் சமைந்த ஸலீம் துறவியின் ஆச்சிரமும் இன்னும் உள்ளன. அந்நகரின் நிருமாணத்திற்குப்பட்ட கஷ்டமும, பணச்செலவும் கொஞ்சமல்ல. அந்நகர் உண்டாகிப் பதினன்கு வருஷங்களாகு முன்னரே அது இந்நிலைக்கு வந்து விட்டது. ஆக்பர் மரித்து ஐந்தாண்டுகட் கப்பால் வில்லியம் பிஞ்ச் துரை அதை வந்து பார்வை யிடுகையில், 'பாழடைந்து மனுஷ்ய சஞ்சாரமின்றி இரவில் செல்லுங்கால் பீதியை விளைவிக்கக்கூடிய' நிலையை அது அடைந்திருந்ததாக ஏற்படுகிறது. அது முதல் அந்நகர் நிர்மானுஷ்யமாய்ப் பாழாகவே கிடக்கிறது. பிற்பட்டு அரசு செலுத்திய மன்னருள் எவனும் ஆக்பரின் பெரு நோக்கங்களைக் கொண்டவனல்லன். ஆக்பரின் திவ்ய நகரில் உறைதற்கு விழைந்தவனுமல்லன். அந்நகரில் உள்ள அரண்மனைகளையும், மசூதியையும், வெண் கல்லறையையும், நீராடு துறைகளையும் நோக்கும்போது இந்திய சக்காவர்த்திகளுட் சிறந்து விளங்கிய ஆக்பரின் பெருமையை நினையாதிருத்தல் இயலாது. 'கனவாலயம்' எனப் பொருள்படும் க்வாம்சா வென்னும் ஆக்பரின் சயனவறையில் அழகிய கற்றிரைகளும், அவற்றின் மேலே அழகுபடச் செதுக்கப்பட்டிருக்கும் பாரசீகப்பாக்களும், ஆக்பர் மாலை நேரங்களில்

நின்று சுற்றிலுமுள்ள சமவெளிப் பிரதேசங்களைக் கண்டு மகிழ்வதற்கநுகூலமாகக் கட்டப்பட்டிருந்த ஸ்வர்ண மயமான தாழ்வாரங்களும் இன்னும் காணப்படுகின்றன. சக்கரவர்த்தியின் புகழைப் பாக்கபாடிக் கௌரவித்த பைய்ஸி கவிராயனும், அபுல்பாசிலும் வசித்த இல்லங்களும், முஸ்லாமிய மத போதகரும், கத்தோலிய கிறித்தவப் பாதிரிமாரும், அனல் வணக்கக் கொள்கையினரும், பிராமணகுரவரும், புத்தமதத் துறவிகளும், சேர்ந்து தூணாஸனங்களிலும், மேடைகளிலுமிருந்து சமயவாதம் புரிந்து வந்த மண்டபமும் முன் இருந்த நிலைமையில் மாறாது பாழாய்க் கிடக்கின்றன.

**இந்தியரின் சிற்பஞானம்.**

இந்திய சில்பவாராய்ச்சியில் வல்லுநனான பேர்குஸன் பாழடைந்த பாதிபுரியின் அழகையும் சிறப்பையும் வியந்து தான் அங்கே கண்ட சித்திரங்களின் வனப்பை வர்ணிக்கத் தொடங்குகிறான். 'பசீஸி கச்சேரியை எதிர் நோக்கியுள்ள துருக்கி சுல்தானியின் அந்தப்புரமும், ஐந்தடுக்கு மாடிகளுடன் கூடிய பஞ்சமஹால் என்னும் ஒருவகைப் புத்த விஹாரமும், ஆக்பரின் தோழனான ராஜா பீர்பால் வசித்த க்ருகமும் மிகவும் ரமணியமான வேலைப்பாட்டுடன் கூடிய கட்டிடங்க'ளென்று பெர்குஸன் வியப்புறுகின்றான். மிரியம் கோதியிலுள்ள சித்திரங்கள் புது மாதிரியில் அமைந்தவை. அவற்றை அநுசரித்துப் பஞ்சாப் சித்திரம் வரைவோர் சிலர் எழுதிச் சேர்த்த படங்களின் தொகுதி யொன்று ப்ரிட்டிஷ் ம்யூஸியத்தில் வைக்கப்பட்டிருக்கிறது. ஆக்பர்புறச்சமயத்தாரிடம் அன்பு காட்டி அவரை ஆதரித்து வந்தமையே காரணமாக ஜெஸுயிட் பாதிரிமார்கள் அவனது சபையை அலங்கரித்தனர். அவர்களின் முயற்சியால் ஏற்பட்ட சித்திரங்கள் பலவுள. அரியோலேஸ் தேவதூத கணங்களுடனிருப்பது போல் ஓரிடத்தும், மேரி கன்னிகையின் உருவம் போல் ஜிஹாங்கீரின் பவனத்திலும், ஆதாமின் வீழ்ச்சியும், மேரிக்கு ஜீஸஸின் பிறப்புணர்த்தலும் பாதிபுரியில் காணப்படுகின்றன. கனவாலயத்தில் காணப்படும் சித்திரங்களில் சீனாது

சில்ப வன்மை வெளியாகிறது. இத்தகைய சித்திர வேலைப் பாடுகளுடன் சிறப்புப்பெற்ற பாதிபுரி நகரை இந்திய பாம்பி யென்று சொல்லத் தடையில்லை. அதில் பலநாட்டுச் சில்பிகளின் வன்மை வெளியாகிறது. அவ்வளவு அழகும் இனிமையும் நிறைந்துள்ள பல திறத்தனவான சித்திரங்கள் வேறெந் நகரிலும் இல்லையென்று திட்டமாகக் கூறலாம். ஆக்பர் மிகவும் ரஸிகன். அவன் சில்ப சாத்திரத்தைப்பற்றிய தனது அபிப்பிராயத்தை அடியில் வருமாறு தனது தோழ னொருவனுக்கு எடுத்துக்காட்டுகிறான். 'சித்திரத்தை வெறுப் போர் பலர்: அத்தகையோரை நான் வெறுக்கிறேன். கடவுளின் ஸ்வரூபத்தைப் பிறர் அறியக்கூடாத தனி வகை யில் சில்பி யொருவனே அறிய வல்லவனென்று எண்ணு கிறேன். ஏனெனில், சித்திரம் வரைவோன் உயிருடன் கூடிய ஒவ்வொன்றையும் வரைய முயற்சிக்கிறான். தான் வரையும் உருவத்தில் உறுப்புக்களை ஒவ்வொன்றாகத் தீட்டு கிறான். அவ்வுறுப்புக்களின் அமைப்பைப்பற்றி அவன் எண்ணி ஆலோசிக்கையில் தன்னால் ஈசுவர சிருஷ்டியை அதன் இயற்கைச்சுவை குன்றாது படத்தில் அமைப்பது மிக வும் அருமையென்று அறிகிறான. அதனால் உயிரளிக்கும் முழு முதல்வனைத் தியானித்துத் தன் அறிவில் முதிர்ச்சி யடை தல் எளிதாகின்றது.' ஆக்பருக்குச் சித்திரத்தில் பிரியம் அதிகம். அவன் ஓவியக்காரர் பலரை ஆதரித்து வந்தான். ஒவ்வொரு வாரத்திலும் அவர்கள் செய்து காட்டிய வேலை யைக் கண்டு மகிழ்ந்து உற்சாகப்படுத்துவான். அபுல்பாசில் எழுதுகிறான். "அதனால்தான் அக்கலைப்பயிற்சி வளம் பெற் றது. கலைஞர் பலர் பெரும் புகழ்படைத்தனர். பிஹ்ஸாத் என்னும் பாரசீக ஓவியக்காரன் ஒருவன் ஐரோப்பிய ஓவியக்காரருக்குச் சற்றும் பின்னிடாமல் அவருக்குச் சமானமான பெருமையை யடைந்திருந்தான். பழுதில்லா மல் காட்டப்பட வேண்டியவை முற்றும் அடங்கி மிகவும் நேர்த்தியாகச் சமைக்கப்பட்ட சித்திரங்களை இப்போதும் படங்களில் பார்க்கலாம். அவற்றுக் கிணையெனக் காட்டற் குரிய சித்திரங்கள் எக்காலத்து மில்லை யென்னலாம்." அபுல்பாசில் ஆக்பர் ஜீவிய காலத்திலேயே இவ்வகையாக

எழுதுகிறான். அக்காலத்தில் பிரசித்தி பெற்றிருந்த நூற்றுவருள் ஹிந்து சில்ப வறிஞரே மற்றையோரினும் சிறப்புற்றிருந்தனரென்றெழுதுவது கவனிக்கத் தக்கது. பாரசீகநாட்டுச் சில்பிகளின் திறமையை அவன் அங்கீகரியாமலில்லை.

மத வாராய்ச்சியுங் கோள்கைகளும்.

இத்துணைச் சிறப்பு வாய்ந்த பாதி புரியிலிருந்து கொண்டு தான் ஆக்பர் உலக மதமொன்று ஏற்படுத்த வேண்டுமென்று தனக்கிருந்த விருப்பத்தினை நிறைவேற்றிக்கொண்டான். சமய நூல் வல்லாரைக் கூட்டித் தனது ‘பூஜாக்ரகத்தில்’ உண்மை யாராய்வானுயினன். ஆதியில் கலைவல்லாருக்குள் இருந்த ஒற்றுமை குலைந்தது. காரண வகையான் நியாய பரிசிலனம் செய்தற்கு மாறாகப் படித்தோர் ஒருவரை யொருவர் பழிக்கவும் ஏசவுந் தொடங்கி வரம்பு கடந்து சக்காவர்த்தியின் முன்னிலையில் தாமிருத்தலையும் மறந்து முறைதப்பி ஒழுகலாயினர். தனக்குள்ள ஐயப்பாடுகளைத் தீர்த்துக்கொள்வதற்காக இவர்களைக் கூட்டிய அரசனின் சந்தேகங்கள் முன்னிலும் பன்மடங்கு அதிகரித்தன: அவனது மயக்கங்கள் ஒழிந்தபாடில்லை. முகமதிய மதத்துள்ள பல பிரிவினர்க்குள் எழுந்த சச்சரவுகள் விருத்தி யடைந்து வந்தன. இதனடியாகப் பல வசைக் கிரந்தங்கள் வெளித் தோன்றின. சமயவாதிகளை அபுல் பாசில் உற்சாகப்படுத்தி அவரது வாதங்களை நீட்டிப்பித்து வந்தான். அவர்களுள் ஒருவர்மேல் ஒருவரைத் தூண்டிவிட்டு அவர்க்குள் நிகழும் போரினை மேன்மேலும் கொழுந்துவிட் டெரியும்படி மூட்டிவிடுவான். தத்தம் சமயங்களை முன்னிட்டு ரோஷத்துடன் வழக்கிடும் மதநூலாராய்வாரின் பிடிவாதத்தையும் அறியாமையையும் ஆக்பர் கண்டு அவர்களுக்காக இரங்கி வருத்த முறுவான். ஆக்பரின் அகவிழிகளுக்கு உண்மை மதத்தின் தன்மை புலனுயது. எல்லாச் சமயங்களிலும் உண்மைப் பொருளடங்கியுள்ளதென்பதும், ஆயினும் எந்த மதமும் கடவுளைச் சேர்ந்து நித்தியாநந்த நிலையை அடைதற்குக் குரிய சாதனத்தைத் தனித்து விரித்துரைக்கும் பெற்றியதன் றென்பதும் ஆக்

பர் கொண்ட கொள்கைகளாம். அபுல்பாசில் எழுது கிறான் :—

“கடவுளே : பிரதி ஆலயத்திலும் தேவரீரின் ஸ்வரூப மறிந்து தரிசனம் பெறும் சான்றோரைக் காண்கிறேன். உலகில் வழங்கி வரும் எல்லா மொழிகளாலும் தேவரீரது கல்யாண குணங்கள் புகழப்படுகின்றன. பல தேவதா வணக்கஞ் செய்வோரும், இஸ்லாம் மதத்தினரும் தேவரீரையே நாடித் தேவரீரின் திருவருள்பெறத் தவம் புரிகின்றனர். ஒவ்வொரு மதமும் தேவரீரைப்பற்றி ஒப்புயர்வற்ற தனி முதல் என்றும், ‘நிகரிலா நேர்மணி’ என்றும் பரவுகின்றது. மசூதியில் தூய வுள்ளத்துடன் தியானிப்பதும், கோயிலில் மணியொலி முழங்குவதும் தேவரீரது கருணாசாகரத்திற் படிந்து இன்புறுதற்குச் செய்யுந் தொழில்களாம். நான் கிறிஸ்தவ ராலயத்திலும், முகமதிய மசூதியிலும் தேவரீரையே குறிக்கொண்டு தேடி யலைகிறேன். தேவரீரது திருவருட் கிலக்கானோர் மத மறியார்; புறமு மறியார். ஆயினும் உண்மை தெளிந்த நீராராகையின் விலக்கத் தக்கவரல்லர். மதத்தின் புறத்தே நிற்போர்க்கு மதத்தைக் கண்டு பழித்தலும், மதத் தகத்தே நிற்போர்க்கு கொண்டது விடாமையும் இயற்கைக் குணங்களாய் அமைகின்றன. ஆனால் ரோஜா மலரின் தாது கமழ்பொருள் விற்போனி தயத்தே படியும்.”

டெனிஸன் மகாகவி ஆக்பரின் மதத்தை அடியில் வருமாறு வெகு அழகாய் விரித்துரைக்கிறார் .—‘ ஸம்சாரமாகிய இருள் மூடிய குகையில் ஞானச்சுடர் கொளுவி நான் பார்ப்பனவற்றைப் படைத்தவனும் படைக்கின்றவனும் அப்பொருளாய் ஆவானும் அல்லனுமாயுமுள்ள இறைவனை வழுத்தி உய்யும் ஜீவர்க ளடங்கிய அற்புத வுலகைக் காண்பேன். மற்றவை யாவும் அப்போதைக் கப்போது மாறி வரும் சடங்கும், வெளித் தோற்றமுமாகவே என் கண்களுக்குத் தோற்றும்.’

மத சீர்திருத்தங்கள்.

சர்வ மதங்களேயும் உள்ளடக்கியுள்ள இப்புது மதத்தைச் சீர்பெறத் திருத்தி யமைத்து பிரஜைகள் அதை அறியும் வகையில் விருத்தி செய்வதற்குப் பல வருஷங்கள் செல்லும். நாடோறும் வைகறையாகுமுன் சக்கரவர்த்தி துயிலி னீங்கி தன் அரண்மனே முற்றத் தெதிர் வாயிலிலுள்ள கல்லின்மீது உட்கார்ந்து மனிதப் பிறப்பின் நிலேமையயும், வாழ்க்கையி னியல்பையும் பற்றி ஆராய்வான். தனக்குள்ள ஐயங்கள் நீங்கித் தெளிவடைத லென்நாளோ வென்று நினைப்பான். கிறிஸ்தவ மத முடிபினேயும், யோகிகள் நாட்டிய வேதாந்தத்தின் தத்துவத்தையும் தக்கோர் எடுத்துரைக்க ஆக்பர் சாவதானமாகக் கேட்டுக்கொண்டிருப்பான். ஆரிய மத நூல்களே அம்மொழியினின்றும் பெயர்த் தெழுதினன். கிரித்தவரது ஆகம நூலினையும், அங்ஙனமே மொழி பெயர்ப்பித்தான். புத்தமத நுணுக்கங்களேயும், இந்தியாவில் பிரசித்தி பெற்ற மதங்களில் ஆழ்ந்து பரந்து கிடந்த உண்மைப் பொருள்களேயும் ஆக்பர் அறிந்திருத்தல் வேண்டும். அதனுல் அவனுக்கு இஸ்லாமிய மதத்திலிருந்த பற்று குறைவதாயிற்று. அம்மதக் கொள்கைகள் அவனது மனத்திற்கு ஏற்றனவாகா: எனினும், அவன் முஸ்லியரது கோயில்களுக்கும் திருத்தலங்களுக்கும் செல்வதைத் தவிர்த்திலன். அரசாட்சியைப் பெற்று இருபத்தோராவ தாண்டிலும் மெக்காவுக்கு யாத்திரை சென்று வரவேண்டுமென்று அவன் கருதி யிருந்தான். அவனுடைய உள்ளம் மலர்ந்து விரிந்தது. ஓரெல்லேக்குள் அடங்கிய இஸ்லாமிய மதமோ அத்துணைச் சிறப்பு வாய்ந்திராமையின் அவன் ஏற்றுக் கொள்ளக்கூடிய நிலேமையில் இல்லாது போயிற்று. இதனுல் முகமதியர்க்குள் இதுகாறும் வழங்கிவந்த மதச் சார்பாள பழக்கங்களுட் சில மறைந் தொழிந்தன. அவர்களிடமிருந்த புறவொழுக்கங்கள் நிலே குலேந்தன. நாணயங்களிற் காணப்பட்டுவந்த மத சூசகமான வாக்கியங்களுக்குப்பதில் இருபொருள்படும் * 'அல்லாஹு ஆக்பர்' என்னும் மொழிகள்

* கடவுள் பெரியவர் ஆக்பர் கடவுள்.

எங்கும் தோன்றிப் பரவின. முஸ்லிம் மக்கள் ஒருவரை யொருவர் சந்திக்கையில் சலாமென்று சொல்லிக் களிக்கும் வழக்கத்தை விட்டு அல்லாஹு ஆக்பரென்றும், அதற்குத் தரமாக † 'ஜல்லா ஜலாலு' என்றும் கூறி உபசரிக்கத் தலைப்பட்டனர். ஆக்பர் பிறரைப் போல் தான் தேவ தாம்சனென்று சொல்லிக் கொள்ளா விடினும் அவன் ஒரு புதிய மதப் பிரவர்த்தகன் என்று சொல்லத் தடையில்லை. முஸ்லாமிய மத நூல்களிற் காணப்படும் விதிகள் வெகு காலமாய் வழங்கி வரும் பழக்கங்களையே ஆதாரமாகக் கொண்டிருந்தன. அவற்றிற்குக் காரணங் காண்பது வீண் முயற்சியாம். நூலி லிட்டது சட்டமாய் முடிந்தது; வைதிகர் கூற்றுக்கு மறுப்புக் கூடாது. விதிகளைக் கடந்து ஒழுகுவோர் அடைந்துவந்த தண்டனை மிகவும் கொடுமை யானது. இத் தன்மைப்பட்ட மதத்தை அந் நிலையிலேயே ஜனங்கள் அநுஷ்டிப்பதற்கு ஆக்பர் சிறிதும் இணங்க வில்லை. இங்கிலாந்தில் எட்டாவது ஹென்ரி சக்கரவர்த்தி செய்தது போலவே ஆக்பரும் செய்யத் துணிந்தான். முகமதிய மதத் தலைமையைத் தானே பூண்டு மதத்தைச் சீர்திருத்த வேண்டுமென்று ஆக்பர் நினைத்தான்.

1580-ம் ஆண்டில் ஒரு வெள்ளிக்கிழமை யன்று பாதி புரியிலுள்ள மசூதியில் ஆக்பர் தன் குடிகளைக் கூட்டி குட்பா வென்னும் ஜபத்தைப் படிக்கலானான். அக்கவிகளி னிடையே பெய்ஸி செருகிச் சேர்த்த புதுவரிகளி லடங்கிய பொருளை ஈண்டுக் குறிப்பாம் :—

இறைவர் எனக்கு அவரது பேரின்ப வீட்டின் பெரு நகரைக் காட்டிக் கொடுத்தார். என்னை விவேகியாகவும், தைர்யசாலியாகவும், பலவானாகவும் படைத்தருளினார். நற்காரியங்களைச் செய்யவும், ஜீவகாருண்யம் நிறைந்த உள் ளத்தனா யிருக்கவும் எனக்குத் துணைபுரிந்து வருகிறார். என் உள்ளம் உண்மையையே நாடி அதன் மயமா யிருக்கும்

† 'அவன் பெருமை நிலவுவதாக' என்று பொருள்படும் இவ்வாக்கியத்தில் ஆக்பரின் மறு பெயராகிய ஜலால் அத்தீன் தோன்ற வமைந்திருத்தலை நோக்குக.

படி அவரே செய்கிறார். மனிதனால் அவரது பெருமைக் குணங்களை அறிந்து அளவிடல் மிகவும் அருமை யாம். அல்லாஹு ஆக்பர்! கடவுள் தனிப்பெரு முழுமுதலாவர்!

ஆக்பர் இதைப் படிக்கையில் தன் முன்னே குழுமியிருந்த மக்களின் திரட்சியைக் கண்டவுடன் அவனது மனம் பதைத்தது. அவனது ஊக்கம் தளர்ந்தது. அவன் நாவும் தழு தழுத்தது. அவன் அந்த ஜபத்தை முழுவதும் படிக்க முடியாது போகவே வழக்கமாய் வாசிப்போன் முன் வந்து அதன் மிகுதியையும் படித்து முடித்தான்.

இதற்கப்பால் ஆக்பர் இதுவரை உலகில் எந்த மக மதிய நாட்டிலும் நடந்திராத ஒரு புதிய காரியத்தைச் செய்யத் தொடங்கினான். அவன் பெய்ஸியின் தந்தையைக் கொண்டும், அபுல்பாசிலைக் கொண்டும் பத்திரமொன்றெழுதி அதனடியில் தத்தம் கையொப்பங்களை யிடும்படித் தன் நாட்டிலுள்ள மதப்பற்று மிகுதியுமுடைய வைதிகரையும், அரசாங்கத்தில் வேலை பார்த்துவந்த நியாயவாதிகளையும் நிர்ப்பந்தித்தான். முறை கோடாது அரசியற்றும் மன்னவன் மகா நிபுணனாகிய முஸ்லாமிய முட்ஜாஹித்தை விட மேம்பாடுடையவனென்றும், ஆகையின் அவனது அதிகாரத்துக்குச் சகலரும் உட்பட்டிருத்தல் வேண்டுமென்றும், மத விஷயங்களில் முத்ஜாஹித்துக்களுள் அபிப்பிராய பேதம் ஏற்பட்டால் சக்கரவர்த்தியின் முடிவான தீர்மானத்தையே எல்லா முகமதியரும் அங்கீகரித்தல் வேண்டுமென்றும், அரச சாஸனத்திற்கு மீறி நடந்தோர் இம்மையில் தமது பொருளையும், மதத்தையும் இழந்து வருந்துவதோடு மறுமையிலும் நரகத்தில் ஆழ்ந்து அவதிப்பட வேண்டுமென்றும் ஆக்பர் அப்பத்திரத்தில் குறித்திருந்தான். கொரானில் தெளிவாக அறியக்கூடிய விஷயங்களை யொழிந்த ஏனையவற்றில் ஆக்பரின் தீர்மானப்படியே ஜனங்கள் நடக்கக் கடமைப்பட் டிருந்தார்கள். அரசனது தீர்மானத்தை மாற்றிச் சட்ட வாயிலாகவாவது, மதநூல் வல்ல பெரியோரது அபிப்பிராய வாயிலாகவாவது புது நியாயம் பெறுதல் முடியாது. ‘அரசர் பிழையார்’ என்னுங் கொள்கையை

வழக்காற்றிற் கொண்டு புகுத்தியவன் ஆக்பர் சக்காவர்த்தியே. இந்தச் சாஸனத்தைக் கண்ட சில வீர மகமதியர் ஆங்காங்குக் கலகம் விளைவிக்க முயற்சித்தது வீணாயிற்று. ஆக்பர் அவர்களை ஒடுக்கி அவர்களின் கையெழுத்தையும் பெற்றான்.

ஆக்பர் செய்த செய்கை முகமதியர் வழக்கத்திற்கும், கொள்கைகட்கும் முற்றிலும் மாறாயது. அவன் இதைச் செய்து முடித்ததும் ஆக்பர் அந்நாளைய வழக்கத்தை முன்னிட்டுத் திவ்ய ஸ்தலயாத்திரைக்குப் புறப்பட்டு ஆஜ்மீர் சென்று ஒரு முகமதிய துறவியின் கல்லறையைத் தரிசித்து மீண்டான். படாயினி எழுதுகிறான். "எந்த மகானுடைய போதனைகட்குக் கட்டுப்பட்டு ஆயிரக் கணக்காக சிறந்த முஸ்லாமிய சூரவர் ஏற்பட்டனரோ அத்தீர்க்கதரிசியாலுண்டான ஏற்பாட்டினை வேரறச் சிதைத்த ஆக்பர் சக்கரவர்த்தி ஆஜ்மீரிலிருந்த துறவிக்குப் பூஜை செய்து அவரைத் தரிசித்து வந்தது ஓர் புதுமையே!"

ஆக்பரின் பக்தியை விளக்கக் கூடிய விஷயம் பிறிதொன்று குறிப்பிடுவாம். அந்தந்த தினத்தில் உச்சத்திலிருக்கும் கிரகத்திற்குத் தகுந்தபடி தன் உடையை நிறவகையால் தேர்ந்தெடுப்பதும், சூர்யன் தனக் கடங்கித் தானிட்ட பணி செய்வதற்காக இராக் காலங்களில் ஓயாது மந்திரம் ஜபித்தலும், சூர்யனையும் அக்னியையும் பகிரங்கத்தில் வணங்குதலும், மாலை வேளைகளில் தீபமேற்றும்போது தானும் தன்னவையிலுள்ளோரும் மரியாதையாக எழுந்திருத்தலும் ஆக்பருக்கு வழக்கமாயிருந்தன. அக்காலத்தில் நடை பெற்று வந்த விழவொன்றில் எட்டாநாள் சக்கரவர்த்தி ஹிந்துவைப் போல் ஆடை முதலியனவணிந்து சபா மண்டபத்திற்கு வந்து கொலுவில் வீற்றிருப்பான். அவன் வான சாஸ்திரத்துடன் இரசவாத வித்தையும் பயின்றான். ஹிந்து யோகிகளும், முஸ்லாமிய பக்கீர்களும் தத்தம் யோகபலத்தால் செய்து காட்டிய அபூர்வ தொழில்களைக் காண்பதில் அவனுக்குப் பிரியம் அதிகமுண்டு.

ஆக்பரின் புது மதம்.

ஆக்பர் எல்லா மதங்களிலும் தான் கண்ட புது அம்சங்களைத் திரட்டித் தொகுத்து 'தெய்விகமதம்' என்னும் தன் புதுமதத்தை உண்டாக்கினன். இஸ்லாமிய மதத்தினரும், ஹிந்துக்களும் புரிந்து வந்த வைதிகச் சடங்குகளிற் பெரும் பாலனவற்றை நீக்கி விட்டான்.

அளவுக்கு மீறி நடத்தப் பட்ட காரியங்களுக்காகத் தண்டனை விதித்தானேனும் இதர விஷயங்களில் அவன் தலையிட்டுக் கொண்டவனல்லன். சாராய வியாபாரம் செய்வதற்கு இடங் கொடுத்தானேனும் அளவுக்கு மிஞ்சிக் குடித்தோரைத் தண்டியாமல் விடவில்லை. ஷெய்தான் புரியில் பொது மகளிர் இருத்தற்கு அநுமதி யளித்து அவர்களுக் கெனத் தனிக் கட்டிடங்களும் வரிகளும் ஏற்படுத்தினனெனினும் கன்னிகைகளைப் பலாத்காரமாய்த் தீய வழிகளில் புகுத்துவதைத் தண்டித்து வந்தான்.

போர்த்துகல் தேசத்துப் பாதிரிமாரிட மிருந்து கிரித்தவமத வுண்மைகளையும், பிராமணர்களிட மிருந்து ஹிந்து மத சாராம்சங்களையும் கேட்டுணர்ந்து அவற்றிற் பலவற்றை அங்கீகரித்தான். சூர்யனைக கடவுளின் திருவொளி யெனக் கொண்டு நாம் உஷ்ணம், தேஜஸ் முதலியவற்றைப் பெறுவதால் செய்ந்நன்றி பாராட்டக் கடவோம் என்னுங் கொள்கையுடன் ஆக்பர் சூர்ய வணக்கத்தைத் தவறுமல் தினந்தோறும் செய்து வந்தான். முகமதியர் கோக்களைக் கொன்று புலாலுண்ணும் கொடிய வழக்கத்தை அடியோடு நிறுத்தினன். பார்ஸிகள் ஆராதித்து வந்த அக்னி தேவ வணக்கத்தையும், ஹிந்துக்கள் புரிந்து வந்த ஹோமங்களையும் தனது அரண்மனையிலேயே நடத்தி வரும்படி திட்டஞ் செய்திருந்தான். இப் புது மதத்தை அனுஷ்டித்தோர் வெகு சிலரேயாம். பெய்ஸி, அபுல்பாசில் முதலிய முகமதிய உத்யோகஸ் தருட் சிலரும் பாரசிகக் கவிகளுட் சிலரும், பிர்பால் என்னும சக்கரவர்த்தியின் ஹிந்து நண்பனுமே புது மதத்தைக் கொண்டனர். வேறு சிலர் அவன் செய்த ஏற்பாட்டுக்குக் குறுக்குச் சொல்லா விட்டாலும் அதிற் சிறி

தும் சிரத்தை யில்லாத வராயிருந்தனர். சிலர் ஆக்பர் செய்வது பிசகென்று தைர்யமாய் எடுத்துக் காட்டி அம் மதத்தின் உண்மையை மறுத்தனர். பெரும் பாலார் அரசனின் தயையை இழத்தற் கஞ்சிப் புதுமதத்தைப் பின் பற்றி ஒழுகி வந்தனர். சடங்குகளற்றதும், அவனவன் தன் இச்சைப் படி நடப்பதற் கிடங் கொடுப்பதுமான மதத்தில் ஜனங்களுக்குண்டாகும் பற்று வெகு காலம் நீடித்திருப்பது அருமை யன்றோ? மேலும் ஒன்றுக் கொன்று மாறு பட்ட பல வழக்கங்களை வேறு வேறு மதங்களினின்றும் திரட்டி யெடுத்து இப் புது மதம் உண்டாக்கப் பட்டமையின் அது நாளடைவில் அழிவுறுவது இயல்பே யன்றோ? அதனால் ஆக்பரின் புது மதம் அவனுடன் மரித்து விட்டதென்று சொல்லத் தடையில்லை; எனினும், அதனால் நாட்டுக்கு நன்மை யுண்டாகாமலில்லை. ஒருவர்க் கொருவர் சதாவைரம் பூண்டு சச்சரவிட்டு நாட்டில் குழப்பங்களையும், அமைதியின்மையையும் விளைவித்து வந்த பற்பல ஜாதியாரையும் ஒன்றுபடுத்தி, அவர்களுக்குள் ஒற்றுமையை யுண்டாக்கித் தேசிய வுணர்ச்சியையும் சகோதர பாவத்தையும் ஊட்டியது அதுவே என்று சொல்லத் தடையில்லை. ஆக்பரின் தாராள சிந்தையையும் பெருந்தன்மையான நோக்கங்களையும் மறத்தலுங் கூடுமோ?

ஆக்பரின் பூஜாக்ரகத்தில் நடந்து வந்த சமய வாதங்கள் முடிவிற்கு வந்தன. மாக்தும், அப்தான் நபி முதலிய வீர முகமதியர் மெக்காவுக்குச் சென்று விட்டனர். அபுல்பாசிலும் அவனது சகோதரனுமே ஆக்பரை விட்டுப் பிரியாமல் நேயம் மிகுந்திருந்தனர். பைய்ஸி, கவிராயர் பதவியையும், அபுல்பாசில், டெல்லி திவான் பதவியையும் வகித்து வந்தனர். இஸ்லாமிய மதம் தன்னால் முடிவுறவும் தன் மூலமாய் உலகில் என்றும் நிலை பெற்று விளங்கக்கூடிய புதுமத மொன்று ஸ்தாபிதமாகவும் கடவுள் சங்கற்பித்திருப்பதாக ஆக்பர் சக்கரவர்த்தி எண்ணி வந்தான். அவனது கருத்தை ஆதரித்து அவனது தோழரிருவரும் சக்கரவர்த்தி ஜனங்களை ரக்ஷிக்கத் திருவவதாரம் செய்தருளிய மகா புருஷரென்றும்,

அவர் மூலமாய் அஞ்ஞானிகள் உய்யவேண்டு மென்றும் அடிக்கடி சொல்லி வருவாராயினர். ஆக்பர் அவர் கூறுவது உண்மையே யென நம்பி மத நூலுணர்ச்சி மிக்காரிற் பலரை வரவழைத்து அரிய சரித்திர நூலொன்றை எழுதுவித்த னன். 'ஆயிர வருஷங்களாக இஸ்லாமிய மதம் தன் சீர்மை கெட்டுச் சிறிது சிறிதாகத் தாழ் வடைந்த நிலையும் அக்கால நிகழ்ச்சிகளும் அதில் விளக்கி எழுதப்பட் டிருக்கின்றன.

காலவகையினால் பழையன கழித்துப் புதியன கோடற்கு ஆக்பருக்கிருந்த உற்சாகத்தை இவ்வளவென்று சொல்லி முடியாது. நூதன விஷயங்களை அநுபவத்தில் கையாண்டு வருவது எவ்வளவு தூரம் தகுதி யென்று ஆராய் வதில் அவனுக்குப் பிரியம் அதிகம். 'உலகில் மனிதர் அனுஷ் டித்து வரும் நற் பழக்கங்கள் யாவும் ஒரு காலத்தில் புதியன வாய்த்தானிருத்தல் வேண்டும்' என்று ஆக்பர் அடிக்கடி சொல்லி வருவான். அவன் காலத்தில் தான் புகையிலைச் சுருட்டுப் பழக்கம் இந்தியாவில் ஏற்பட்டது. ஆக்பர் அப் புது வழக்கத்தைப் பரீக்ஷித்து அதன் குணத்தைச் சோதிக் கத் தொடங்கிச் சொற்ப காலத்திற்குள் அதை அறவே ஒழித்து விட்டான். அவன் பரிசோதனைக்குள் அடங்காத விஷயங்கள் கிடையா. மத விஷயங்களில் அவனுக்கிருந்த ருசி நாணயம் வார்ப்பித்தல் முதலிய பலவகைத் துறைகளி லும் இருந்து வந்தது. ஆக்பர் சதா ஏதாவது செய்வதி லேயே நாட்ட முடையவன். ஆகையின் அவனது மனத்தை எந்த விஷயத்திலாவது செலுத்திக் கொண்டே யிருப்பான். சதா சலித்துக் கொண்டிருக்கும் மனத்திற்கு ஒரு போக்கு வேண்டுவது இன்றியமையாத தாகையின் புதுமையான செய்கைகளிலும், ஆராய்ச்சிகளிலும் அவனது மனம் நாடி நின்றது. ஆகையால் அவன் ஏற்படுத்திய மாறுபாடுகளிற் சில ஆழ்ந்து யோசித்து முடிவிற்கு வந்த தீர்மானங்களா லாகியன வல்ல. ஆக்பர் உலகப் பழக்கமும் பயிற்சியும் சிறி தும் அடையாத ஒரு குழந்தை அனுஷ்டிக்கக் கூடிய மத மின்ன தென்றறிய ஆவல்கொண்டு இருபது குழந்தைகளைக் கொணர்ந்து வேறெருவனும் அவர்களோடு பேசி அவரது

இயல்பை மாற்றுதபடி ஓரகத்தில் தனித்து வைத்துக் காப்பா ணுயினன். மூன்று நான்காண்டுகள் சென்றபின் சக்கரவர்த்தி அப்பிள்ளைகள் எவ்வகைக் கொள்கைகளில் பற்றுடையர் என அறிய விரும்பி அவர்களை அவ் வீட்டினின்றும் வெளிப்படுத்திச் சோதிக்கையில் அம் மக்கள் பேச்சறியா ஊமைகளா யிருத்தல் கண்டு வியப்புற்றனன். இங்ஙனம் அவன் தவறிய ஆராய்ச்சிகளும் பரீக்ஷைகளும் பலவாம்.

ஆக்பர் நாமா.

சக்கரவர்த்திக்கு உற்றுழி வுதவி இத முரைத்தற்குப் பல கல்விமான்கள் அமைச்சராய் ஏற்பட்டிருந்தனர். இந்தியாவில் புகழ் பெற்ற கவிகளில் பைய்ஸி ஒருவன். கற்பனாசம் ஒழுகச் சொல் நயத்துடன் கவி பாடுவதில் அவனுக்கிணையானோர் அக்காலத்தில் ஒருவரும் இலர். அபுல் பாசில் எழுதி வைத்துள்ள ஆக்பர் நாமா வென்னும் நூல் என்றுமழியாப் பெருமையது. அதனைப் படிக்குந் தோறும் ஒருவன் நூலாசிரியனது உலகியலறிவையும், எழுதும் வன்மையையும், நடு நிலைமையையும், குணநிறைவினையும் வியவா திருத்தல் முடியாது. அக்காலத்து மக்கள் வாழ்க்கையினையும், அவரது நடையுடை பாவனைகளின் மேம்பாட்டினையும், அவரது கல்வி நாகரிகம் முதலியவற்றையும் விரித்துரைப்பதாகையின் சரித்திரவாராய்ச்சிக்காரர் போற்றும் அரும்பெரும் நூலாகும். அவ் வழகிய நூலினைப் பெயர்த் தெழுதிய வொருவன் கூறுகிறுன். 'அந் நூல் எக் காலத்தவரும் இனிது அறியலாம்படி இந்துக்களின் கல்வி மேம் பாட்டினைச் சுருக்கித் தறித்துத் தெளிய வுரைக்கும் பான்மையது. அது அக்காலத்து நில விஸ்தீர்ணம், தீர்வை, வருமானம், விளைவு, ஜனத் தொகை முதலியவற்றின் சம்பந்தமான சங்கியைகளை எளிதிலறிதற்குச் சிறந்த சாதனமாயிருந்து உதவி புரிவதோடு பிராமணர் வளர்த்து வந்த கலைகளின் பல பிரிவுகளைப்பற்றியும், அவரது பழக்க வழக்கங்கள், கொள்கைகள், ஐதிகங்கள், கல்வியறிவு முதலியவற்றைப் பற்றியும் நன்றாய் விரித்துரைப்பதால் அது

எக்காலத்தும் ஜனங்கள் போற்றிக் கையாளும் அரிய நூலாகும் என்பதில் தடையில்லை. நிலப்பரப்பி னளவை யையும், நிலவரி யேற்பாட்டினையும், அந்தந்தக் காலங்களில் எற்பட்ட மாறுபாடுகளையும், நில விளைவின் வருமானத்தை யும், இவை போன்ற பிறவற்றையும் குறிப்பிடும் பதிவுப் புத்தகமாதல்பற்றி அந்நூல் சரித்திராசிரியர்க்கும் என்றும் பயன்படுவதாம்'. அக்காலத்தில் சரித்திரத்தை அறிதற்குப் போதுமான ஆதாரங்களடங்கிய நூல் அதனினும் வேறாய தொன்றுமில்லை யென்று சந்தேகமறக்கூறலாம். அந்நூலின் மூன்றாவது பகுதியே ஆக்பர் புரிந்துள்ள அருஞ்செயல் களைத் தெள்ளிதின் தெரிவிப்பதாகும்.

ஆக்பர் அரசாட்சியின் பிற்பகுதி.

ஆக்பர் தான் புதிதாகக் கண்டுபிடித்த மதம் நாடெங்கும் பரவுதற்கான முயற்சிகளை நாடி உழைத்து வருகையில் தனக்கு விரோதமாகக் கிளம் பிய சிற்றரசாது தடுக்கையும் அடக்கிக் கொண்டே வந்தான். கூர்ஜாத்தையும் வங்காளத்தையும், கைப்பற்றியபின் ஹிந் துஸ்தானம் ஆக்பரின் ஆட்சிக்கு உட்பட்டிருந்ததென்று தாராளமாய்க் கூறலாம். ஆக்பரின் சகோதரனை ஹகீம் காபூலிலும் இதர ஆப்கானியப் பிரதேசங்களிலும் அடிக்கடி கலகித்துக்கொண்டிருந்தான். 1585-ம் ஆண்டில் படக்ஷான் ஆக்பரின் கையைவிட்டு நழுவிவிட்டது. மறு வருஷத்தில் யுஸூப்ஸாயிக ளென்னும் மலை நாட்டினரை அடக்குவதற் காகச் சென்ற ராஜா பிர்பால் அமர்க்களத்தில் தோல்வியுற் றான். ஆயினும், ஹகீம் மரித்தபின் காபூலில் சமாதானம் நிலைத்துவிட்டது. காஷ்மீரமும் ஆக்பருக்குப் பணிந்து அவ னது ஆட்சிக்கு உட்பட்டது. ஏழுவருஷங்களுக் கப்பால் காண்டஹாரும் ஆக்பருக்குச் சுவாதீனமாயிற்று. ஆக்பர் தக்ஷிணத்தைக் கைப்பற்ற வெண்ணி அதன்மீது படை யெடுத்துச் செல்ல நினைத்தான். டெல்லியில் அரசாண்ட அரசர்களிற் பெரும்பாலார் தக்ஷிணத்தைச் சுவாதீனப் படுத்த முயன்றது பலியாமலே போயிற்று. விந்திய பர் வதத்திற்கு இருமருங்கிலு முள்ள பெரு நாடுகளை ஒரே

அரசன் உரிமையாக்கிக்கொள்ள நினைத்தல் வீணென்பது இந்துதேச சரித்திரத்திலிருந்து பண்டைக்கால முதல் வெளியாகிறது. நாட்டின் அமைப்பு, ஜனங்களின் பழக்க வழக்கங்கள் முதலிய யாவும் முற்றிலும் வேறுபட்டிருக்கையில் வட இந்தியாவும் தென்னிந்தியாவும் ஒரு குடைக்கீழ் அமைதல் எளிதோ? ஆயினும், டெல்லி மன்னன் ஒருவனாவது இவ்வீண் முயற்சியில் தலையிட்டுக் கொள்ளாமலுமில்லை; அம் முயற்சியால் அல்லலுறாமல் தப்பியதுமில்லை. ஆகையின், ஆக்பருக்கும் தக்ஷிணத்தை வென்று அதனுரிமையைப் பெறவேண்டுமென்னும் எண்ணம் உதித்தது ஓர் அதிசய மன்று. அவ்வேலையை அவன் தனது அந்திய காலத்தில் செய்யத் துணிந்தமையின் சாத்பூரா குன்றுகளுக்கப்பால் அவனது செல்வாக்கு ஓங்கவேயில்லை யென்னலாம். 1562-ம் ஆண்டில் ஆக்பர் பர்ஹன்புரியைக கைப்பற்றிக் காண்டிஷ், பீரார் மன்னர்களை அடக்கித் திறை செலுத்தும்படி ஆஞ்ஞாபித்தானேனும் அவர்கள் பேருக்கு மட்டும் ஆக்பரைத் தமது சக்கரவர்த்தியாகக் கருதி வந்தனரே யன்றி, உண்மையில் சுயேச்சையாய் ஆண்டுவந்து நாளடைவில் ஆக்பருக்குச் செலுத்திவந்த பகுதிப் பணத்தையும் நிறுத்திவிட்டனர்.

தக்ஷிணத்தில் சக்கரவர்த்தியின் அதிகாரத்தை நிலைபெறச் செய்தற்காகத் தனது குமாரர்களான மூராதையும், தனியாலையும் பிரதிநிதிகளாய் ஏற்படுத்தியிருந்தனன். அவ்விருவரும் குடிப்பழக்கத்தால் நோயுற்று மரித்தனர். மூராத் அப் பதவியை வகித்தற்குச் சிறிதும் அருகனல்லன். பீராரில் நடந்த ஒரு கலகத்தை அடக்க அவனால் முடியாமற் போகவே சக்கரவர்த்தி அபுல்பாசிலை ஒரு பெரிய சேனைக்குத் தலைவனாக்கித் தக்ஷிணத்தை வென்று வரும்படி அனுப்பினான். ஆக்பரே நேரில் வந்து போரை நடத்தினான். ஆறுமாதகாலம் ஆமத்நகரை முற்றுகையிட்டுச் சுவாதீனப்படுத்தியபின் காண்டிஷிலுள்ள அஸிர்கார் என்னுஞ் சிறந்த கோட்டையை 1600-ம் ஆண்டினில் தனக்குரிமையாக்கிக் கொண்டான். அக்கோட்டை வாயிலில்

இருந்த ஒரு சிலையில் உள்ள சாஸனத்தில் "இராஜாதிராஜரும், சமஸ்தானத்துக்கோர் திலகரும், கடவுளின் சாயையாயுள்ளவருமான ஜலாலுதீன் முகமத் ஆக்பர் பாதுஷா தென்னாட்டையும் காண்டிஷ் என்னும் தாண்டிஷையும் ஹிஜிரா 1010-வது ஆண்டினில் இலாஹி 46-ம் வருஷத்தில் வென்ற" வகையைச் சிறப்பித்துக் குறிப்பிட்டிருப்பதுடன் "ஆக்பர் பாதிபுரி சென்று அப்பால் ஆக்ராவுக்குப் புறப்பட்டான். ஜீஸஸ் கூறுகிறார், 'இவ்வுலகமே ஒரு வாராவதி; அதைக் கடந்து செல்: ஆனால் அங்கே வீடொன்றுங் கட்டாதே. இம்மையில் சிறிதுகாலம் நம்பிக்கையுள்ளோனும் மறுமையிலும் என்றும் தைரியங் குன்றாமல் தான் கொண்டதை முடிப்பான். இவ்வுலக வாழ்வும் சின்னாட்கொண்டதாம். அக்காலத்தை தெய்வ பக்தியிற் செலுத்து; அப்பால் நாம் அடையும் பேற்றினை இன்னதென்றறியோம்' என்றுங் காணப்படுகிறது.

**ஆக்பரின் மரணம்.**

ஆக்பர் தன் அந்திய தசையில் தனக்கியற்கையாயுள்ள மனக் கிளர்ச்சியை இழக்கும்படி நேரிட்டது. அவன் சகிக்கொணாத வியாகுலத்தில் ஆழ்ந்து துன்புற்றான். அவனது உயிர்த் தோழனான பெய்ஸிகவிராயன் 1595-ல் வியோகமடைந்ததால் சக்கரவர்த்தி தனது வலக்கையிழந்தவன்போலானான். அவனது அருமைக் குமாரர்களில் இருவர் தீயவழியில் புகுந்து அகால மரணத்துக்குள்ளானார்கள். மூத்தகுமாரனான ஸலீமோ தந்தையின் சொல்லுக்கு மீறி நடந்து சதா சக்கரவர்த்திக்கு ஓயாத சஞ்சலத்தை யுண்டுபண்ணி வந்தான். அவன் அபுல்பாஸிலின் செல்வாக்கினையும், தன் தீய வழிகளில் அவனுக்கிருந்த வெறுப்பினையுங் கண்டாற்றாது 1602-ம் வருஷத்தில் தக்ஷிணத்திலிருந்து திரும்பி வருகையில் அவனைக் கொல்வதற்கான ஏற்பாடுகளைச் செய்து, அங்ஙனமே அவனது உயிரைக் கவர்ந்தான். அபுல்பாஸில் நெறிதவறா நீர்மையன்; அரசனுக்கு உள்ளும் புறமும் ஒத்து ஊழியஞ் செய்தவன்; ஆக்பரின் நண்பருள் அவனுடன் மிகவும் நெருங்கிப் பழகி ஆக்பரது மனத்தூய்மைக்

கும், அருமையான சீர்திருத்தங்களுக்கும் காரணனுயுமிருந்தவன். அபுல்பாசில் தன் குமாரனுல் மடிந்த செய்தி அறிந்தபின் ஆக்பரின் பலமும், மகிழ்ச்சியும் பறந்தன. இந்த அதிர்ச்சியிலிருந்து அவனுல் தன்னைக் காத்துக்கொள்ள முடியாமற்போயிற்று. குடும்பத்தில் அவனைப்போல் பெருந்தன்மை வாய்ந்தோர் ஒருவரும் இலர். அதனுல் சண்டைகளும், சச்சரவுகளும், குழப்பங்களும் பெருகி விருத்தியடைந்து வந்தன. யானைச் சண்டையொன்று நடைபெற்றது. சக்கரவர்த்தி முன்னிலையில் தாமிருப்பதையுங் கவனியாமலே பலர் துவேஷித்துப் பொருமையால் போராடி நின்றனர். அரசனது சினம் கரை புரண்டு எழுந்தோங்கியது. அவனது மனோநிலையையும், தேக வியல்பையும் அறிந்த சிலர் அவனை அவ்விடத்தினின்றும் அழைத்துச் சென்றனர். அதே வியாஜமாக ஆக்பருக்கு நோய் உண்டாகி நாளடைவில் அது பலப்பட்டது. அவன் மரிக்குந் தறுவாயிலிருக்கையில் மானமின்றிப் பலர் அவனுக்குப் பின் பட்டத்துரிமையைப் பெறுதற்கு வழக்கிட்டுக் கொண்டிருந்தனர். முடிவில் ஆக்பர் தனது மூத்தகுமாரனை சலீமை அருகே யழைத்து, இராஜ்ய பாரத்தை அவன் வசம் ஒப்புவித்து 1605-வது ஆண்டில் அக்டோபர் மாதத்தில் இம்மண்ணுலகை நீத்துப் புகழ் மேனிகொண்டு விண்ணுலகெய்தினன்.



Printed by P. R. Rama Iyar & Co., Madras.

# முன்னுரை.

பள்ளியில் பயிலும் மாணவன் பயின்று தெரிந்து கொள்ளவேண்டிய விஷயங்கள் பலவுண்டு. அவைகளுள் முதன்மையுற்றிருப்பது தான் பிறந்த தேச சரித்திரத்தை ஓதுவதேயாம். எவனொருவன் தன் தேச சரித்திரத்தைத் தெளிவாய்க் கற்கின்றானோ அவனுக்கு தன் தேசத்தின் மேலும் தன் தேசத்தில் வாழ்பவர்கள் பேரிலும் அளவு கடந்த அபிமானம் உண்டாகும் என்பது உண்மை. இக்காரணம்பற்றியே ஐரோப்பா, அமெரிக்கா முதலிய நாடுகளில் சிறுவர்களுக்கு ஏற்றவாறு சிறு சிறு புஸ்தகங் களாக தேச சரித்திரத்தை எழுதி வெளியிட்டுவருவது யாவரும் உணர்ந்ததே.

நம்முடைய தேசமாகிய இந்தியாவானது மிகப் பழமையான சரித்திரமுடையது. இந் நாட்டின்கண் பிறந்து விளங்கிய மன்னர்கள் பலர்; வீரர்கள் பலர்; அமைச்சர்கள் பலர்; அடியார்கள் பலர்; ஆச்சாரியர்கள் பலர். அவர்களால் இந்நாட்டில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் பலவாகும். இன்னோர்களது வரலாறுகளும் அவர்களால் நிகழ்ந்த நிகழ்ச்சிகளும் படிப்போருக்குப் பெரும் பயனை யளிக்கும்.

நம்மிளைஞர் அத்தகைய வரலாறுகளைப் படித்துப் பயன்பெறுமாறு இந்தியர் சரித்திரத்தை மூன்று பகுப்பு களாகப் பிரித்து, படிப்பவர்க்கு ஏற்றவாறு வேண்டுவன வற்றைக் கூட்டியும், வேண்டாதவற்றைக் களைந்தும் எழுதி யிருக்கிறேன்.

திருச்சி,
1—5—13.

பி. தி. ஸ்ரீ.

# பொருளமைப்பு.

# VIII. ஏழாம் நூற்றாண்டு.

(கி. பி. 600—700)

ஏழாம் நூற்றாண்டில் வட இந்தியா, நடு இந்தியா தென்னிந்தியா ஆகிய மூன்று பாகங்களிலும் மேன்மையுற்ற அரசர் ஆண்டு வந்தனர். அவர்கள் ஆளுகையால் நாடும் உயர் நிலையுற்றிருந்தது. வட நாட்டில் கான்யகுப்ஜமும், நடு நாட்டில் பாதாமி நகரும், தென்னாட்டில் காஞ்சிபுரமும் மகிமையுற்றிருந்தன. மக்கள் நிலையும் உயர்வுற்றிருந்தது.

ஸ்ரீஹர்ஷ மகாராஜா :—பிரபாகர வர்த்தனனென்பான் சரஸ்வதி நதிக்கரையில் ஸ்தாண்வீச்வரம் என்னும் புண்ணிய மகா க்ஷேத்திரத்தில், சிற்றரசனாய் ஹூணர், லாடர், கூர்ஜ்ஜரர் முதலிய புறநாட்டாரை ஜயித்து ஆறும் நூற்றாண்டின் கடைசியில் பிரசித்தியடைந்தான். அவன் மகள் இராஜ்ஜியஸ்ரீ மகத அரசன் மௌகரி குலத்தான் கிரகவர்மனுக்கு மனைவி. பிரபாகர வர்த்தனன் இறந்தபோது அவன் மூத்த மகன் இராஜ்ஜிய வர்த்தனன் சிம்மாசனம் ஏறினான். உடனே மாளவ நாட்டரசன் தேவகுப்தன் கிரகவர்மனைக் கொன்று இராஜ்ஜியஸ்ரீயைச் சிறைச்சாலையில் வைத்தான். இராஜ்ஜியவர்த்தனன் தேவகுப்தனுடன் போர் புரிந்து அவனைக்கொன்றான். திரும்பி வரும்போது கர்ணஸுவர்ண (பங்காள) அரசன் நரேந்திர குப்தன் இராஜ்ஜியவர்த்தனனைக் கொன்றுவிட்டான். அப்போது இராஜ்ஜிய வர்த்தனன் தம்பி ஸ்ரீ ஹர்ஷன் அரசனானான் (606).

ஸ்ரீஹர்ஷன் நரேந்திரகுப்தனைத் தண்டித்தபின்பு 60,000 யானைகள், 120,000 குதிரைகள், 50,000 காலாட்கள் கூடிய ஒரு சேனையைச் சேர்த்து, அவைகளின் உதவியால் வட இந்தியாவைத் தன் அரசாட்சியின் கீழ்க் கொண்டுவர நிச்சயித்தான். ஐந்து வருஷங்களுக்குள் வட இந்தியா முழுவதையும் ஜயித்தான். நடு இந்தியாவையும் கைக்கொள்ளலாமென்று நினைத்து நருமதைக் கரைக்கு வந்தான். அப்பொழுது புளகேசி என்ற சளுக்க அரசன் அவனை எதிர்த்து அந்நதிக்குத் தெற்கே வரவொட்டாமல் தடுத்தான்.

பின்பு ஸ்ரீஹர்ஷன் கான்னியகுப்ஜத்தைத் தலைநகராக்கினான். பாஞ்சால தேசம் மறுபடியும் உயர்நிலையுற்றது. கான்யகுப்ஜ நகரத்திற்கு இப்போது கனௌஜ் என்று பெயர். அந்நகரம் 4 மைல் நீளமும் ஒரு மைல் அகலமும் கொண்டது. அங்கு மேடை மாளிகைகளும், குளங்களும், நந்தவனங்களும் நிறைந்திருந்தன. அதில் கல்லால் அஸ்திபாரம் போட்டு செங்கல்லால் சுவரெடுத்து 200 அடி உயரமுள்ள பௌத்த சங்காராமம் ஸ்ரீஹர்ஷன் கட்டினான். அதில் 30 அடி உயரமுள்ள புத்த விக்கிரகம் ஒன்றைப் பிரதிஷ்டை செய்தான். அவ் விக்கிரகம் தாமிரத்தால் வார்த்தது. பல இரத்தினங்கள் பதிக்கப்பெற்றது. சங்காராமத்துச் சுவர்களின் மேல் பல விக்கிரகங்களால் புத்தன் சரித்திரத்தைக் காட்டினான். அதற்குத் தெற்கே சூரியனுக்கு ஒரு கோவில் கட்டுவித்தான். அச்சூரியன் கோவிலுக்குத் தெற்கே சிவனுக்கு ஒரு கோவில் கட்டுவித்தான். இவ்விரு கோவில்களையும் பிரகாசம் பொருந்திய நீல நிறமுள்ள கற்களால் கட்டுவித்தான். இச்சங்காராமம் மிகப்பெரிதாயிருந்தது. இக்கோயில்களில் கூட்டவும் மெழுகவும் 1000 பேர் வேலைக்காரர்கள் இருந்தார்

கள். இரவும் பகலும் பாட்டுக்கள் பாடிக்கொண்டிருப்பார்கள்.

முகம்மதியர் வட இந்தியாவைக் கைப்பற்றும் வரைக்கும், கனௌஜ் நகர் வட இந்தியாத் தலைநகராயிருந்தது. 15-ம் நூற்றாண்டில் ஷெர்ஷா என்பவன் அதை அழித்தான்., இப்போது முகம்மதிய சிற்றூராய் மேடிட்டுவிட்டது. மேடுகளைத் தோண்டி ரெயிலுக்குச் சரளை எடுக்கத்தான் இப்பொழுது அவ்வூர் உபயோகமாயிருக்கிறது.

ஸ்ரீஹர்ஷன் தன்னாடு முழுவதும் அடிக்கடி சுற்றிப்பார்த்து அங்கங்கே கொலு வீற்றிருப்பான். கொட்டகை போட்டு அதில் தங்குவான். அவன் அதை விட்டுவிட்டுப்போனவுடனே கொட்டகையை யெரித்துவிடுவார்கள் ஸ்ரீஹர்ஷன் சந்நிதியில் பல புலவர்கள் வீற்றிருந்தார்கள். அவர்களுள் பேர் போனவன் பாணன். பாணன் தன்னுடைய காவியமொன்றில் அக்காலத்திலிருந்த அக்கிரகாரத்தைப் பின் வருமாறு வர்ணித்திருக்கிறான். கிராமத்தில் வேத கோஷம் நிறைந்திருக்கும். யாகங்களைப் பார்க்க பிரம்மசாரிகள் பலருண்டு. அவர்கள் தலைமயிர் நெருப்பைப்போல் சிவந்திருக்கும். முகத்தில் விபூதியை அணிந்து கொண்டு இங்கும் அங்கும் அலைவர். வீடுகள் முன் சோமச் செடிகளின் பாத்திகளில் தண்ணீர் தெளித்திருப்பதால் பார்ப்பதற்குப் பசேலென்று அழகாயிருக்கும். புரோடாசம் செய்ய அரிசையையும் சாமையையும் கிருஷ்ணாஜினத்தின்மேல் உலர்த்தியிருக்கும். பல சிஷ்யர்கள் சமித்துகளையும், தர்விகளையும் குசங்களையும் கொண்டுவந்து குவித்திருப்பார்கள். ஒரு பக்கத்தில் விராட்டியும் வரகும் குவிந்து கிடக்கும். வீட்டு முன் கொட்டகைகளில் மாடுகள் பாலொழுகிக் கொண்டு நிற்கும். யாக சாலைகளில் முளைகள் அடிக்க உதும்பரக்

கிளைகள் கிடக்கும். விச்வே தேவர்களுக்குக் கொடுத்த நிவேதனங்களால் தரை வெளுத்திருக்கும். வீட்டு முன் மரங்களெல்லாம் ஹோமப் புகை படிந்து மங்கியிருக்கும். இடையர்கள் கன்றுக்குட்டிகளுடன் விளையாட அவைகள் துள்ளியோடும். யாகத்துக்கு வேண்டிய ஆடுகள் நிறைந்திருக்கும்.

ஸ்ரீஹர்ஷன் அடிக்கடி பண்டிதர்கள் கூட்டங் கூட்டுவான். அக்கூட்டங்களில் சாஸ்திர விசாரணை மிகுதியாய் நடக்கும். அரசன் சிம்மாசனத்தில் வீற்றிருந்து இவைகளைக் கவனிப்பான். அந்தச் சிம்மாசனம் முத்தைப் போன்ற வெளுத்த கல்லால் செய்யப்பெற்று இரத்தினங்கள் பதிக்கப் பெற்றிருக்கும். அதைத் தாங்கும் கால்கள் தந்தத்தாலானவைகள். சபை முடிந்தவுடன் வந்திருந்த அறிஞர்களுக்குச் சன்மானம் செய்வான். அச் சபைகளில் அவன் தங்கை இராஜ்ஜியஸ்ரீ அரசன் பக்கத்தில் வீற்றிருப்பாள். இவான் சுவங் என்னும் சீனன், ஸ்ரீ ஹர்ஷதேவன் காலத்தில் இந்தியாவிற்கு யாத்திரை செய்து வந்தான். அவன் தருமத்திராதன் என்னும் பெயர் பூண்டான். பெரிய பண்டிதனானதால் இச் சபைகள் பலவற்றிலிருந்து சாஸ்திரார்த்தங்களை எடுத்துப் பேசினான். இவன் ஹர்ஷதேவன் கனௌஜில் நடத்தின உற்சவங்கள் சிலவற்றைப் பின் வருமாறு வர்ணித்திருக்கிறான் :—தினம் தினம் விக்கிரகங்களை வீதியில் எழுந்தருளச்செய்வார். ஹர்ஷன் இந்திர வேஷம் பூண்டு குடை பிடிப்பான். காமரூப (அசாம்) அரசன் குமாரன் பிரம்மன் வேஷம் பூண்டு சாமரம் போடுவான். அரசன் முத்து பொற்பூ முதலியவைகளை இறைப்பான். விக்கிரகத்துக்கு அபிஷேகம் செய்து பீடத்தின்மேல் வைத்து பூஜை செய்வான். பிரயாகையிலும் இம்மாதிரியான உற்சவங்கள்

நடந்துவந்தன. அங்கே புத்த விக்கிரகம், சூரிய விக்கிரகம், சிவ விக்கிரகம் ஆகிய இம்மூன்றுக்கும் பூஜை 75 நாட்கள் வரையிலும் நடந்தது. பின்பு இவான் சுவங் சீன தேசத்துக்குத் திரும்பிப்போனான். அப்போது ஹர்ஷதேவன் அவனுக்கு வெகுமதிகள் கொடுத்ததுமல்லாமல் குதிரை வீரர்களை அவனுக்குத் துணையாகவும் அனுப்பினான். கி. பி. 645ம் ஆண்டில் இவான் சுவங் பொன்னாலும், வெள்ளியாலும் சந்தனமரத்தாலும் ஆன புத்த விக்கிரகங்களையும், புத்த தாதுக்களையும், 657 புத்தகங்களையும் சீனத்துக்கு கொண்டுபோனான்.

ஸ்ரீஹர்ஷதேவன் 647ம் வருஷம் இறந்தான். அது முதல் நூறு வருஷங்கள் அளவு வட இந்தியாவில் வலியுற்ற அரசர்கள் இல்லாமல், நாடு மிகுந்த குழப்பத்திற்குள்ளாயிற்று.

---

## மக்கள் வாழ்நிலை.

ஸ்ரீஹர்ஷன் காலத்தில் மக்கள் இருந்த நிலையைப் பற்றி இவான் சுவங் வெகு விஸ்தாரமாய் எழுதியிருக்கிறான். பட்டினங்களின் நான்கு பக்கங்களிலும் அகன்று உயர்ந்த மதில்கள் உண்டு. ஆனால் தெருக்கள் நெருக்கமாயும் கோணலாயும் இருக்கும். வீதியின் இருபக்கங்களிலும் கடைகள் அதிகம். இறைச்சியையும் மீனையும் விற்போர் ஊருக்கு வெளியில் வசித்தனர். மதில்கள் செங்கல்லால் கட்டப்பட்டிருந்தன. வீட்டுச்சுவர்கள் மலாறுகள் மேல் மண் பூசியாவது, மரத்தால் செய்தாவது இருக்கும். வீட்டு முன் மண்டபம் மரத்தாலாவது, ஓட்டாலாவது மூடியிருக்கும். பின்பாகம் கூரை போட்டிருக்கும். வீடெல்லாம் சுண்ணம்பு பூசியிருக்கும். தரை

யைத் தினந்தோறும் சாணத்தால் மெழுகிக் கோலமிட்டு பூவால் அலங்கரிப்பார்கள். மரவேலைகளிலெல்லாம் சிற்பம் நிறைந்திருக்கும். இவைகள் சங்காராமங்களில் அதிகம். கதவுகளில் பல வர்ணம் பூசியிருக்கும். சங்காராமங்களுக்கு நான்கு மூலைகளிலும் கோபுரங்களுண்டு. மூன்று அடுக்குகள் அக்கோபுரங்களில் உண்டு. ஜனங்கள் கயிற்றுக் கட்டில்மேல் உட்கார்ந்திருப்பார்கள். தைக்காத ஆடைகளையே உடுத்திக்கொள்வார்கள்.

க்ஷத்திரியரும், பிராமணரும் சுத்தமாயும் படாடோபமில்லாமலும் இருப்பார்கள், செட்டும் சீருமாய் வாழ்ந்து வந்தனர். அரசரும், பிரபுக்களும், இரத்தினமாலைகளையும், கிரீடங்களையும் மோதிரங்களையும் தரித்தார்கள். செல்வம் மிகுந்த செட்டிமார்கள் கையில் வளையல் போட்டுக்கொள்வார்கள். எல்லோரும் வெறுங்காலுடன் நடப்பர். செருப்பு போடுவது அரிதாயிருக்கும். பல்லுக்குச் சிவப்பு கருப்பு வர்ணம் பூசிக்கொள்வர். காது குத்திக் கொள்வார்கள். பிறர் கட்டாயத்துக்கன்றித் தாங்களே சுத்தமாயிருப்பர். ஒவ்வொரு முறையும் சாப்பிடுமுன் குளிப்பர். ஒருவர் எச்சிலை மற்றொருவர் தின்னர். ஒருவர் பாத்திரத்தை மற்றொருவர் உபயோகிக்கமாட்டார்கள். எச்சில் பாத்திரம் மண்ணாலாவது, மரத்தாலாவதாயிருந்தால் அதை யெறிந்துவிடுவார். தங்கம், வெள்ளி, தாமிரம், இரும்பாலானதை அடிக்கடி சுத்தி செய்வார்கள். உடம்பிற்குச் சந்தனம், குங்குமப்பூ முதலியன பூசிக்கொள்வார்கள். அரசன் ஸ்நாநத்துக்குப் போகும்போது மேளம் கொட்டி, வீணை முதலிய வாத்தியங்களை வாசித்துப் பாடுவர். பின்பு பூஜை நடக்கும். சிலர் சாஸ்திரங்களை மிகவும் படித்திருந்தார். சிலர் சன்னியாசிகளாய்த் தனியாக வசித்து வந்தார்கள்.

அவர் மானுபிமானம் விட்டவர். ஜனங்கள் அவரை மிக மதிப்பாய் நடத்தினூர்கள். அரசர் அவர்களை எவ்வளவு கவுரவமாய் நடத்தினபோதிலும் அரசர் சந்நிதிக்கு அவர்கள் வரமாட்டார்கள். அவர் குடும்பத்தார் எவ்வளவு பாக்கியவந்தராயிருந்தாலும் அவர் பிக்ஷை எடுத்துத்தான் உண்பார்கள். தருமம் வழுவாமல் நடந்து கொள்வார். உடல் வருத்தத்தைக் கவனியாமல் எப்பொழுதும் கல்வி பெற முயலுவர். அதற்காக 60 யோஜனை தூரம் இலட்சிய மில்லாமல் நடப்பார்கள். உடையை அழகாய் உடுத்திக் கொண்டு, வேறுவேலையில்லாமல் சோம்பேறிகளாய் இருப் பவர்களை ஜனங்கள் வெறுப்பார்கள். ஒவ்வொரு ஜாதி யரும் தம் ஜாதிப்பெண்களையே மணம் புரிவார். விதவை கள் புனர்விவாகம் புரிவதில்லை.

எவனுக்கு நோய்வந்தாலும் ஏழுநாள் வரையிலும் அவனைப் பட்டினியாய்க் கிடக்கும்படிச் செய்வர். அதற் குள் சௌக்கியமாகாவிட்டால் மருந்து கொடுப்பார்கள். மருந்துகள் பலவுண்டு. ஒவ்வொரு மருந்துக்கும் ஒரு தனிப்பெயர் வைத்திருக்கிறூர்கள். மனிதர் இறந்த போது மாரடித்துக்கொண்டு அழுவார்கள். சாவைக் குறிக்கத் தனியான ஆடைகிடையாது. இறந்தவர்களைத் தகனம் செய்வார்கள். அவ்வாறு செய்யாமல் பிணங்களை ஆற்றில் போடுவதும், காட்டுமிருகங்கள் தின்னுமாறு போட்டுவிடுவதும் உண்டு. கிழவர் சிலர்க்குத் தீராநோய் வந்தால், வைராக்கியம் பிறந்து, உறவினரிடம் செலவு பெற்று, கொட்டு மேளத்துடன்போய், கங்கையில் விழு வார். க்ஷத்திரியர் திராட்சரசம், கரும்பு ரசத்தாலான சாராயம் முதலியவற்றையும்; வைசியர் கடுமையான சாரா யத்தையும் குடிப்பார்கள். பிராமணரும் பௌத்தரும் பழத்தாலான பாகுகளைத் (ஷர்பத்துகள்) தான் குடிப்பார்

கள். மாடு, பன்றி. நாய், குதிரை, யானை இவற்றின் இறைச்சியைத் தின்போர் பறையர். ஜனங்களெல்லாம் தருமசாலிகள். மோசம் கிடையாது.

ஆட்சிமுறை.—அரசாட்சி நியாயமாய் நடந்தது. சண்டைசச்சரவு கிடையாது. குற்றங்களை அதிகமாய்ச் செய்யமாட்டார்கள். அரசனுக்கு விரோதமாய்ச் சதியாலோசனை செய்பவர்களை ஆயுட்காலம்முழுதும் சிறைசெய்வார்கள். இல்லாவிட்டால் நாட்டைவிட்டு வெளியேற்றி விடுவார்கள். இதுவுமல்லாமல் இராஜதுரோகம் முதலிய குற்றங்களுக்கு, மூக்கு, காது, கை, கால் முதலிய உறுப்புகளை அறுப்பதும், காட்டுக்கு அனுப்புவதும் முதலாகிய தண்டனைகளை விதிப்பார்கள். இதுவல்லாத மற்றைய குற்றங்களுக்கு அபராதம் போடுவர். ஒருவன் குற்றவாளியல்ல என்பதைக்காண்பிக்க நீரில் விழச்செய்தல், நிறுத்துப்பார்த்தல், விஷம் ஊட்டுதல் முதலிய பரீட்சைகள் உண்டு. அரசருக்கும், உத்தியோகஸ்தர்களுக்கும் கட்டணங்கள் அதிகமில்லை. ஜனங்கள், தங்கள் பெயர், வேலை முதலியவற்றை யெழுதிவைக்க வேண்டியதில்லை. வெட்டி வேலை அரசாங்கத்திற்காகச் செய்ய வேண்டியதில்லை. அரசன் சொந்தநிலவரும்படியிலிருந்து கால்பங்கு இராஜ்ய செலவிற்கும், கால்பங்கு உத்தியோகஸ்தர் சம்பளத்திற்கும், கால்பங்கு பண்டிதர்சம்பளத்துக்கும், கால்பங்கு பற்பலசமயங்களை ஆதரிப்பதற்கும் செலவழிப்பார். ஜனங்கள் நிலங்களிலிருந்துவரும் வரும்படியில் ஆறில் ஒருபங்கு வரியாகக்கொடுக்கவேண்டும். வியாபாரிகள் கொடுக்கவேண்டிய வரியும் சுங்கமும் கொஞ்சமே. மந்திரிகள் முதலிய பெரிய உத்தியோகஸ்தர்களுக்கு மானியங்கொடுப்பார். ஐந்து வருஷத்துக்கு ஒருமுறை அரசர் பொக்கிஷத்தில் மிஞ்சினதெல்லாவற்றையும்

பிராமண, பௌத்த, ஜைனமடங்களுக்கும், ஏழைகளுக்கும் தானம் செய்வார்கள். ஒருதடவை, அரசன் நிலுவைப் பணம், பாத்திரங்கள், இரத்தினங்கள், நகைகள், உடுப்புகள், கிரீடங்கள் எல்லாவற்றையும் தானம்செய்தான். பட்டணங்களிலும், பட்டணங்களுக்குச்செல்லும் பாதைகளிலும், பலசத்திரங்கள்கட்டி, அதில் பாதசாரிகள் தங்கவும், உண்ணவும் ஏற்பாடு செய்திருந்தான். பற்பல ஊர்களிலும் ஆரம்பப்படிப்பும், உயர்தரப்படிப்பும் நிறைவேற ஏற்பாடுகள் இருந்தன. சிலகலாசாலைகளில் ஆயிரக்கணக்காய் மாணவர்கள் படித்துவந்தார்கள்.

---

## 2. நடு இந்தியா.

சளுக்கர்.—பம்பாய் இராஜதானியில் பிஜாப்பூர் ஜில்லாவில் இப்பொழுது பாழாய்ப்போன ஊர் பாதாமியென்றது ஒன்று உண்டு. முற்காலத்தில் அதை வாதாபியென்றுங்கூறினர். கி. பி. 400-ல் அயோத்தியவாசியாகிய விஜயாலயன் என்னும் க்ஷத்திரியன் நடு இந்தியாவில் சிற்றரசனானன். இவன் காஞ்சீபுரப்பல்லவரை யுத்தத்தில் தோற்கடித்தான். இவன் மரபில் பிறந்த புளகேசியென்பவன் பாதாமியைத்தலைநகராக்கி அங்கு அசுவமேத யாகமும் செய்தான். அவன் மகன் கீர்த்திவர்மன் சுற்றுள்ள நளர், மௌரியர், கதம்பர் முதலிய சிற்றரசரை ஜயித்து, பேரரசனானன். அவன்பின் அவன் தம்பி மங்களேசன் சிம்மாசன மேறினன். அவன் பாதாமிக்கருகில் மலையைக்குடைந்து விஷ்ணுகோவில் ஒன்று ஏற்படுத்தினன். அவனுக்குப்பின் கீர்த்திவர்மன்மகன் இரண்டாம் புளகேசி சத்தியாசிரயன் ஆண்டான். இவன் பெரும் வீரன் இவன்தான் ஸ்ரீஹர்ஷனைத்தோற்கடித்து, அவன்யானைகளைப்

போரில் கொன்று அவனை நருமதையைத்தாண்டமுடியாமல் செய்தான். புளகேசிநாட்டிற்கு மகாராஷ்டிரம் என்று பெயர். தொண்ணூறாயிரத்தொன்பது கிராமங்கள்கொண்டது. இவனுடையவீரர் வெகுபராக்கிரமசாலிகள். சேனாபதி யுத்தத்தில் தோற்றால், வேறுதண்டனை விதிக்காமல், அவனுக்குப்புடவையுடுத்தி வீதியில் விரட்டுவர். அவன் வெட்கப்பட்டுத் தற்கொலை செய்துகொள்வான். போரில் வீரர்களுக்கும் யானைகளுக்கும் வயிறுநிரம்ப சாராயத்தைக் கொடுப்பார். அதனால் அவர்கள் வெறிகொண்டவர்கள் போல் போர்புரிவர். அதனால் அரசன் பிறரிடத்தில் பயமற்றுவாழ்வான். கி. பி. 612ம் வருஷத்தில் புளகேசி திக்விஜயம் செய்யப்புறப்பட்டான். முதலில் தென் கோசலத்தையும் பின்பு பிஷ்டபுரத்தையும் (பிட்டாபுரம்) பிடித்தான். பின்பு, பல்லவர்களுக்கு உரிய தெலுங்கு மாகாணங்களுக்குத் தலைநகரான வேலூருக்கு அருகில் உள்ள வேங்கியைப்பிடித்து காஞ்சீபுரம் நோக்கிச்சென்றான். காஞ்சீபுரமன்னன் மஹேந்திரவர்மன் என்னும் பல்லவ அரசன், புளகேசியை யெதிர்க்கமுடியாமல் காஞ்சீபுரக்கோட்டைக்குள் ஒளிந்தான். பின்பு மஹேந்திரன் புளகேசியைப் புல்லலூரில்தோற்கடிக்க, புளகேசி தன்னாட்டுக்குத்திரும்பினான். புளகேசி தன்தம்பி குப்ஜவிஷ்ணுவர்த்தனனை வேங்கிநாட்டரசனாக்கினான். குப்ஜவிஷ்ணுவர்த்தனன் பின்னோருக்கு வேங்கியில் ஆண்ட கீழ்ச்சளுக்கரென்று இப்போது சரித்திர ஆராய்ச்சிசெய்பவர் பெயரிட்டிருக்கிறார்கள். பின்பு மஹேந்திரவர்மன் மகன் நரசிம்மன் பாதாமிமேல் படையெடுத்து அவ்வூரை அழித்தான். புளகேசியும் இறந்தான். 12 வருஷகாலமளவு சளுக்கர் பலம்குன்றிற்று. பின்பு 654 இல் புளகேசிமகன் விக்கிரமாதித்தியன் திரும்பவும் பாதாமியில் சளுக்கஅரசாட்சியை நிலைநிறுத்தினான். காஞ்சீபுர

அரசன் பரமேசுவரனைத்தனக்கு ஆளாக ஆக்கிக்கொண்டு, 675இல் சோழநாட்டைத்தன்வசப்படுத்திக்கொண்டு பாண்டியநாட்டினுள் நுழைந்தான். ஆனால் மாறன் சடையன் என்றபாண்டியன் மருதூரில் அவனைத் தோற்கடித்தான். உடனே பரமேசுவரபல்லவனும் பெருவளநல்லூரில் விக்கிரமாதித்தியன்பேரில் வெற்றிகொண்டான். விக்கிரமாதித்தன் பாதாமிபோய்ச்சேர்ந்தான். அவன் ஆட்சி 683ம் ஆண்டுவரையில் நிகழ்ந்தது. அவனுக்குப்பின் சளுக்கர் பலம் குன்றியது. சளுக்கர் நாட்டில் வைஷ்ணவ சமயமும் ஜைனசமயமும் விளங்கின. பலகோயில்களைச் சளுக்க அரசர் கட்டினார்கள்.

---

## 3. தென்னிந்தியா.

---

**பல்லவர்.**— தென்னாட்டில் சோழர்நிலை தளர்ந்தது. 6ம் நூற்றாண்டில் பல்லவர் காஞ்சீபுரத்தைத் திரும்பியுங் கைப்பற்றினர். பல்லவரில் மிகப்பெரியவன் மஹேந்திரன் (600-625). இவன் சோழநாட்டைத் தன்வசமாக்கினான். அன்றியும் பெஜவாடாமுதல் நாமக்கல்வரையில் பற்பல இடங்களில் குகைக்கோயில்கள் மலைகளில் குடைந்தெடுத்தான். இவன் காலத்திற்குமுன் தமிழ்நாட்டில் மரத்தால் கட்டிய கோவில்களும் செங்கல்லால்கட்டிய கோவில்களுமே இருந்தன: இவன்தான் முதல் முதல் கற்கோவில்கள் குடைந்தெடுத்தவன். இவன் நிருமித்த கோவில்களில் திருச்சிராப்பள்ளி மலைமேலுள்ள சிவன் கோவிலும், சிற்றன்னவாயிலிலுள்ள ஜைனக்கோவிலும், நாமக்கல்லில் உள்ள விஷ்ணு கோவிலும் சிறப்புடையவைகளாம். இவன் குடைந்தெடுத்த குகைக்கோவில்கள் சிலவற்றில் அழகான வர்ணபடங்களை வரைந்து வைத்தான். வேறுசிலவற்றில்

கல் விக்கிரகங்களும் செய்துவைத்தான். அன்றியும் ஆரிய முறையைத் தழுவிய ஆசாரங்களையும், சங்கீதத்தையும் தென்னாட்டில் பரவச்செய்தான்.

மகேந்திரன்மகன் நரசிம்மன் (625–650) தன்சேனாதிபதியாகிய பரஞ்சோதியோடு பாதாமியின்மேல்படையெடுத்துச்சென்று, அதைக் கைக்கொண்டு, அவ்வூரையழித்தான். அன்றியும் மானவம்மன் என்னும் இலங்கை அரசகுமாரனுக்கு ஆள்படை, கப்பல் படை அளித்து அந்தத்தீவின் சிம்மாசனத்தைக் கைப்பற்ற உதவிசெய்தான். இவன் காலத்தில் பெரிய துறைமுகப்பட்டினம் மகாபலிபுரம்தான். அவ்வூரில் பெருங்கற்களைக் கோவிலுருவமாகச் செதுக்குவித்தான். அவைகளை இப்பொழுது பஞ்சபாண்டவர்கள் இரதங்களென்று தவறாய்க் கூறுவார்கள். இவன் பேரன் பரமேச்வரனென்பான் (650-690) விக்கிரமாதித்திய சளுக்க அரசனுக்கு முதலில் அடங்கியிருந்தான். பின்பு அவ்விக்கிரமாதித்தியனோடு போர் புரிந்து அவனைப் பெருவளநல்லூரில் தோற்கடித்தான். இவன் மகன் இராஜசிம்மன். இவன் முதல்முதல் தமிழ்நாட்டில் கற்பாறைகளால் கோவில்கள் கட்டினான். இவைகளைக் காஞ்சிபுரத்தில் இப்போதும் பார்க்கலாம். இப்பல்லவர்கள் காலத்தில்தான் சிவனடியார்களில் சிலரும் ஆழ்வார்களில் சிலரும் வாழ்ந்துவந்தனர். இவர்கள் தேவாரம் திருவாய்மொழி பாடினார்கள். இவர்கள் முயற்சியால் ஜைனமும் பௌத்தமும் நாசமுற்றது. சைவமும் வைஷ்ணவமும் தென்னாட்டில் எங்கும் ஓங்கிற்று.

**பாண்டியர்.**—கி. பி. 600ல் மதுரையில் பாண்டியர் பலம் உயர்ந்தது. இப்பாண்டிய மன்னருக்கு முறையே மாறனென்றும், சடையனென்றும் பெயர்கள் வழங்கி வந்தன. இப்பாண்டியர் தமிழ்ப்புலவர்களை மிகவும் ஆத

ரித்தனர். இந்தப்பாண்டியரில் ஒருவன் விக்கிரமாதித்திய சளுக்கனை மருதூரில் ஜயித்தானென்று முன்னமேசொன்னோம்.

இந்தக்காலத்தில் தலைக்காட்டு கங்கையரும் உயர்நிலை பெற்றார். கதம்பர், பாணர், பெருமாள்என்று பட்டந்தரித்த சேரரும் வாழ்ந்தார்கள். ஆனால் அவர்களெல்லாம் சிறு மன்னராய்த்தான் வாழ்ந்துவந்தார்கள்.

---

# IX. எட்டு ஒன்பதாம் நூற்றாண்டுகள்.

## 1. வட இந்தியா.

**இராஜபுத்திரர்.**—பண்டையகாலத்தில் க்ஷத்திரிய மன்னர் இருந்ததுபோல் இராஜபுத்திரர் இப்போது பற்பல இடங்களில் ஆளத்தொடங்கினர். இவர்கள் வீரத்தனத்துக்கும் மரியாதையான நடத்தைக்கும், வித்வான்களை யாதரிப்பதற்கும், வேதபக்திக்கும் பேர்போனவர். தருமயுத்தமே செய்பவர். இவரில் சிலர் அபூமலைக்கு அருகில் யாககுண்டத்திலிருந்து பிறந்தாரென்று ஒரு கதை உண்டானதால் அக்கினிகுலர் என்று பெயர்பெற்றார். மற்றையவர் பழைய க்ஷத்திரியகுலத்தவர் என்றுசொல்லிக் கொள்வர்.

**பாஞ்சாலநாடு.**—இராஜபுத்திரர் ஆண்ட நாடுகளில் பாஞ்சாலநாடு சிறந்தது. இந்நாட்டில் ஆண்டவர்களில் சிறப்புடையவன் மிஹிரபோஜன் (840—890). இவன் செல்வாக்கு வட இந்தியா முழுவதும் பரவியது. இவன் வராஹாவதாரத்தில் மிக்க பக்தியுள்ளவன். ஆதிவராஹன் என்றபட்டம் தரித்தான். இவனைப்பற்றி சுலைமான் என்ற அரபி வியாபாரி பின் வருமாறு எழுதியிருக்கிறான். இந்த அரசன் சேனை மிகப் பெரியது. அவனுடைய குதிரைப்படைக்குச் சமானம் வேறு எவர் படையையும் சொல்வதற்கில்லை. இவன் முகம்மதியரிடத்தில் அதிக பகைமை பாராட்டி வந்தான். இவனிடம் பல ஒட்டகைகள் உண்டு. இவன் நாடு போல் திருடர்

இல்லாத நாடு வேறெதுவுங்கிடையாது. ஜைது என்ற மற்றொரு முகம்மதியன் பின்வருமாறு எழுதியிருக்கிறுன். இவ்வரசன் சந்நிதியில் கவிகளும், சோதிடரும், பண்டிதரும், சகுனம் சொல்வோரும் பலருண்டு. மந்திர தந்திர வித்தை தெரிந்தவர் அற்புதமான வேலைகள் செய்வார். இவ்வரசர் அரண்மனையில் ஸ்திரீகள் பார்ப்பதற்கில்லாது (கோஷாவாய்) இருக்கமாட்டார்கள். மனைவிகள் புருஷருடன் உடன்கட்டையேறுவர். ஆனால் உடன்கட்டையேற ஒருவரையும் கட்டாயப்படுத்த மாட்டார்கள். காட்டிலும் மலைகளிலும் தவம்புரிவோர் பலருண்டு. அவர்களில் சிலர் திகம்பரர். சிலர் சிறுத்தைப் புலி தோலைப் போர்த்துக்கொண்டு சூரியனுக்கு நேராக நிற்பர். இவ்வாறு நின்ற ஒருவனை நான் பார்த்தேன். 16-வருஷம் கழித்து இந்தத்தேசத்திற்கு நான் திரும்பின போது அவன் அதேமாதிரி நின்றுகொண்டிருந்ததைக்கண்டேன். சூரியன் சூட்டினுல் எவ்வாறு உருகிப்போகாமல் இருந்தானென்று எனக்குத்தெரியவில்லை.

மிஹிரபோஜனுக்கப்புறம் கனௌஜின் மகிமை குறைந்தது.

பங்காளம்.—அக்காலத்தில் உயர்நிலை பெற்றிருந்த மற்றொரு நாடு பங்காளம் என்கிற கௌட தேசம். இதன் முதல் அரசன் ஆதிசூரன். கி. பி. 700-இல் ஆண்டான். வெகு காலமாய்ப் பௌத்தம் நிறைந்து வைதீகமுறை மங்கியிருந்ததால் இவன் கான்யகுப்ஜத்திலிருந்து சிறந்த குலத்தவரான 5 பிராமணர்களையும் 5 காயஸ்த குலத்தவர்களையும் அழைத்து வந்து அவர்களுக்கு மானியங்கள் கொடுத்தான். இவன் நாடு கங்கையின் இருபுறத்திலும் ராடா, வரேந்திரம் என்று இரு பாகமாயிருந்தது. எட்டாம் நூற்றுண்டில் பால வமிசத்

தார் கௌட அரசரானார். இவருள் தருமபாலன் பேர் போனவன். இந்நாட்டைப்பற்றிச் சுலேமான் பின்வருமாறு சொல்லியிருக்கிறான். இந்த அரசன் போருக்குப் புறப்படும்போது 50,000 யானைகளோடு புறப்படுவான். யானை தாகத்தைத் தாங்காதாகையால் குளிர்காலத்தில் தான் யுத்தத்திற்குப் புறப்படுவான். அவன் சைன்னியத்தில் பத்து அல்லது பதினைந்தாயிரம் வண்ணான்கள் துணிகளை வெளுக்க இருப்பார்கள். இந்த நாட்டில் வெகு மெல்லிதான பருத்தியாடைகளை நெய்வார்கள். இவ்வாடைகளில் தைத்த உடைகளை மோதிரத்துக்குள் கோத்துவாங்கலாம். தங்கப்பணம், வெள்ளிப்பணம், சோழி இம்மூன்றுவித நாணயம் உண்டு. மற்றொரு முகம்மதியன் இவ்வரசனுக்குப் பல கப்பல்கள் உண்டு என்று எழுதியிருக்கிறான். சித்திரவேலைக்குப் பங்காளம் பேர் போனது.

**புறநாட்டுக்கு இந்தியக்கலைகள் போனவிவரம்.**—பாக்தாதில் கலீபா ஹாரூன் அல்ரஷீத் என்ற அரசன் இந்நாளில் மிகுந்த சிறப்புடன் ஆட்சி செய்து வந்தான். அவன் பிராமணர்களை அழைப்பித்து சம்ஸ்கிருத புஸ்தகங்கள் பலவற்றை அரபி மொழியிலும் பாரசிகமொழியிலும் மொழிபெயர்க்கும்படிச் செய்வித்தான். இவ்வாறு மொழிபெயர்த்த முதல் புஸ்தகம் பஞ்ச தந்திரம். இதை அரபியிலிருந்து ஐரோப்பிய பாஷைகள் எல்லாவற்றிலும் மொழி பெயர்த்தார்கள். சதுரங்கம் ஆடும் விதத்தையும் இந்தியாவிலிருந்துதான் புறநாட்டார் கற்றுக்கொண்டார்கள். பின்பு சோதிட நூல்கள், கணித நூல்கள், வைத்திய நூல்கள், ரசாயன நூல்கள் முதலியன மொழிபெயர்க்கப்பெற்றன. இவைகளையெல்லாம் அரபியர் ஸ்பெயின் நாட்டிற்குக் கொண்டுபோனார்கள்.

அங்கிருந்து ஐரோப்பியர்கள் கற்றுக் கொண்டார்கள். சங்கீதத்தில் ச-ரி-க-ம-ப-த-னி என்று ஸ்வரங்களுக்குப் பெயர் வைக்கு முறையும் இந்தியாவிலிருந்து தான் ஐரோப்பாவிற்குப் போயிற்று.

## 2. நடு இந்தியா.

இராஷ்டிரகூடர்.—இந்த இரண்டு நூற்றாண்டுகளில் நடு இந்தியாவில் அதிக உயர்நிலையிலிருந்தவர்கள் இராஷ்டிரகூட மன்னர்கள்தான். கி. பி. 754இல் தந்திதுர்கன் என்பவன் பாதாமியில் ஆண்ட சளுக்கரை ஜயித்து அவர் குடும்பத்தைத் தாழ்ந்த நிலைக்குக் கொண்டு வந்தான். அவன் மகன் பெயர் கிருஷ்ணன். இவன் உலகில் உள்ள அற்புத அழகுள்ள கோவில்களுள் ஒன்றாகிய குகைக்கோயில் ஒன்றை வெட்டுவித்தான். அது ஹைதராபாத் சீமையிலுள்ள ஏலாபுரம் (எல்லோரா) என்கிற ஊரில் இருக்கிறது. இதன் வேலை நரசிம்ம பல்லவன் மகாபலிபுரத்தில் செய்வித்த பஞ்ச பாண்டவர்கள் இரதங்களைப் போன்றிருக்கும். மலையை அழகிய கோவிலாகக் குடைந்தெடுக்கப் பெற்றிருக்கிறது. அது ஐந்து அடுக்குகளோடு கூடிய விமானத்தையுடையது. 96 அடி உயரமுள்ளது. அவ்விமானத்திற்கு முன் சதுரமான மண்டபம் உண்டு. அந்த மண்டபத்தில் நந்தி படுத்திருப்பது போல் செய்திருக்கும். இதற்கு முன் சித்திரவேலை நிறைந்த கோபுரவாயிலொன்றுண்டு. அங்கு அமைக்கப் பெற்றுள்ள விக்கிரகங்களெல்லாம் உயிருடன் இருப்பது போல் தோன்றும். இவைகளின் வேலைத்திறத்தை சொல்லிமுடியாது. இந்த இராஷ்டிரகூட மன்னருக்கும் கனௌஜ் மன்னருக்கும் எப்போதும் போர் நடந்து கொண்டிருந்தது. இராஷ்டிரகூட மன்னரில் மிகக் கியாதி பெற்றவன் அமோகவர்ஷனென்பான்.

அவன் 815 முதல் 877 வரையில் ஆண்டான். மானிய கேதம் என்ற ஊர் அவனுக்குத் தலைநகரம். அதற்கு இப்போது மால்கேத் என்றுபெயர். ஹைதராபாத் இராஜ்ஜியத்தில் இருக்கிறது. அமோகவர்ஷனை இந்தியாவிற் கெல்லாம் சக்கரவர்த்தியாய்க் கொண்டாடினார்கள். அவன் ஜைனரில் திகம்பரரை அதிகமாய் ஆதரித்தான். அதனால் தான் இப்போது தென்னிந்தியாவிலிருக்கும் ஜைனரெல்லாரும் திகம்பர சமயத்தைச் சேர்ந்தவர்களாயிருக்கிறார்கள். இவன் காலத்தில் பல ஜைனப்புலவர்கள் பெரும் சம்ஸ்கிருதப் புஸ்தகங்களை யெழுதினார்கள். கன்னடத்திலும் கிரந்தங்கள் பல இயற்றினார்கள்.

இராஷ்டிரகூடமன்னர் எல்லாருக்கும் வல்லபர் என்ற பட்டம் உண்டு. இவர் அரேபியர்மேல் அன்பு அதிகம் பாராட்டினார்கள். சுலைமான் இவரைப்பற்றிப் பின்வருமாறு எழுதியிருக்கிறான். உலகத்தில் நான்கு பெரிய அரசர் உண்டு. எல்லோரிலும் பெரியவன் பாக்தாத்கலிபா. அவனுக்கு அடுத்தவன் சீனதேசத்தரசன். அவனுக்கு அடுத்தவன் ரூம் நகரில்உள்ள கிரேக் அரசன். நான்காவதாயிருந்தவன் பல்ஹரன், அதாவது வல்லபன். இவன் காது குத்திக்கொள்வோர் அரசன். பல்ஹரனை இந்தியாவுக்குச் சக்கரவர்த்தியாய் இந்திய அரசர் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். இந்திய அரசர் அவரவர் நாட்டில் ஆள்வர். எல்லோரும் பல்ஹரனைத் தங்கள் மேலரசராய் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அவன் சேனைவீரர்க்கு மாதா மாதம் சம்பளங் கொடுப்பான். அவனுக்குப் பலகுதிரைகளும், யானைகளும், அளவற்ற செல்வமும் உண்டு. அபுஜைத் என்பவன் பின்வருமாறு எழுதியிருக்கிறான். பல்ஹரன் இராஜ்ஜியத்திலும் மற்றைய இந்திய இராஜ்ஜியங்

களிலும், மனிதர் உயிருடனிருக்கும்போதே தகனம் செய்து கொள்வார்கள். இதற்குக்காரணம் மறுஜன்மம் உண்டென்று அவருக்குள்ள நம்பிக்கையின் பலம்தான் என்று எழுதியிருக்கிறுன். இது ஒருவித சல்லேகனம் என்கிற ஜைனர் ஆசாரம்போலும். குர்தத்பா என்பவன் வல்லப அரசன் மோதிரத்தில் 'மன உறுதியோடு ஆரம்பித்த காரியம் கைகூடிவரும்' என்று ஒருபழமொழியை வெட்டியிருக்கும் என்று எழுதியிருக்கிறுன்.

## 3. தென்னிந்தியா.

**மன்னர்.**—இந்த எட்டு, ஒன்பது நூற்றுண்டுகளில் தென்னிந்தியாவில் மன்னர்கள் பலர் ஆண்டார்கள். ஆனல் எவ்விஷயத்திலாவது பெரிய பெயர் பெற்றவர் இல்லை. காஞ்சீபுரத்தில் நந்திவர்ம பல்லவமல்லன் (717—779) என்னும் பல்லவமன்னன் ஆண்டான். இவன் பல விஷ்ணு ஆலயங்களைக்கட்டினுன். இவன் காலத்தில் திருமங்கை மன்னன் என்னும் வைஷ்ணவ ஆழ்வார் பல பாசுரங்களைப் பாடினுர். பல்லவமன்னனுக்குப் பிற்காலம் தெள்ளாற்றெரிந்த நந்தி என்பான் ஆண்டான். இவன் தமிழ்ப்புலவர் பலரை ஆதரித்தான். கி. பி. 850 இல் தஞ்சாவூரில் சோழகுலமன்னர் தோன்றினர். அவர்கள் பலம் அதிகரிக்க அதிகரிக்க 900 இல் பல்லவர் அரசாட்சி ஒழிந்து காஞ்சிபுரம் சோழர் ஆட்சியின்கீழ் சென்றது. பல்லவரும், தமிழரோடு தமிழராயும், தெலுங்கரோடு தெலுங்கராயும் ஆய்விட்டார்கள். பாண்டியர்கள் குகைக் கோயில்களையும், பின்பு சிறிதாய்ச் சிவன் கோவில்களையும் விஷ்ணு கோவில்களையும் கட்டினுர்கள். இம்மன்னரில் பேர்போனவன் வரகுண பாண்டியன். இப்பாண்டியரையும் கி. பி. 900 இல் தஞ்சாவூர்ச் சோழர் ஜெயித்தார். இப்பாண்டியர் காலத்தில் தமிழ்க் காவியங்கள் பல பிறந்தன. மைசூரில்

தலைக்காடு கங்கையரும், மேற்குக் கரையில் சேரரும், முன்போலவே ஆண்டார்கள். இவரெல்லாரும் முறையே சோழர் கீழ்ச் சிறு மன்னரானார். இவர்களும் ஆங்காங்கே சிறு சிறு கோயில்கள் கட்டினார்கள்.

கீழ்க்கரையில் கிழக்குச் சளுக்க அரசர் ஏழாம் நூற்றாண்டு முதல் ஆண்டு வந்தார். இவர்கள் அடிக்கடி கலிங்க கங்கையருடனும், காஞ்சிபுரப் பல்லவருடனும் மானிய தேச இராஷ்டிர கூடருடனும், போர்புரிந்து கொண்டிருந்தார். விஜயாதித்திய அரசன் (800—843) 12 வருஷங்களில் 108 யுத்தங்கள் புரிந்தான். 108 சிவன் கோயில்கள் கட்டினான். அம்மா என்ற அரசன் (918—925 இவனுக்கு மஹேந்திரனென்றும் பெயர்) வேங்கியை விட்டு விட்டு இராஜமஹேந்திரத்தைத் தலைநகராக்கினான். இது முதல் தெலுங்கு பாஷை உயர்நடையடைந்தது. அதில் காவியங்கள் எழுத ஆரம்பித்தார்கள். சளுக்கர்களும் தெலுங்கரோடு தெலுங்கரானார்கள்.

**சங்கராசாரிய சுவாமிகள்**:—எட்டாம் நூற்றாண்டில் சேரநாட்டில் காலடி என்னும் சிற்றூரில் இவர் அவதரித்தார். இளம் வயதிலே சந்நியாசியாய் அத்வைத வேதாந்தத்தைப் போதிக்க ஆரம்பித்தார். பல கிரந்தங்கள் எழுதி இந்தியா நாடெல்லாம் பிரயாணம் செய்து பிரசங்கங்கள் நடத்தினார். இவர் எழுதின பாஷியங்களும் ஸ்தோத்திரங்களும் இப்போது பலர் படித்துக் களிக்கிறார்கள். அங்கங்கே மடங்களை ஏற்படுத்தினார். பின்பு கேதாரநாத க்ஷேத்திரம்போய் அங்கிருந்து இமய மலைப் பிரதேசத்துக்குட் புகுந்து மறைந்தார் என்று ஒரு இதிஹாசம் உண்டு. இவர் நிர்யாணமானது 33 வயதில் என்பர். இது கி. பி. 804 இல் நிகழ்ந்ததுபோலும்.

———

# X. தென்னாடு சிறந்தோங்கிய காலம்.

## (கி. பி. 900—1250)

### 1. வட இந்தியா.

**அரசர் நிலை.**—மிஹிர போஜனுக்குப் பின் வட இந்தியாவில் நிலை கெட்டுப்போயிற்று. பேரரசனொருவனும் தோன்றவில்லை. ஊருக்கு ஒரு மன்னர், ஒருவனைவிட ஒருவன் உயர்ந்தவனென்று எல்லோரும் நாட்டாமைக்கு ஆசைப்பட்டிருந்தார். ஒற்றுமை இல்லாமல் ஒருவர் மேல் மற்றவருக்குப் பொறாமை அதிகரித்தது. கோயில்கள் கட்டுதல், பண்டிதரை ஆதரித்தல் என்ற நற்காரியம் நடத்தினார்களேயன்றி, தேசப் பொது நன்மையைக் கோரினவரில்லை. பத்தாம் நூற்றாண்டெல்லாம் இவ்வாறே நிகழ்ந்தது. அக்காலத்தில் வாழ்ந்தவர்கள் சிறு மன்னர்களேயாதலால் அவர்கள் பெயரைக் குறிப்பதில் உபயோகமில்லை.

**கஜ்னி மஹ்முது நாட்டை அழித்தது:**—அப்போது காந்தார நாட்டில் கஜ்னியில் மஹ்மூது என்னும் துருக்கன் அரசன் ஆனான். அவன் பெரும் வீரன்; படிப்பு அபிவிருத்தி செய்வதில் அபிமானம் உள்ளவன். இந்திய அரசரை ஜயித்து அதன் அளவற்ற செல்வத்தைக்கொண்டுபோய்க் கஜ்னியை மகா நகரமாய்ச் செய்ய இச்சை கொண்டு பலமுறை படையெடுத்து வந்தான். கி. பி. 1001 இல் இந்திய வடமேற்கு எல்லையில் ஆண்ட ஜயபாலனை எதிர்த்து தோற்கடித்து அவனை மஹ்மூது

சிறை செய்து பின்பு விடுதலை செய்தான். ஆனால் ஜயபாலன் அவமானம் பொறுக்கமாட்டாமல் அக்கினிப் பிரவேசம் செய்தான். 1009-ம் ஆண்டில் மஹ்மூது படையெடுத்து வந்தபோது வட இந்திய மன்னர் பலர் ஒன்று சேர்ந்து எதிர்த்தார். அவர் வீரர் வெள்ளைக்கத்திகளும், நீல ஈட்டிகளும், மஞ்சள் கவசங்களும், சாம்பல் நிற யானைகளுடன் யுத்தம் செய்தார். ஜனங்களுக்கெல்லாம் உற்சாகம் உயர்ந்தோங்கியது. ஸ்திரீகள் தங்கள் இரத்தின நகைகளை விற்றும், தங்க நகைகளை உருக்கியும் விற்று வந்த பணத்தை யுத்தத்துக்கு உதவக்கொடுத்தார். இந்தியச் சூரர் கொடிய போர் செய்ய மஹ்மூது சேனை அடிபட்டு ஓடும் தருணத்தில், அவன் யானைகள் மேல் நெருப்புப் பந்துகள் விட்டெறிந்தான். இதைக்கண்டு யானைகள் பயந்து திரும்பி ஓட, இந்திய சேனையில் குழப்பமுண்டாயிற்று; அந்தச் சமயத்தில் சூதெல்லாம் கற்ற துருக்க சேனாபதி, ஹமீரன், மஹ்மூது தண்டு குதிரை வீரருடன் தாக்கவே இந்தியர் அபஜயமடைந்தார்.

மஹ்மூது பின்பு நாகர் கோட்டை சென்றான். அங்கே மலைமேல் பீமநகர் என்ற கோட்டை இருந்தது. அதை ஒருவரும் பிடிக்கமுடியாதென்று நினைத்து ஜ்வாலமுகி முதலிய கோயில்களுடைய செல்வத்தை யெல்லாம் சேகரித்து வைத்திருந்தார். கோட்டையில் கோயிலில் குருக்கள்மார் தவிர வேறொருவருமில்லை. "அவர்கள், மலைச்சாரலெல்லாம் வீரர் ஏறுவதும், நெருப்புப் பொறி போல் அம்புகள் விழுவதும் கண்டவுடனே, அவர் மனதில் பயம் மிகுந்து கோட்டைக் கதவைத் திறந்து, கழுகுக்கு முன் குருவிகளைப் போலவும், மின்னலுக்கு முன் மழை போலவும் கீழே விழுந்து அழுதார்கள்." மஹ்மூது கோட்டையைப்பிடித்துக்கொள்ளையடித்தான் "அகப்பட்ட

பொருள்களில் முக்கியமானது. செல்வவந்தர் வீடுகளைப் போல் வெள்ளியால் கட்டின வீடு, 30 கஜ நீளம், 15 கஜ அகலம், அதைத் துண்டு துண்டாய்ப் பிரித்தெடுத்து, மறுபடியும் மாட்டலாம். அன்றியும், எவ்வளவு ஒட்டகைகள் அகப்படுமோ, அவ்வளவு சேர்த்து, அவைமேல் அகப்பட்ட செல்வத்தை ஏற்றினார்; எஞ்சினதை சேனை உத்தியோகஸ்தர்கள் கொண்டுபோயினர். நாணயங்கள் மாத்திரம் 70,000 தீர்ஹங்கள்; உருக்கி வார்த்த தங்க வெள்ளிக்கட்டிகள் ஏழு லட்சத்து நானூறு மணங்கு நிறை; உயர்த்தியான உடைகள், அவ்வளவு நேர்த்தியானவை எவரும் எப்பொழுதும் பார்த்ததில்லை." என்று ஒரு முகம்மதியன் எழுதியிருக்கிறான். கஜ்னிக்குத் திரும்பிப்போய் மஹ்மூது, அரண்மனை முற்றத்தில் ஜமுக்காளம் போட்டு, அதன்மேல் நகைகளையும், ஓட்டையிடாத முத்துகள், நெருப்புப் பொரிபோன்றும், பனிக்கட்டியால் உறைந்த திராட்சரசச் சாராயம்போன்றும் உள்ள மாணிக்கங்கள், இராமபாணச்செடி இலைக்கொத்துகள் போன்ற மரகதங்கள், மாதளம்பழம் அவ்வளவு உருவமும் நிறையும் உள்ள வைரங்கள், இவையெல்லாம் பரப்பினான். 1024ம் ஆண்டில் சோமநாதம் என்னும் மேற்குக்கரையில் உள்ள ஊரைப்பிடித்துக் கொள்ளையடித்தான். இந்தத் திரவியங்களைக்கொண்டு கஜ்னியில் பெரும் மாளிகைகளைக்கட்டினான்; கலாசாலைகள் வைத்தான்; கவிகள், மோல்வீகள் பலரை ஆதரித்தான்.

மஹ்மூது காலஞ்சென்றபின்னும் வட இந்திய மன்னர் பலாண்டு கொண்டிருந்தாரேயன்றி, பல நாடுகளும் கலந்து ஒரு அரசாட்சியின் கீழ்வரவில்லை.

போஜராஜா.—(1018—1060). மாளவதேசத்தில் தாராஎன்னும் ஊர் தலைநகராயிற்று. பெரும் பேர்பெற்று

போஜராஜா வாழ்ந்தான். கூர்ஜ்ஜர, சேதி, கல்யாணி மன்னருடன் எப்போதும் போர்புரிந்து கொண்டிருந்தான். ஆனால் இதற்காக இவனுக்குக் கியாதிவரவில்லை. போஜராஜா பண்டித சிரோமணி. வடமொழியில் அனேக சாஸ்திரங்களைப் பற்றிப் பல நூல்கள் இயற்றினன். பண்டிதர்களை அளவில்லாமல் ஆதரித்தான். தன் தலைநகரில் நந்தவனங்கள் பல ஏற்படுத்தினன். சாரதாதேவி ஆலயங் கட்டிவைத்து, அதில் பல பண்டிதர்களை நியமித்து, எல்லாக்கலைகளையும் படிப்பிக்க ஏற்பாடு செய்தான். பிற்காலத்தில் இந்தக்கோயிலை முகம்மதியர்கள் இடித்து, அந்தக் கோயிலுக்குப் பதிலாக மிகப்பெரிய பள்ளிவாயில் கட்டினர்கள்.

போஜன் செய்ததில் மிக உயர்ந்தது போஜப்பூர் ஏரி. 250 மைல் விஸ்தாரமானது; 100 அடிவரையில் ஆழமுள்ளது. அங்கங்கே தீவுகள் இருந்த இடம் தவிர, இவ்வளவு பெரியதான தூயநீர் உள்ள ஏரி இந்தியாவில் வேறொன்றும் இல்லை. ஏரியைச் சுற்றிலும் மலைகள் இருந்தது, நடுவில் இடைவெளி—ஒன்று 100 கஜ அகலமும், மற்றொன்று 500 கஜமும் இருந்ததை பெரும் பாறைகளையும் மண்ணையும் கொண்டு அணைபோட்டான். சிற்றணை 87 அடி உயரமும், அடிப்புரத்தில் 300 அடி கனமும் இருந்தது. ஏரி உடைப்பெடுக்காமல் இருக்க மலையைத் துளைத்து வடிகால் செய்தான். இந்த அற்புத வேலையை 15ம் நூற்றாண்டில் முகம்மதிய சுல்த்தான் ஒருவன் அழித்தான். சிற்றணையை இடிக்க பல வேலைக்காரர் வேலைசெய்து 3 மாதம் பிடித்தது; நீர்வடிய 3 வருஷமாயிற்று; தரை உலர 30 வருஷம் ஆயிற்று. இப்போது ஏரி இருந்த இடத்தில் கோதுமை வயலும், அதன் நடுவே ரெயில்பாதையும் அமைந்து கிடக்கின்றன.

**இராஜபுத்திரர் ஆட்சிமுறை.**—இராஜ புத்திர அரசர் பலமான கோட்டைகளைக் கட்டிக்கொண்டு, சிப்பாய்களைச் சூழவைத்துக்கொண்டு வாழ்ந்தார்கள். அரசர் கீழிருந்த பிரபுக்களும் அம்மாதிரியே இருந்தார்கள், அவர்கள் அரசரிடம் ஜாகீர்கள்பெற்று, ஜாகீருக்குத் தகுந்தபடி அரசருக்கு வேண்டியபோது குதிரைப்படை, காலாட்படை அனுப்பினார்கள். நிலவரியும், வியாபாரமும், வணிகவரியும் தான் அரசருக்கு வரும்படியாகும். ஒவ்வொரு சைன்னியமிருக்கும் இடத்திற்கும் டாணா என்று பெயர்; ஒவ்வொரு டாணாவுக்கும் ஒவ்வொரு அதிகாரி உண்டு. அவன் வேலை வரிவாங்குவதும், நியாயம் செலுத்துவதும் ஆகும். நியாயம் அளிக்கும்போது அவனுடன் சோடியா என்னும் சபையார் கூட இருப்பார். ஒவ்வொரு ஊரிலும் ஒரு சோடியா உண்டு. அதன் அங்கத்தாரே எல்லா ஊர் மேல்விசாரணையும் பார்ப்பார். இவர்களை ஊராரே தெரிந்தெடுப்பார். அன்றியும் கோயில், குளங்கள், முதலியவற்றைப் பார்க்க பஞ்சாயத்துகளுண்டு. எந்த வியவகாரமாவது பார்ப்பதில் தாமதம் ஆனால், அந்த இடத்துக்குச் சில உத்தியோகஸ்தரை அரசன் அனுப்புவான் அந்த வியவகாரம்தீர்ந்து அவர் திரும்பும்வரையில் அவருக்கு ஊரால்படி (ரொஜினா) கொடுக்கவேண்டும்.

இராஜபுத்திரர் ஆண்டபோது நாட்டிலெல்லாம் போக்குவரத்தும் வணிகமும் அதிகமாயுண்டு. கைத்தொழில்கள், வைத்தியம், இரசாயனம், பாண்டித்தியம், கவித்துவம், இவையெல்லாம் செழித்திருந்தன.

## 2. தென்னிந்தியா.

**கலியாணி அரசர்**:—மறுபடியும் சளுக்க வமிசம் உயர்நிலைக்கு வந்தது. இப்போது அவர் தலை நகரம்

நிஜாம் நாட்டிலிருக்கும் கலியாணி நகரம். இவர் நாட்டுக்கு இரட்டைப்பாடி என்று பெயர். இந்த வமிசத்தை ஸ்தாபித்தவன் பெயர் தைலப்பன். இவன் இராஷ்டிர கூடரை ஜயித்தான் (கி. பி. 973). தைலப்பன் மகன் சத்தியாசிரயன் ஆண்டபோது தஞ்சை அரசன் இராஜ ராஜன் இரட்டைப்பாடிமேல் படை யெடுத்துவந்தான். அது முதல் 70 வருஷத்துக்குச் சோழ சளுக்க யுத்தம் நிகழ்ந்தது. அது முடிந்த பின்பு ஆறும் விக்கிரமாதித்தியன் என்று சளுக்கப் பேரரசன் ஆண்டான். (கி. பி. 1706—1726) இவன் பல பண்டிதரை ஆதரித்தான். பல கோயில்களைக் கட்டினான். சளுக்கர் கோயில்களில் இருப்பது போல கல்லில் செதுக்கின சித்திர. வேலை நுட்பமும் அவைகளின் அழகும் வேறு எங்கேயும் இல்லை. இப்பவும் பொன் வேலை செய்யும் தட்டார்கள் இந்தக் கோயில்கள் பணியை அச்சு எடுத்து, அந்த வேலையைப் போல் தங்கத்தில் செய்ய முயல்கின்றார். ஆனால் கடினமான கல்மேல் அக்காலத்தியர் செய்த வேலை இக்காலத்தில் பொன் தகடுமேல் செய்வது கஷ்டமாய் இருக்கிறது. விக்கிரமாதித்தியனைத் தமிழில் விக்கிலன் என்பார். இவன் காலத்திய பண்டிதர் இந்தக் காலத்தில் வழங்கும் தரும சாஸ்திரங்கள் சிலவற்றை எழுதினார்.

தஞ்சைச் சோழர்:—கி. பி. (850—1350) எட்டாம் நூற்றாண்டில் முத்தரயர் என்பார் தஞ்சாவூரில் ஆண்ட சிறு மன்னர். இவர் குலம் மதுரைப் பாண்டிய குலத்தின் கிளை. பாண்டியருடன் போர் புரிந்துகொண்டிருந்தார். கி. பி. 850-இல் விஜயாலயன் என்பான் சோழ குலத்தான் தஞ்சையைக் கைப்பற்றி அங்கே சோழ இராஜ்ஜியம் ஏற்படுத்தினன். அவன் மகன் "ஆதித்தியன்" (880—907) சோழர் செல்வாக்கை அதிகரிக்கச் செய்

தான். திருப்பெரும்பியம் என்னும் ஊரில் கடைப் பல்லவ அரசனான அபாராஜிதனை வென்றான். பின்பு ஸ்தாணுரவி என்னும் சேர அரசனின் உதவியைக் கொண்டு தொண்டை மண்டலத்தின்மேல் படையெடுத்துச்சென்று பல்லவர் ஆட்சியைத் தொலைத்தான். அவன் மகன் பராந்தகன் (907—949) பாண்டியநாட்டையும் ஈழ (சிம்மள) நாட்டையும் தன் ஆதீனத்தில் கொண்டுவந்ததால் மதுரையும் ஈழமும் கொண்ட பரகேசரிவர்மன் என்ற பட்டம் தரித்தான். இத் தஞ்சை மன்னர் மாறி மாறி இராஜகேசரி என்றும் பரகேசரி யென்றும் பட்டம் கொண்டார். பராந்தகன் மகன் இராஜாதித்தியன் தகப்பன் உயிருடன் இருக்கும்போதே சென்னப்பட்டணத்துக்கடுத்த தக்கோளத்தில் இராஷ்டிர குல மன்னனான கிருஷ்ணனோடு போர் செய்து இறந்தான். கிருஷ்ணன் காஞ்சியும் தஞ்சையும் கொண்ட கன்னர தேவன் என்று பட்டம் பெற்றான்.

**சோழர் காலத்துச் சிற்றூர் ஆட்சி முறை.**— பராந்தகனது கல் வெட்டுகளிலிருந்து அக்காலத்துச் சிற்றூர் ஆட்சி முறைகளைச் செவ்வையாய் அறியலாம். ஒவ்வொரு ஊரிலும் ஜனங்கள் தேர்ந்தெடுத்த பல பஞ்சாயத்துகள் உண்டு. பஞ்சாயத்துகளால் கிராம வியவகாரம் நடத்துவதென்பது பழைய தமிழர் முறையும் பின் வந்த ஆரியர் அர்த்த சாஸ்திர முறையும் கலந்ததால் உண்டானது. ஸ்ரீகாரியம் (அதாவது, கோவில் காரியம்), வரி தண்டல், நியாயம் தீர்த்தல், ஆற்றுத்துறைகள் மேல் விசாரணை, நீர் பாய்ச்சல், வாய்க்கால்கள் பரிபாலனம், கைத்தொழில், வணிகம், இவைகளின் மேல் விசாரணை, படிப்பு, தருமபரிபாலனம், மக்களுக்கும் மாக்களுக்கும் தரும வைத்தியம் முதலிய வேலைக்கு ஒரு மகா சபையும், ஒவ்வொரு வேலைக்கும் தனித்தனியான கூட்டத்

தாரும் உண்டு. இவர்கள் சபை கூடுவது கோயில் மண்டபத்தில்தான். பேர்களை ஓலைகளில் எழுதி சட்டியில் போட்டு குலுக்கித் தெரிந்தெடுப்பார். பெருங்கோயில்களுக்கு தனியான தருமகருத்தர் உண்டு. வீண் வாதமுங் கிடையாது. கச்சேரியில் வருஷக் கணக்காய்த் தீராத பிரியாதுகளும் கிடையாது.

இந்தக்காலத்தில் கம்பன் என்னும் மகாகவி உலகத்திலுள்ள சிறந்த காவியங்களில் ஒன்றாகிய தமிழ் இராமாயாணம் இயற்றி, கி. பி. 884-இல் அரங்கேற்றினான். செய்புள் நடையில் பழம் தமிழ்ப்பாக்களின் அழகும், கதைப்போக்கில் வடமொழிக்காவியங்களின் அழகும் சேர்ந்த நூல் இக்கம்பராமாயணம். இநதக்காலத்தில் வைஷ்ணவப்பாசுரங்களை நாலாயிரப்பிரபந்தமாய் நாதமுனிகளும், சைவப்பாசுரங்களைத் தேவாரத்திருமுறைகளாய் நம்பியாண்டர் நம்பியும் தொகுத்தார். இவைகளைத் தமிழ் வேதம் என்பார். முதற் சோழரில் சிலர் பாக்கள் இயற்றினார்கள். கண்டராதித்தன் என்பான் திருவிசைப்பா பாடினான். முதற் சோழர் வெகு அழகிய சிறு கற்கோயில்கள் கட்டினார். கொடும்பாளூர் மூவர் கோவிலும் திருச்சினாப்பள்ளி ஜில்லா ஸ்ரீநிவாஸ நல்லூரில் உள்ள இடிந்த கோயில் முதலியவைகளும் இக்காலத்தியவைகள். இவை ஒரு விமானமும் அதன் முன் மண்டபமும் மாத்திரம் உள்ளவை. சுவர்கள் மேல் வெகு அழகிய விக்கிரகம் செதுக்கியிருக்கும்.

இராஜராஜ உடையார் இராஜகேசரிவர்மன். (985—1018) தஞ்சைச் சோழர் எல்லோரிலும் அதிகப் பிரசித்தி பெற்ற மன்னன் இராஜராஜன். இவன் நிலப் போர், கடற்போர் பல செய்து முறையே சேரநாடு, கிழக்குச் சளுக்கர் நாடு (அதாவது வேங்கி நாடு), மேற்

குச் சளுக்கர் நாட்டில் ஒரு பகுதி, குடகு, கங்கைப்பாடி (மேற்குக் கங்கையர் ஆளுகையிலிருந்தது), கலிங்கம் (கிழக்குக் கங்கையர் கீழ் இருந்தது). சிம்மளம், இவைகளையெல்லாம் தன்னாட்சியின் கீழ் கொண்டுவந்தான். தென்னிந்தியாவிலுள்ள பெருங்கோயில்களில் முதலில் கட்டியதான பிருகதீசுரசுவாமி கோயிலைத் தஞ்சாவூரில் கட்டினான். இந்தக் கோயிலுக்குக்கோபுரம் சிறியது. விமானம் மிகப்பெரியது. அதன் மேல் கலசம் 16 அடி குறுக்களவுள்ளது; கல்லாலானது. கோயில் பூஜையை அதற்கு முன்னுள்ளதை விட மிகச் சிறப்பாய் ஏற்பாடு செய்தான். இந்தக் கோயிலின் சித்திர வேலை மிக அழகியது.

கோயிற் சுவரிலெல்லாம் பல கல் வெட்டுகள் வெட்டுவித்தான். அவைகளில் தான் தானம்செய்த 100 நகைகள், அவைகளின் நிறை, அளவு, இன்ன இன்ன இரத்தினங்கள் இத்தனை இழைத்தவை, இத்தனை முத்துக்கள் அடங்கியவை என்று விவரமாய் எழுதி வைத்திருக்கிறான்; அன்றியும் கோயிலுக்கு 100 பொன் பாத்திரங்களும், பல பொன்விக்கிரங்களும் கொடுத்ததாகவும், அவைகளின் நிறை, அளவு முதலிய குறிப்புகளுடனும் எழுதி வைத்திருக்கிறான். இந்தக் கோயிலுக்குக் கொடுத்து கல்லில் வெட்டுவித்த தானசாசனங்களால் அக்காலத்தில்வெகு நுட்பமாய் அளந்தார்களென்றும், கிராமத்திலுள்ள தாளடிக்கும் இடம், குளங்கள், ஆறு, சிறு கோயில்கள், சுடுகாடுகள் முதலியவற்றின் அளவுகளெல்லாம் சரியாய் அளந்து இராஜாங்கக்கணக்குகளில் பதிந்துவைத்திருந்ததாகவும் தெரியவருகிறது. கோயில் வேலைக்காரர் பலபேர் உண்டு. பூஜாரிகள், வேதம், தேவாரம் ஓதுவார், நட்டுவர், பாடகர், மேளக்காரர், கொடை பிடிப்போர், விளக்கேற்றுவோர்,

நீர்கொண்டுவருபவர், குயவர், வண்ணார், பரியாரிகள், சோதிடர், தையல்க்காரார், பித்தளை வேலைக்காரார், தச்சர், தட்டார் முதலியோர் 200 பேர் இருந்ததாகத் தெரியவருகிறது. இது தவிர, 400 தேவடியாள்களுக்கு ஒவ்வொருத்திக்கும் தனிவீதியில் வீடுகளும் கொடுத்து சம்பளம் நியமித்தான். இதுவுமன்றி 4 பொக்கிஷதார்கள், 5 கணக்கர், 10 உதவி கணக்கர். 200 மாணிகள் (தேவர் ஊழியம் செய்ய பிராமண பிரம்மசாரிகள்), மற்றோரும் இருந்தார். ஒவ்வொரு கிராமத்துக்கு ஒருவன் மேனிக்கு 100 காவற்காரரும் இருந்தார்கள்.

**இராஜேந்திரசோழன் கங்கைகொண்டான்.—(1011-1035).** இவன் இராஜராஜன் மகன். இவன் கலியாணி சளுக்கமன்னன் ஜயஸிம்மனை ஜயித்து "இரட்டைப்பாடிமாதர் அணிகளை இழந்து, கண்ணீரென்ற முத்தைத்தவிர வேறொரு அலங்கார மில்லாமல்" செய்தான். பின்பு கங்கை நீரை தன்னாட்டுக்குக் கொண்டுவர நிச்சயித்தான். சேரநாடு முதல் கங்கைக்கரையில் ஆண்ட மன்னர் எல்லோரையும் ஜயித்து, "எரிமணல்மேல் தண்ணீரைப் பரப்பும் கங்கைக்கரை" போய்ச் சேர்ந்தான். அங்கே ஆட்சிசெய்த மன்னரையும் தோற்கடித்து, தனக்குப் பிரதிதினமும் பலகாவடிகளில் கங்கை நீரை அவர்கள் அனுப்ப ஏற்பாடு செய்தான். திரும்பி வந்து கங்கை கொண்ட சோழபுரம் என்ற புதுஊரைக்கட்டி அதைத் தலைநகராய் ஆக்கினான். இது கொள்ளிடத்துக்கு வடக்கே, கடற்கரைக்கு 10 மைல் தூரத்திலிருக்கிறது. இப்போது முழுவதும் அழிந்திருக்கிறது. அப்போது அது பெரியபட்டணம். அரண்மனை மாத்திரம் 5மைல் சுற்றளவிருந்தது. அங்கே தஞ்சாவூரில் தன் தந்தை கட்டினமாதிரியே ஒரு சிவன்கோயில் கட்டினான். அங்குள்ள விக்கிர

கங்கள் மற்றைய கோயில்களில் உள்ள விக்கிரகங்களைவிட அதிக அழகியவைகள் என்று பலரின் அபிப்பிராயம். அதிலுள்ள இலிங்கம் 30 அடி உயரம். கோயில் விமானமோ 174 அடி உயரம். அந்தக்கோயில் மதில்களை இடித்து அதில் இருந்த அழகிய கற்பலகைகளைக் கொண்டு, கொள்ளிடத்துக்குப் பாலம் கட்டியிருக்கிறார்கள். கோயில் மாத்திரம் இடியாமல் செவ்வையாகவே இருக்கிறது. அரசன் அரண்மனையோ செங்கல்லால் கட்டியதாகையால் இருந்த இடம் தெரியாதவகையாய் அழிந்துபோயிற்று. இராஜேந்திரன் இந்த நகர் கட்டிய பின் கங்கைகொண்ட சோழன் என்ற பட்டம் தரித்தான். ஊருக்கு வெளியில் 16 மைல் சுற்றளவுள்ள பொன்னேரி என்ற ஏரி வெட்டுவித்தான். கங்கையிலிருந்து தினந்தோறும் வந்த நீரை அதில் ஊற்றி அதை புண்ணிய ஏரியாய்ச் செய்வித்தான். அந்த ஏரிக்கு 60 மைல் தூரத்திலிருக்கும் ஸ்ரீரங்கத்தின் பக்கத்தில் ஓடும் கொள்ளிடத்திலிருந்து கால்வாய்வெட்டி நீர்ப்பாய்ச்சினான். ஏரிக்குப் பலமான கரைகட்டு கட்டுவித்தான். இப்போது ஏரி உலர்ந்துபோய் மைதானமாயிருக்கிறது.

இராஜேந்திரன் கங்கைகொண்ட சோழபுரத்தைத் தலைநகராய்ச்செய்ததற்குக்காரணம் என்னவென்றால், அவனுக்குக் கப்பல்படை அதிகரித்தது. தஞ்சாவூருக்கு அருகில் துறைமுகம் இல்லாததினால் கடலுக்கு அருகில் தலைநகர் வேண்டியிருந்தது. கொள்ளிட முகத்துவாரத்தில் கப்பல்படை சேகரித்து, கிடாரம் (அதாவது பர்மா) மேல் படையெடுத்து, தக்கோளம், மதமா (மர்தபான்) முதலிய ஊர்களைப் பிடித்து ஜயஸ்தம்பங்களை நாட்டித் திரும்பினான். நக்கவரம், அந்தமான் தீவுகளையும் பிடித்தான்.

**சோழசளுக்கர் யுத்தம்.**—இராஜராஜ உடையார் சளுக்கருடன் ஆரம்பித்த யுத்தம் 70 வருஷங்கள் இடைவிடாமல் நிகழ்ந்தது. இராஜாதிராஜன் (1035-1053) அவரைக் கொல்லிப்பாக்கை, கம்பிலி என்ற ஊர்களில் தோற்கடித்தான். 1053 இல் துங்கை நதிக்கரையில் கொப்பம் என்ற ஊரில் ஆஹவமல்லன் என்றசளுக்க அரசனுடன் புரிந்தபோரில் இராஜாதிராஜன் இறந்தான். ஆனாலும் அவன் அவ்வாறு இறந்தபோழ்து இரண்டாவது இராஜேந்திரன் என்னும் அவன்தம்பி போர்க்களத்தின்றும் அகலாமல் அங்கேயே நிலைபெற்றிருந்து போரை நடத்திச் சளுக்கரை முறியடித்தான். இதற்குப் பழிக்குப் பழிவாங்க சிலகாலத்திற்குள் ஆஹவமல்லனும், அவன் மகன் விக்கிரமாதித்தியன், விக்கிரமாங்கன் என்ற பெரும் புகழும் படைத்தவனும் சேர்ந்து சோழ நாட்டின்பேரில் படையெடுத்து, காஞ்சியைக் கொள்ளையிட்டார்கள். இந்த யுத்தத்தின் முடிவாக பல்லாரி ஜில்லாவில் கிருஷ்ணவும் துங்கபத்திராவும் கலக்குமிடத்திலுள்ள கூடல் சங்கமம் என்ற ஊரில் 1064ல் போர் நிகழ்ந்தது. அப்போது சோழ மன்னன் வீரராஜேந்திரன் சளுக்கரை தோற்கடித்தான். 1070ல் வீரராஜேந்திரன் இறந்தான். அப்போது சளுக்கமன்னனயிருந்தவனை மேற்கூறிய ஆறும் விக்கிரமாதித்தியன் அவன் மைத்துனனுகிய அதிராஜேந்திரனுக்கு உதவிசெய்து அவனை சோழர் மன்னனுக்கினன். இச்சோழமன்னனுக்கும் அக்காலத்திலிருந்த இராமனுஜாச்சாரியாருக்கும் மனத்தாங்கல் உண்டாயிற்று. அப்பெரியாரிடத்தில் இவ்வரசன் பகைமை பாராட்டியதனல் நாட்டில் பெருங்குழப்ப முண்டாயிற்று. அதிராஜேந்திரனும் அதிவிரைவில் சந்ததியற்று இறந்தான். சோழர் குலமும் அதோடு அற்றுப்போய்விட்டது.

இராஜமஹேந்திர சளுக்கர்.—விமலாதித்தியன் என்னும் கிழக்குச் சளுக்கவமிச 26-வது அரசன் 1015ம் ஆண்டில் இராஜராஜ சோழன் மகள் குந்தவையை மணம் புரிந்து அவன் கீழ் மன்னன் ஆனான். விமலாதித்தியன் மகன் இராஜராஜநரேந்திரன். இவன் இராஜேந்திரன் கங்கைகொண்டான் மகள் அம்மங்காதேவியைக் கலியாணம் செய்துகொண்டான். நரேந்திரன் சன்னிதியில் இருந்த நன்னய்யா என்னும் கவி தெலுங்கில் முதல் காவியமான தெலுங்கு மகாபாரதம் என்ற இனிய காவியத்தை இயற்றினான். நரேந்திரன் மகன் இராஜேந்திரன். அவனை பாட்டனும் பாட்டியும் வளர்த்தார். 1075 இல் அதிராஜேந்திரன் பிள்ளையில்லாமல் இறந்தபோது சோழவமிசம் முடிவு பெற்று, இராஜேந்திரன் சோழ மன்னனாய் சோழகுலத்தை நிறுத்திவைத்ததால் குலோத்துங்கன் என்ற பட்டம் பெற்றான். தெலுங்குநாடும் தமிழ்நாடும் ஒரு ஆட்சியின்கீழ் வந்தன. அவன் சிற்றப்பனை வேங்கி (தெலுங்கு) நாட்டு அதிபதியாக நியமித்தான்.

சோழர் இரண்டாம் வமிசம்: குலோத்துங்கன்.—(1075-1118). தென்னிந்தியா வெல்லாம் தன்னாட்சியின் கீழ்வர குலோத்துங்கன் சக்கரவர்த்தி என்ற பட்டம் பெற்றான். அவன் கருணாகர பல்லவனென்னும் சேனாபதியைக் கலிங்கம் அனுப்பி, தன் பேரன் அனந்தவர்மனைச் சிம்மாசனத்தின்மேல் நிறுத்தினான். கருணாகரன் கலிங்கத்தின்மேல் படையெடுத்த கதை ஜயங்கொண்டான் இயற்றிய கலிங்கத்துப்பரணியில் பார்க்கலாம்.

குலோத்துங்கன் தன்னாடெல்லாம் அளந்து, நிலவரியைத் தீர்மானம் செய்தான்; சுங்கம் என்பதை எடுத்துவிட்டான்; அதனால் 'சுங்கந்தவிர்த்த' என்ற பட்டம் அடைந்தான். ஆயினும் சோழர் இராஜ்ஜியத்தில் வரி

மற்றைய ராஜ்ஜியங்களில்விட அதிகம். குலோத்துங்கனும் பலகோயில்கள் கட்டினன். வரவரக் கோயில்களில் விமானம் சிறுத்து கோபுரம் உயர்ந்து இப்போது இருக்கும் கோயில்கள் போலாயிற்று. பல கலாசாலைகளும் தருமவைத்தியசாலைகளும் கட்டினன். தமிழ்க்கவிகள் பலரை ஆதரித்தான். குலோத்துங்கன் இறந்தவுடன் மதுரைப் பாண்டியரும், கோதாவரிக்கரையில் ஆண்ட தெலுங்கு சோடரும், கிருஷ்ணைக்கரையில் கொண்டவீடுரெட்டிகளும் பலம் அதிகரித்து ஆளத்தொடங்கினார்கள். சோழர் என்ற பெயர் தெலுங்கில் சோடரென்றாயிற்று. வரவர சோழர் இராஜ்ஜியம் சுருங்கி 14-ம் நூற்றாண்டில் இறந்தது.

ஹொய்ஸளர்.—விஷ்ணுவர்த்தனன் (1117-1141). குலோத்துங்கன் இறந்த உடனே, மைசூர் சீமையில் பேளூரில் விக்கிரமாதித்தியன் பிரதிநிதியாயிருந்த விஷ்ணுவர்த்தனனென்னும் பிட்டிகன் சோழர்களிலிருந்து கங்கைப்பாடியைக் கைப்பற்றினன். விக்கிரமாதித்தியன் இறந்த உடனே, ஹளேபீத் என்கிற துவார சமுத்திரத்தில் ஹொய்ஸள ராஜ்ஜியத்தை ஏற்படுத்தினன். இராமானுஜாச்சாரியருக்குச் சிஷ்யனாய் விஷ்ணு கோயில்களும் வைஷ்ணவ மடங்களும் பல கட்டுவித்தான். அவன் கோயில்கள் சளுக்கர் கட்டுவித்த கோவில்களைவிட இன்னும் அழகாயிருக்கும். ஜைன கோயில்களும் சிவன் கோயில்களும் கட்டுவித்தான்.

இராமானுஜாச்சாரியார். (1017—1137) இவர் காஞ்சிபுரத்தில் பிறந்தவர். வைஷ்ணவ வேதாந்தசாஸ்திரம் கற்றறிந்து பாஷ்யம் எழுதி, ஸ்ரீரங்கத்தில் கோயில் பூஜைகளைச் சீர்திருத்தினர். அப்போது அதிராஜேந்திரச் சோழன் அவரை உபத்திரவப்படுத்தினன். சோழநாட்டினின்றும் நீங்கி மைசூர்போய் விஷ்ணுவர்த்தனன்

ஆசாரியனைப் அவன் கட்டின மடத்திலிருந்து சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்து வந்து வைஷ்ணவத்தை அதிகரிக்கச்செய்தார். மேல்கோட்டை பரகாலசுவாமி மடமும், வேறு சில மடங்களும் ஸ்தாபித்தார்.

**பிஜ்ஜலன் : பஸவன்.** ஆறும் விக்கிரமாதித்தியன் சேனாதிபதியான பிஜ்ஜலன் பனவாசியில் (1156—1167) இல் ஆண்டான். அவன் மந்திரி பஸவன் லிங்காயதம் அல்லது வீரசைவம் என்கிற சமயத்தை ஏற்படுத்தினான். லிங்காயதர் ஒரு லிங்கத்தை வெள்ளிசம்புடத்தில்வைத்து கழுத்தில்கட்டித் தோங்கவிடுவார். அவர் குருக்களுக்கு ஜங்கங்கள் என்று பெயர். மரணம் அடைந்தபோது தகனம் செய்யாமல் கழுத்து லிங்கத்துடன் புதைத்துவிடுவார். பிஜ்ஜலன் குடும்பத்தாருக்கு கலசூரியர் என்று பெயர், வெகுகாலம் ஆளவில்லை. ஹொய்ஸளர், கலசூரியர் ஆண்டதுமுதல் கன்னடக்காவியங்கள் பல உண்டாயின.

# XI. முகம்மதிய ஆட்சி தொடங்கின காலம்.

## (1190—1290)

### 1. வட இந்தியா.

**முகம்மதியர் வருமுன்.**—முகம்மதியர் இந்தியாவைக் கைப்பற்றப் படையெடுத்துவருமுன் வட இந்தியாவில் இராஜபுத்திர அரசர் பலர் ஆண்டுவந்தார். அவரில் எவர் பெரியவர் எவர் சின்னவர் என்று இல்லாமல் தன் தலைநாட்டமாய் இருந்தார். இருந்தவரில் செளர்யம், உதார குணம் முதலியவற்றிற்குப் பேர்போனவன். தெஹிலி (ஆங்கிலத்தில் டில்லி என்பார்) அரசன் பிருதிவிராயன். இவன் கனௌஜ் அரசன் ஜயசந்திரன் குமாரத்தி, நாடெல்லாம் அழகுக்குப் பேர்போனவள், சம்யுக்தையை மணம்புரிந்த கதை பிரசித்தமானது. பிருதிவிராயன் சோஹன குலத்தைச்சேர்ந்தவன். எல்லா மன்னரினும் உயர்ந்தவனாகப் பலர் ஒப்புக்கொள்ளப்பெற்றவன். ஆனால் கனௌஜ் மன்னர் 7-ம் நூற்றாண்டு முதல் சக்கரவர்த்திகளாயிருந்தபடியால் ஜயசந்திரன் நாட்டுக்கு முதல் மன்னனென்று நினைத்துக்கொண்டிருந்தான். இதை ஸ்தாபிக்க, ஒரு அசுவமேதயாகம் செய்து, அதனுடன் தன் பெண் சம்யுக்தை சுயம்வரமும் கலந்து நடத்தினால் எல்லோரும் வந்து தன்னைக் கவர்விப்பார், என்று எண்ணி அவ்வாறே செய்துமுடிக்க ஆரம்பித்தான். அதற்கு மற்றைய மன்னர்கள் போனார்களேயொழிய, பிருதிவிராயன் போகவில்லை. அப்போது பிருதிவிராயன்போல் பொன்விக்கிரகம்செய்து வாயிற்காப்போனாக கலியாண

மண்டபத்தின் முன்னில்வைத்து சுயம்வரச்சடங்கு ஜயசந்திரன் செய்யத் தொடங்கினன். சம்யுக்தை கல்யாண மாலையை எடுத்துக்கொண்டு வாயிலில் இருக்கும் பிருதிவிராயன் விக்கிரகத்தின் கழுத்தில் போட்டாள். ஜயசந்திரனுக்குக் கோபம்வந்து அவளைக் கங்கைக்கரையில் ஒரு கோட்டையில் சிறைவைத்தான். பிருதிவிராயன் அங்கே போய் அவளை கந்தருவவிவாஹம் செய்தான். செய்யவே ஜயசந்திரன் அந்தக்கோட்டையை முற்றிகைப்போட்டான். பிருதிவிராயன் பெண்சாதியைக் குதிரைமேல் உட்கார்த்தி வைத்துக்கொண்டே தெஹிலிபோய்ச் சேர்ந்தான். பின்பு ஜயசந்திரனுக்குக் கோபம்தணிந்து விவாகம் முறைப் பிரகாரம் செய்வித்தான்.

முகம்மதியர்வென்றது.—1191-ம் வருஷம் கஜ்னி சுல்தான் ஷிஹப்புத்தீன் படையெடுத்து வந்து ஸ்தாண் வீரச்சுரத்துக்கடுத்த தராயின் என்னும் கிராமத்தில் பிருதிவிராயனை எதிர்த்துத் தோல்வியடைந்து கஜ்னி போய்ச்சேர்ந்தான். அடுத்த வருஷம் திரும்பி வந்து பிருதிவிராயனை அந்த இடத்திலேயே தோற்கடித்துக் கொன்றான். பின்பு அவன் சேனதிபதி குத்புத்தீனுடன் 1194-ம் ஆண்டில் ஜயசந்திரனைத் தோற்கடித்து கனௌஜ் நகரையும், காசியையும் பிடித்துக்கொள்ளையடித்தான். காசிகோவில்களை யிடித்து மஜீதுகள் கட்டினன். கொள்ளையடித்த சாமான்கள் 1400 ஒட்டகை மேலேயும் 640 யானைகள் மேலேயும் ஏற்றி கஜ்னிக்கு கொண்டுபோனன். குத்புத்தீனைத் தன் பிரதிநிதியாய் நியமித்தான். அப்போது கல்ஜி குலத்தான் பக்த்யார் மகன் முகம்மது என்பவன் அவத் மகதம் வங்காளம் இம்மூன்று நாடுகளையும் பிடித்தான். 1206ம் வருஷத்துக்குள் வட இந்தியாவெல்லாம் முகம்மதியர் ஆட்சியின்கீழ் வந்தது.

**தேஹிலி சுல்த்தான்கள்.**—(1206-1290). ஷிஷ ஹப்புத்தீன் 1206-இல் இறக்க, குத்புத்தீன் சுல்த்தானானான். அவனுக்குப்பின் 1210 இல் அவன் மருமகன் அல்த்தமிஷ் சுல்த்தானானான். இவன் 27 கோயில்களை இடித்த சாமானுடன் குத்ப்மினார் என்ற மஜீது கட்டினான். இதைக் கட்டினவர்கள் இந்திய வேலைக்காரரே. முகம்மதிய கட்டிடம் என்று காட்ட, மினார் என்ற கோபுரம் தவிர, வேலையெல்லாம் இந்தியரது பழையகட்டிட வேலைபோன்றதே. மற்றைய முதல் சுல்த்தான்கள் உயர்ந்த வேலை ஒன்றும் செய்யவில்லை.

## 2. நடு இந்தியா.

**உத்கலநாடு.**—கீழ்க்கங்கையர்குலத்துக் கடையரசனை அனந்தவர்மன், துலோத்துக்கங்கன் பேரன், கருணாகரப்பல்லவன் உதவியால் தன்னாட்சியை நிலைநிறுத்தினான் என்றோம். சோழன் பேரனானதால் தன் குலப்பெயரை சோடகங்கைகுலம் என்றுமாற்றி திரிகலிங்கத்தரசனாய் வாழ்ந்தான். இவன் ஜகந்நாத (புரி) கோயிலைக்கட்ட ஆரம்பித்தான். இவன் 8-ம் தலைமுறையில் பிறந்த நரசிம்மதேவசோடகங்கன் 1236 முதல் 1268 வரையில் ஆண்டான். அவன் தலைநகர் கடகத்துக்கடுத்த ஜாஜ்நகர். இவன் வங்காளத்துச் சுல்த்தான்களுடன் போர் புரிந்து அவரை மகாநதிக்கரையில் உள்ள கடசிங்கநகரில் தோற்கடித்தான். பின்பு நரசிம்மதேவன் வங்காளத்துக்குள் புகுந்து, முகம்மதியர்கள் பலரை ஜயித்ததால், 'கங்கைநீரானது முகம்மதிய ஸ்திரீகள் கண்ணீரினால் கரைந்து வந்த கண்மைபட்டுக் கறுத்ததால், யமுனைநிறம் வந்துவிட்டது என்று ஆச்சரியப்பட்டதுபோல் அலைகலக்கமில்லாமல் தோன்றிற்று' என்று தனது தாமரைப்பட்டயத்துமீது எழுதியிருக்கிறான்.

நரசிம்மதேவன் ஜகந்நாதத்துக்கு 20 மைலில் கடற்கரையில் கோணார்க்கன் கோயில் ஒன்று கட்டுவித்தான். இதைவிட அற்புதமான கோயில் உலகத்திலில்லை. அதைக் கட்ட, இராஜ்ஜியத்தின் 12 வருஷத்து வரும்படி செலவழிந்தது. ஜகன்மோகனமண்டபம் என்று ஒன்று அக்கோவிலில் உண்டு. அதன் சுவர்மேல் 3000 அடி நீளமுள்ள கல்லின் மேல் செதுக்கின சித்திர வேலை, ஊர்வலப் படங்கள், வேட்டைப்படங்கள், யுத்தப்படங்கள் மற்றைய ஜனங்களுடைய விளையாட்டுகளை காட்டும் சித்திரங்கள் நிரம்பியிருந்தன. சுவர்மேல் உள்ள விக்கிரகங்கள் உயிருடன் உள்ள ஜந்துக்களைப் போல் அவ்வளவு பெரியவை. தாமரை உருவமுள்ள கலசம் வெகு அழகியது. மற்றோர் மண்டபம் 128 அடி உயரம், 10-அடிக்கலசம் உள்ளது. அதன்வாயிலில் கல்லால் யானைகளும், யானைகள் மேல் மனிதரும், சிங்கங்களும் செதுக்கியிருக்கிறது. கர்ப்பக்கிருகத்துமுன் 50 கஜம் உயரமுள்ள கருப்புக்கல் தூண் உண்டு. தூண்கள்மேல் 21 அடிநீளம் 8 அங்குலச் சதுரம் இரும்பு உத்திரங்கள் இருக்கின்றன. மேடைமேல் 8 சக்கரங்கள் 9 அடி 8 அங்குலம் குறுக்களவு கொண்டதும், கற்குதிரைகள் பூட்டின சூரிய தேவனது இரதத்தைச் சேர்ந்ததும் கல்லினால் செய்திருப்பதைப் பார்க்கலாம். நடனமண்டபத்துக்கு 9 படிகள் இருக்கின்றன. அது 52 அடி சதுரம், அதன் கொரடு 75 அடி சதுரம். இவ்வளவு பெரிய கோயில் இவ்வளவு பெரிய விக்கிரங்களுள்ளது உலகில் எங்கேயும் இல்லை. இப்போது பாதி இடிந்து பாதி மண்ணில் புதைந்து இருக்கிறது. இந்தக் கோயிலுக்கு வேண்டிய மிகப் பெரியதான கற்பாறைகள் 30 மைல் தூரத்திலிருந்துகொண்டுவந்து 150 அடி உயரம் தூக்கிவைத்த வேலைக்கார் வேலைத்திறம் எத்தன்மையதோ ?

நரசிம்மதேவன் பேரன் அனந்தவர்மன் ஆரம்பித்த ஜகந்நாதன் கோயிலை கட்டிமுடித்தான். சோடகங்கர் புவனேச்வரத்தில் பல நூறு கோயில்கள் கட்டினார்கள். அவர் ஆட்சி விஜயநகர இராஜ்ஜியம் தோன்றினவுடன் அழிந்தது.

## 3. தென்னிந்தியா.

காகதீயர்.—தஞ்சைச் சோழர் பலம் குறையவே தென்னிந்தியாவில் பலகுல மன்னர்கள் கிளம்பினார்கள். அவர்களில் காகதீயர் கிருஷ்ணை கோதாவரி நதிகளுக்கு நடுவிலிருக்கும் தெலிங்கான நாட்டில் அரசரானார்கள். இந்தக்குல முதல்மன்னன் ப்ரோளராஜா. இவனுக்கு ருத்திரன் என்று பிள்ளை பிறந்த உடன் இந்தப்பிள்ளை தகப்பனைக்கொல்வான் என்று சோதிடர் சொல்ல பிள்ளையைக் கொன்றுவிட உத்திரவு அளித்தான். அவன் வேலைக்காரரோ பிள்ளையைக்கொல்ல இஷ்டமில்லாமல் காட்டில் எறிந்துவிட்டார். ருத்திரன் ஒரு வேடன் வீட்டில் வளர்ந்து பெரியவனானன். அப்போது ப்ரோளன் காட்டுவழியாய் சவாரிசெய்து கொண்டு வேட்டைக்குப் போக, அங்கே ருத்திரனுடன் சண்டை உண்டாய். ப்ரோளன் தன் தகப்பனென்று தெரியாமல் அவனை ருத்திரன் கொன்றுவிட்டான். பின்பு பிரதாப ருத்திரன் என்ற பெயருடன் சிம்மாசனம் ஏறினன். இவன் தலைநகர் ஒருக்கல் நகரம் (தெலுங்கில் வரங்கல் என்பார்). தகப்பனைக் கொன்ற பாபத்துக்குப் பிராயச்சித்தமாய் ஒரு ஆயிரக்கால் மண்டபம் ஹநுமகொண்ட என்னும் குன்றுமேல் கட்டினன். பிரதாப ருத்திரன் மகன் கணபதி. அவன்கால முதல் வரங்கல் அரசருக்கு கணபதியரசர் என்றுபெயர் வந்தது. கணபதி வரங்கலைச் சுற்றி மதில் கட்டினன். அது கொஞ்சம் இடிந்து போனாலும் இன்

னும் இருக்கிறது. அவன் பெண் ருத்திரம்மாதேவி. பலகாலம் தெலுங்குநாட்டை மனுநீதிதவறுமல் ஆண்டாள். அவள் நாட்டில் எட்டுக்கால் பூச்சி கூட்டைவிட மெலிதான நூலாடைகள் நெய்வார், என்று இத்தாலிய நாட்டிலிருந்து யாத்திரை செய்துவந்த மார்கோபோலோ என்பவன் எழுதியிருக்கிறுன்.

சோழர்.—தஞ்சைச் சோழர்நிலை வரவரக் குன்றியது. இவருள் கொஞ்சம் கியாதியுற்ற அரசன் விக்கிரமசோழன். இவனைப்பற்றி விக்கிரமசோழன் உலா என்று தமிழ்ப்பாட்டு பிறந்தது. இவனுக்கப்புறம் மூன்றும் குலோத்துங்கன் கொஞ்சம் செல்வாக்குடன் ஆண்டான். சோழச்சிற்றரசர் காஞ்சிபுரத்திலும் உறையூரிலும் ஆண்டார்கள். இவர் பல கோயில்களைக் கட்டினார்கள்; கணக்கற்ற கல்வெட்டுகள் வெட்டிவைத்தார். இப்போது சோழநாட்டில் இடிந்துபோகாமலிருக்கும் பல சிறு பழங்கோயில்கள் இந்த சோழர்கட்டியதே. சோழநாடு 14-ம் நூற்றுண்டில் விஜயநகரத்தின் ஒரு பாகம் ஆயிற்று.

பாண்டியர்.-குலோத்துங்கன் இறந்தவுடன் மதுரைப்பாண்டியர் மறுபடி உயர்நிலையடைந்தார். சுந்தரபாண்டியன் பல நாடுகளைவென்று பாண்டிய ராஜ்ஜியத்தைப் பலப்படுத்தினுன். இரண்டாம் சுந்தரபாண்டியன் இவ்வரசரெல்லோரிலும் பெரியவன். அவன் 1257 முதல் 1277 வரையில்ஆண்டான். சுற்றுள்ள மன்னர் எல்லோரையும் ஜயித்து நெல்லூர்முதல் கன்னியாகுமரிவரையில் தன் வசமாக்கினுன். அப்போது ஹொய்சளர் திருச்சிறுப்பள்ளியைச் சுற்றி உள்ள நாட்டை கைப்பற்றி கண்ணனூர் (இப்போது சமயபுரம் என்று பெயர்) தலைநகராய் ஆண்டார். அவரைத் தோற்கடித்துச் சுந்தரபாண்டியன் ஸ்ரீரங்கம் கோயிலை புதுப்பித்தான். இப்போது உள்ள ஸ்ரீரங்கம் கோயிலின்

கர்ப்பக்கிருகம் சுந்தரபாண்டியன் கட்டினது. விமானத்தைத் தங்கத்தகடுகளால் மூடினன். கோயிலுக்கு பற்பல நகைகள் செய்து தானம் செய்தான். அவன் காலத்தில் கொற்கை யென்ற பாண்டியர் துறைமுகம் மணல்மேடிட்டுப் போயிற்று. அதனல் காயல் துறைமுகமாயிற்று. அந்த துறைமுகத்தில் மலைபோன்ற கப்பல்கள் தினந்தோறும் வந்துகொண்டிருந்தன என்று அப்துல்லா வஸ்ஸாப் என்கிற முகம்மதியன் எழுதியிருக்கிறன். ஒரு வருடத்தில் 2000 குதிரைகளுக்குக் குறையாமல் இறக்குமதியாயின. இக்தக் குதிரைகள் பாரசீகநாட்டிலிருந்து வந்திறங்கின உடனே, அவைகளைப் பழக்காமலும் சேணமொன்றுமில்லாமலும் இந்தியர்கள் நன்ருய் சவாரிச் செய்து இடுப்பொடிப்பார் என்று வஸ்ஸாப் எழுதியிருக்கிறன். சுந்தரபாண்டியன் மகன் குலசேகரபாண்டியன். அவன் நவரத்தினங்களாலான மாலைகளைக் கழுத்திலும், கையில் 3 வளையல்களையும், காலில் விலையுயர்ந்த மோதிரங்களையும் தரித்தானென்று ஆச்சரியப்பட்டு வஸ்ஸாப் எழுதியிருக்கிறன். குலசேகரன் இறந்தவுடன் அவன் பிள்ளைகள் சுந்தரபாண்டியனும் வீரபாண்டியனும் போராடி வீரபாண்டியன் ஜயித்தான். சுந்தரபாண்டியன் வடக்கில் தெஹ்லி சுல்தான் அல்லா உத்தீனிடம் ஓடிப்போய் அடைக்கலம் புகுந்தான்.

இந்தப் பாண்டியர் திருச்சிளுப்பள்ளி, மதுரை, திருநெல்வேலி ஜில்லாக்களில் பல கோயில்கள் கட்டினர்கள். வரவர இக்கோயில்களில் கோபுரம் உயர்ந்து விமானம் கோபுரத்தை உத்தேசிக்கச் சிறுத்துவிட்டது.

சேரர்.—இந்தக் காலத்தில் இப்போது ஆளும் திருவனந்தபுரம் அரசகுலம் ஏற்பட்டது (1225). இது முதல் இவ்வரசர் தமிழரைவிட்டுப் பிரிந்ததுமல்லாமல்

தமிழைவிட்டு ராஜபாஷையை மலேயாளமாக ஏற்படுத்தினர். இவர் உபயோகித்த எழுத்துவட்டெழுத்து. 18-ம் நூற்றாண்டுவரையில் வழங்கிற்று.

மத்துவாச்சாரியார்.—1171-ம் ஆண்டில் ஆனந்த தீர்த்தர் என்கிற மத்துவ மதஸ்தாபகர் உடுப்பியில் பிறந்தார். இம்மதத்தில் மற்றையவைகளில்விட பக்திமார்க்கம் அதிக பலங்கொண்டிருக்கிறது. இவர் பல வடமொழி நூல்கள் இயற்றினர். இவர் சிஷ்யருக்கு துவைதிகளென்றும், மாத்துவர் என்றும் பெயர்.

---

# XII. முகம்மதியர் ஆட்சி நாட்டில் நிறைந்த காலம்.

## (1290—1565)

### 1. வட இந்தியா.

அலாஉத்தீன். (1294—1316)—அலாஉத்தீன் கல்ஜீ 1294 இல் சுல்த்தானன். இவன் பலபேர்களைக் கொன்முன். 1298 இல் கூர்ஜ்ஜர அரசன் கர்ணராஜாவை தோற்கடித்து இஸ்லாமானவர் அல்லாதவரை ஆயிரக் கணக்காய்க் கொன்முன்: 20,000 ஸ்திரீகளைக் கைதி செய்தான். அவர்களில் கமலாதேவி என்னும் மகாராணி வெகு அழகாய் இருந்தபடியால், அவளை மணம்புரிந்தான். அன்றியும் சோமநாதத்தில் இருந்த விக்கிரகத்தை எடுத்துக்கொண்டுபோனன். அது சிலாவிக்கிரகம், பளிங்கு போல் மெருகு செய்தது. அதன் முகம் பேசுவதுபோல் தோன்றும். அதன் தலையில் தங்கத்தால் ஆய், மாணிக்கங்கள், முத்துக்கள் முதலியவை இழைத்த நகைகளும், பூணூல் இரத்தினம் பதிந்தும் இருந்ததால் நவமணிகள் ஒளியால் தங்கத்தின் பசுமை கண்ணிற்கு அகப்படாமல் பிரகாசித்தது என்று ஒரு முகம்மதியன் எழுதியிருக்கிமுன்.

1303-இல் சித்திரக்கோட்டை (சித்தூர்) என்கிற இராஜபுத்திரர் தலைநகரில் பீமசிங்கன் மனைவி பத்மினி என்பவள் மிக அழகியவளைப் பெறவேண்டுமென்று ஆசை கொண்டு, அந்தக்கோட்டையை முற்றுகைபோட்டான். இருபதுமுறை தாக்கியும் கோட்டையைப் பிடிக்கவில்லை. 21-ம் தடவை கோட்டையின் ஒரு மூலையை இடிக்கவே,

கோட்டை அவன் கையில் அகப்பட்டுப்போகுமென்று நிச்சயித்து, உள்ளிருந்த இராஜபுத்திர மாதுகள் எல்லோரும் அலங்கரித்துக்கொண்டு. ஒரு குகைக்குள்போய், கதவைச் சாத்திக்கொண்டு தீ மூட்டி, எரிந்திறந்தார் இவ்வாறு இரப்பதற்கு ஜௌஹர் என்று பெயர். புருஷர்களோ, மஞ்சள் வேஷ்டிகள் கட்டிக்கொண்டு, கோட்டைக்கு வெளியில்வந்து, அனைவரும் இறக்குமளவு போர் புரிந்து மரித்தனர். குலம் நிலைநிற்க, ஒரு சிசுவை மாத்திரம் காட்டிற்கு அனுப்பினர். அலாஉத்தீன் ஊருக்குள் போய்ப்பார்க்க, சுடுகாடுபோலிருந்தது.

அலாஉத்தீனைப்பற்றிப் பல முகம்மதியர் காவியங்களும் எழுதினார்கள் அதில் ஒருவன் கஜ்னிமுதல் இந்திய சமுத்திரக்கரைவரையில் இஸ்லாம் பரவியிருந்தது என்று எழுதியிருக்கிறான்.

**தென்னிந்தியாவை முகம்மதியர் ஜயித்தது.**— 1294-ம் வருஷத்தில் அலாஉத்தீன் தக்ஷிணத்துக்குப் படையெடுத்து வந்தான். அப்போது மராட்டிய நாட்டிற்கு ஸேயூனதேசம் என்று பெயர். அங்கே யாதவ குலத்தரசர் ஆண்டார். அவர்கள் பலபண்டிதர்களை ஆதரித்தார். அவர் தலைநகர் தேவகிரியில் ஆண்ட அரசன் இராமசந்திரன். அலாஉத்தீன் அதை முற்றுகைபோட்டுப்பிடித்து, பெருஞ் செல்வம்பெற்று, ஒவ்வொரு வருஷமும் கப்பம் கட்டவேண்டுமென்று ஏற்பாடு செய்து திரும்பினான். இந்தக் கப்பத்தை இராமசந்திரன் சரிவரக் கட்டாததால் 1307-ம் வருஷத்தில் அலாஉத்தீன் தன் சேனாபதி மலிக்காபரை பெருஞ் சைன்னியத்துடன் அனுப்பினான். வரும்வழியில் கமலாதேவி மகள் தேவளதேவியை, எலாபுரக்குகைக் கோயிலிலொளிந்திருக்கும்போது, மலிக்காபர் சிறை செய்துத் தாயிடம் அனுப்

பினன். தேவளதேவியை அல்லாஉத்தீன் மகன்கிஜர்கானுக்குக் கல்லியாணம் செய்தார். பின்பு மலிக்காபர் இராமசந்திரனிடம் கப்பம் பெற்று, தெலுங்குநாட்டுக்குச் சென்று, இரண்டாம் பிரதாபசந்திரன்மேல் போர்செய்து பெரும் கப்பம் பெற்றான். பின்பு துவார சமுத்திரத்தில் ஹொய்சளரைத் தோற்கடித்தான். அதன்பின் மதுரை போய் தங்கவிமானமுள்ள கோயிலை இடித்து, பின் இராமேசுவரத்தில் ஒரு மஜீது கட்டினன். திரும்புமுன் மதுரையிலும், சமயபுரத்திலும் சுல்த்தான்களை நியமித்துத் திரும்பி தெஹிலி போய்ச்சேர்ந்தான். இந்தியாநாடு முழுவதும் முகம்மதியர் ஆட்சியில் சென்றது.

முகம்மது துக்லக்ஷஹ (1351—1381).—இவன் தகப்பனைக்கொன்றுவிட்டு 1325-இல் சுல்த்தானனன். முகம்மதிய ஆசாரப்பிரகாரம் நடந்தவன். படிப்பில் மிக உயர்ந்தவன், ஆனல் மனிதரைக் கொல்வதில் மிகப்பிரியமுள்ளவன். செம்பு நாணயங்களுக்கு வெள்ளிநாணயமவ்வளவு விலைவைத்து வெளியிட்டான். உடனே ஜனங்கள் தாமே செப்பு நாணயங்களைச் செய்து வெள்ளிநாணய விலைக்கு விற்க ஆரம்பித்தார். வெகு குழப்பமுண்டாயிற்று. உடனே ஊரிலுள்ள செம்பு நாணயங்களையெல்லாம் வெள்ளிநாணய விலைக்கு வாங்கினன். இதனல் அதிக நஷ்டமடைந்தான். தேவகிரியைப் பிடித்து அதற்கு தௌலதாபாத் என்று பெயரிட்டு, அது இந்தியாவுக்கு நடுவிலிருந்ததால் அதைத்தலைநகராக்கி, தெஹிலிநகர் வாசிகளெல்லாரையும் அங்கேபோகக் கட்டளையிட்டான். ஊரில் நாய், பூனை யில்லாமல் புறப்பட்டு, வழியில்பட்ட கஷ்டம் சொல்லமுடியாது. ஒருவன் தேவகிரிக்கு நடந்துபோனபோது உடலெல்லாம் துண்டு துண்டாய் உதிர்ந்து, ஒரு கால்மாத்திரம் தௌலதாபாத்போய்ச்சேர்ந்தது. தெஹிலி

யை மறுபடியும் தலைநகராய் ஏற்படுத்தி, மற்றைய ஊராரை தெஹ்லியில் குடியிருக்கச் செய்தான். வரிகள் பலபோட்டு, ஜனங்கள் இடுப்பை ஒடித்தான். பஞ்சம் உண்டாய், ஜனங்கள் தோலைச்சமைத்துத் தின்ன ஆரம்பித்தார்கள்.

இக்காரணங்களால், கலகங்கள் பிறந்தன. ஒவ்வொரு மாகாணமாய் தெஹ்லி சுல்த்தான் ஆட்சியிலிருந்து தப்பிப்போயிற்று. தெஹ்லி இராஜ்ஜியம் சுருங்கிப்போயிற்று

பிருஜ்ஷஹ (1351—1381).—முகம்மது துக்லக்குக்கு அப்புறம் சுல்தானானான். இவன் வரிகளைக் குறைத்து கால்வாய்கள் வெட்டி, தருமவைத்திய சாலைகள் பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்தினான். ஆனால் ஹிந்துக்கள் மேல் தலைவரிபோட்டு, பிராமணர்களை மிக உபத்திரவப்படுத்தினான்.

வரவர தெஹ்லி சுல்த்தான்கள் பலம் குறைந்தது. 1400-ம் வருஷத்தில் தீமூரிலங் (என்றால் நொண்டித் தீமூர்) என்னும் துருக்கன் படையெடுத்து வந்து, தெஹ்லியை அழித்து, ஹிந்துக்களை ஆயிரக்கணக்காய்க் கொன்று, கொள்ளையடித்தான். தெஹ்லியின் மகிமை குறைந்தது. கூர்ஜ்ஜாரம், மாளவம், வங்காளம், உத்கலம், முதலிய நாடுகளில் பற்பல சுல்த்தான்கள் கிளம்பினார்கள்.

**மோகாலாய் இராஜ்ஜியம் வந்தவகை.**-1525-இல் பாபுர் என்னும் கபூலரசன் தெஹ்லிசுல்த்தானை பாணிப்பத்தில் தோற்கடித்தான். பாபுருடன் சித்தூர் இராஜபுத்திரவீரன் சங்கிராமராஜா போர்செய்யப்போனான். சங்கிராமராஜா முகம்மதியரை 16 போர்களில் ஜயித்து, 80 காயங்கள் உண்டு, ஒரு கண், ஒருகை, ஒரு கால் இல்லாதவீரன். ஆனால் பாபுர் ஸிக்ரி என்னும் ஊரில் 1527

இல் சங்கிராமராஜாவை எதிர்த்து வேகமாய் குதிரை வீரரைக்கொண்டு சூழ்ந்து தோற்கடித்தான். பாபுர் 1530-இல் இறந்தான். அவன் மகன் ஹுமாயூன் பாபுருடைய இராஜ்ஜியத்தின் இந்தியாவில் இருந்த பாகத்துக்கு அரசனுனன். அப்போது குஜராத்து சுல்த்தான் பாகதூர்ஷஹ என்பவன் மேவார் மேல் படையெடுத்துச் சென்றான். அப்போது மேவார் மகாராணி கர்ணுவதி ஹுமாயுனுக்கு ரக்கி (அதாவது இரட்சிக்கவேண்டுகோளாய்த் தன் கைவளையை) அனுப்பினன். அதற்காக பஹாதுர் ஷஹ உடன் போர் செய்யப்போனுன். அப்போது ஷெர்கான் என்பவன் தெஹிலி ஆக்ராவைப் பிடித்துக் கொள்ள ஹுமாயூன் காபூலுக்கு ஓடிப்போக வேண்டியிருந்தது. போகும் வழியில் அக்பர் ஹுமாயூனுக்குப் பிறந்தான். பிறந்த போது கையில் ஒரு கஸ்தூரிக்காய் ஒன்றே இருந்தது. அதை உடைத்து வந்தவர்களுக்கு 'இந்தக்கஸ்தூரி வாசனை போல் என் மகன் பெயர் நாடெல்லாம் பரவவும்' என்று சொல்லிக்கொடுத்தான். ஷெர்ஷஹ 1540முதல் 1545 வரையில் ஆண்டான். ஷெர்ஷஹ நிலங்களுக்கு நியாயமாய்த் தீர்வை போட்டு கால்வாய்கள், சத்திரங்கள் கட்டிவைத்தான். குதிரை அஞ்சல்கள் நியமித்து தபால் ஏற்படுத்தினன். அவன் இறந்தபின் ஹேமு என்ற தெஹிலிவைசியன் விக்கிரமாதித்தியன் என்ற பட்டம் தரித்து ஆள ஆரம்பித்தான். அப்போது ஹுமாயூன் திரும்பி வந்து தெஹிலியையும் ஆக்ராவையும் கைப்பற்றினன் (1555). உடனே ஹுமாயூன் இறந்தான். அவன் மகன் ஜலாலுத்தீன் அகபர், சிறுவயதிலே அரசனுன். தன் மந்திரி பைராம்கான் உதவியைக்கொண்டு, ஹேமுவை தோற்கடித்து, ஆக்ரா, தெஹிலி, இரண்டு ஊர்களையும் கைப்பற்றினன்.

**வட இந்தியாவில் பிறந்த புது சமயங்கள்.**— இராமானுஜ, மத்வமதங்கள் வடஇந்தியாவில் பரவின. ஜனங்களுக்கு விஷ்ணுபக்தி அதிகரித்தது. 14-ம் நூற்றாண்டில் இராமானந்தன் என்பவன் இராமபூஜை கிருஷ்ணபூஜை இரண்டையும் ஜனங்கள் செய்யும்படி உபதேசித்தான். அவன் ஹிந்தியிலே உபதேசம் செய்தான்; பல சாதியாரையும் சிஷ்யராகச் சேர்த்துக்கொண்டான். அவன் முக்கிய சிஷ்யன் கபீர் என்னும் முகம்மதியன்; உடை நெய்பவன். இராமானந்தன், கபீர்தாஸ் இவ்விருவரும் பாடிய ஹிந்திப்பாட்டுகள் இப்போது இந்தியா முழுவதும் பாடுவார். பின்பு உத்கலதேசத்தில் கௌரங்கன் என்றும் சைதன்யன் என்றும் பெயருள்ளவன் இன்னொரு முறை ஏற்பாடு செய்தான். அது கிருஷ்ணனைப் பற்றிப்பாட்டுகள் பாடுவதும், கூத்தாடுவதும், பரவசமாய்க் கீழே விழுந்து புரள்வதும் தான். சைதன்னிய மதத்தோருக்கு உத்கல பங்காளங்களில் வைஷ்ணவர்களென்று பெயர். தென்னாட்டு வைஷ்ணவர்களை அவர் சாம்பிரதாயிகள் என்பர். சைதன்னியமதாசாரியர்களுக்குக் கோஸாயிகள் என்று பெயர். நானக் (1465-1489) என்பவன் மற்றொரு மதம் ஏற்படுத்தினான். இது முகம்மதிய, இந்து சமயங்களை சமரசப்படுத்தச்செய்தது. கடவுள் ஒருவரே, அவரை அல்லாவென்றாலும் சரி, இராமனென்றாலும் சரி என்றும், கருமமார்க்கம் பயனற்றதென்றும், கடவுளைத் தியானம் செய்வதே சரியான தொழுமுறை என்றும் உபதேசித்தான். இம்மதத்தைச்சேர்ந்தவர்க்கு சிக்கர் என்று பெயர். 16-ம் நூற்றாண்டில் துளஸிதாசர் இராமசரித்மானஸ் என்ற அருமையான ஹிந்தி இராமாயணம் ஒன்று எழுதினார். அதிலிருக்கும் பாடல்கள் பலவற்றைப் பாடுவதால் இராமபக்தி மிகுந்தது.

இந்தப்புதுச்சமயங்களை ஏற்படுத்தினவர்கள் கி. மு. 6-ம் நூற்றாண்டில் பலசமயங்களை ஏற்படுத்தினவர்களைப் போல் சன்னியாசிகளே. இந்தப்பக்திமார்க்கங்களாலும், முகம்மதிய மதத்தாலும் வருணாச்சிரமதருமம் குறைபு மென்றும், அரசர் ஆதரணை இல்லாததாலும் பிராம்மண ஆசாரியர் பழைய சாஸ்திரங்களை விவரித்தெழுதி, ஆசார நியமங்களை பலப்படுத்தி, கட்டுப்பாட்டுகளை அதிகமாய்ச் செய்தார். இந்தக்காலத்தில் பலர் தருமசாஸ்திரங்கள் எழுதினார்.

## 2. தக்ஷிணம்.

பஹ்மனி இராஜ்ஜியம் (1347—1526) :—முகம்மது துக்லக்கின் உத்தியோகஸ்தன் ஹஸன்கங்கு என்பவன் ஒருவன் இருந்தான். அவன்தௌலதாபாதில் (1347) சுல்த்தான் ஆய் குல்பர்காவைத் தலை நகர் செய்தான். அவன் வமிசத்துக்குப் பஹ்மனி வமிசம் என்று பெயர். பஹ்மனி இராஜ்ஜியத்துக்கும் விஜய நகர இராஜ்ஜியத்துக்கும் அடிக்கடி போர் நிகழ்ந்தது. இந்த வமிசத்து அரசர் குல்பர்காவிலும், பிதர் நகரத்திலும் பற்பல அழகிய கட்டிடங்கள் கட்டினார்கள். இந்த வமிசத்தில் ஹுமாயூன் என்பவன் 15ம் நூற்றாண்டில் சுல்த்தானானான். இவன் மந்திரி மஹ்மூதுகாவன் என்பவன். மஹ்மூது காவன் அவ்வளவு நல்லவன் மந்திரிகளில் அகப்படமாட்டார். மிக்ககற்றறிந்தவன்; அடக்கமுள்ளவன்; தன் நன்மையைக் கவனியாமல் பிறர் நன்மைக்காகவே உழைப்பவன்; பலபள்ளிக்கூடங்கள் ஏற்படுத்தினான்; தருமவைத்தியசாலைகள் நியமித்தான், ஏழைகளை ஆதரிக்க கணக்கற்ற பணம் செலவிட்டான். அழகியவையும், எதிரி பற்றமுடியாத பலமுள்ளவையுமான கோட்டைகள் கட்டினான். அவன் மந்திரியாய் இராஜ்ஜியபரிபாலனம் செய்யும்போது

பஹ்மனிகுலம் சிறந்தோங்கி கீழ்கடல் முதல் மேற்கடல் வரையில் அவர் செல்வாக்கு பரவியது. அவன் செய்த ஏற்பாடுகளும், வரி வசூல் செய்வதைப்பற்றிச் செய்த முறைகளும் இன்னமும் செவ்வையாய் நடக்கின்றன. ஹுமாயூனுக்குப் பின் வந்த முகம்மத்ஷஹ (1463—1482) காஞ்சீபுரத்தைக் கைப்பற்றிக் கொள்ளையடித்தான். ஒரு நாள் ஒரு பிராமணன் கல்வி கற்று ஒழுங்காய் நடப்பவனை ஒரு காரணமில்லாமல் கொன்றான்; இந்தப் பாவத்தால் இவன் குலத்துக்கு அழிவு வந்து சேர்ந்தது என்று ஒரு முகம்மதியன் எழுதியிருக்கிறான். 1481 இல் மஹ்மூத்காவனைக் கொல்லக்கட்டளையிட்டான். இது முதல் பஹ்மனி ராஜ்ஜியம் நிலைகுன்றி 40-வருஷத்துக்குள் 5 சிறு இராஜ்ஜியங்களாக சிதறிப்போயிற்று. இவைகளுக்கு பிரார், அஹ்மத்நகர், பிஜாபூர், பிதர், கோல்கொண்டா என்று பெயர். இந்த சிறு முகம்மதிய இராஜ்ஜியங்கள் 100-வருஷங்கள் வாழ்ந்தன. பின்பு மொகலாய இராஜ்ஜியத்தில் கலந்து போயின.

முஹம்மதியர் தட்சிணத்தில் ஆண்டபோது ஹிந்துக்களை அடிக்கடி கொன்றாரென்றும், இந்துக்களை இஸ்லாமில் சேரும்படி தொந்தரவு செய்து பலரைக் கலந்து கொண்டாரென்றும் முஹம்மதிய ரெழுதின சரித்திரங்களில் சொல்லியிருக்கிறார்கள். இது சொன்ன அளவு உண்மையல்லவென்று தோன்றுகிறது. 1470—74 இல் தென்னிந்தியாவில் யாத்திரை செய்த ருஷிய வியாபாரி, நிகிதின் என்பவன் நாட்டில் இருக்கக்கூடிய ஜனங்களை விட அதிகமாக பிரஜைகள் உண்டு; செல்வவந்தர் வெள்ளிப் பல்லாக்குகளில் சவாரி செய்வார் என்று எழுதியிருக்கிறான். அன்றியும் முஹம்மதியருடன் இந்துக்கள் கலந்து பழகியதால் அவரிடத்திலிருந்து மரியாதையான

நடக்கை கற்றுக்கொண்டார். முஹம்மதியர் ஆண்ட இடங்களிலெல்லாம் இந்துக்களெல்லாம் மிக மரியாதையாய் நடப்பார். அன்றியும் தென்னிந்தியாவில் நூற்றுக்குப் பத்துப்பேர்தான் இஸ்லாமானவர். இந்துக்களை உபத்திரவப்படுத்தி இஸ்லாமில் சேர்த்திருந்தாரானால் முஹம்மதியர் இன்னும் வெகு அதிகமாயிருப்பார். அன்றியும் தக்ஷிணதேசத்தில் இந்துக்களும் இஸ்லாமானவரும் சேர்ந்து உற்சவங்கள் நடத்துவதும், இஸ்லாமானவர் இந்து யோகிகளுக்கும், இந்துக்கள் முஹம்மதிய பீர்களுக்கும் சிஷ்யராவது அடிக்கடி பார்க்கலாம். அன்றியும் இந்துக்கள் பலரை முஹம்மதியர் ஒவ்வொரு வருஷம் கொன்றதாக ஒரு முஹம்மதியன் எழுதியிருக்கிறான் இதுவும் நம்ப முடியாதது. ஏனென்றால் பஹ்மனி சுல்த்தான்களும் விஜயநகர அரசரும் யுத்தத்தில் வீரரல்லாதவரைக் கொல்லக்கூடாது என்று கட்டுப்பாடு செய்துகொண்டு அப்பிரகாரமே நடத்தினர். அன்றியும் இந்து வீரர் முஹம்மதியரிடத்திலும், முஹம்மதிய வீரர் இந்துக்களிடத்திலும் வேலைக்கு அமர்ந்தார். மராட்டியர் பலர் பஹ்மனி சைன்னியத்தில் சிறு வேலை, பெரு வேலைகளில் அமர்ந்தார். பஹ்மனி சுல்த்தான் முதல்வன் ஹஸன் என்பவன் கங்கு வென்னும் பிராமணனை மந்திரியாய் நியமித்தான். அதுமுதல் தக்ஷிண முகம்மதிய இராஜ்ஜியங்களில் மந்திரிகள் அதிகமாய் இந்துக்களே. அஹ்மத் நகர், பிஜாப்பூர், இராஜ்ஜியங்களில் இராஜாங்கக் கணக்கு, வியவஹாரம் எல்லாம் மராட்டி பாஷையிலே வைத்திருந்தார். ஒவ்வொரு கிராமத்துக்கும் ஒரு இந்து கிராமாதிகாரி, ஒவ்வொரு ஜில்லாவுக்கும் ஒரு தேசாதிகாரி. தேசாதிகாரி வரும்படியில் 10இல் ஒரு பங்கு சர்தேச்முகி என்று எடுத்துக்கொண்டு, அதைக்கொண்டு

தன் சம்பளமும், ஜில்லா பரிபாலனச்செலவும், சுல்த்தானுக்கு யுத்தத்துக்கு வேண்டிய சேனையும் அனுப்புவான். மற்றைய பெரும் உத்தியோகம் செய்வோருக்கு சுல்த்தான் ஜாகீர் கொடுப்பதுண்டு. தக்ஷிண சுல்த்தான் ஐவரும் கட்டிடங்கள் பல கட்டி நாட்டை அழகில் சிறக்கச் செய்தார்கள்.

## 3. விஜயநகர சம்ஸ்தானம். (1336—1565).

**தென்னிந்தியநிலை**:—தென்னிந்தியா எப்போதும் வட இந்தியாவிலிருந்து பிரிந்து தனியே இருந்தது. வடக்கில் ஆரிய முறைகள் பரவி வெகுகாலம்வரையில் தெற்கில் வரவில்லை. பின்பு ஆரிய முறைகள் தெற்கிலும் பரவினபின்பு, வட இந்தியாவை ஹூணர் முகம்மதியர் படையெடுத்து அழித்தபோது ஆரிய முறைகள் தெற்கே கெடாமல் இருந்ததுமன்றி, திரி மத ஆசாரியார்கள் அவைகளைச் சீர்செய்ய, தெற்கிருந்து வேதாந்தம் வடக்குக்குப் பரவியது. அன்றியும் 14ம் நூற்றாண்டில் விஜய நகர சம்ஸ்த்தானம் என்ற சிறந்த இராஜ்ஜியம் பிறந்து இஸ்லாம் கிருஷ்ணை நதிக்குத் தெற்கே பரவாமல் தடுத்த சுவர்போலாயிற்று.

**விஜய நகரம் ஸ்தாபித்தவர்கள்**:—1336-இல் ஹரிஹரன், புக்கன் என்று இருவர் சகோதரர், கன்னட தேசமிருந்து வந்து, மாதவ சாயனர் என்ற இரு பிராமணப்புலவர் சகாயத்துடன் ஸ்ரீ இராமன் வனவாசம் செய்த பம்பாவுக்கருகில் துங்கபத்திரைக் கரையில் வித்யா நகரம் (விஜயநகரம்) என்கிற ஊரைக்கட்டி, ஆட்சியை நிலை நிறுத்தினர். வெகு வேகமாய் நாளொருமேனியாயும் பொழுதொருவண்ணமாயும் இராஜ்ஜியம் வளர்ந்தது. சில வருஷங்களுக்குள் பிற தமிழ் நாடு, தெலுங்கு நாடு, கன்னட நாடு முழுவதும் விஜயநகர இராஜ்ஜியத்தில் சேர்ந்தன.

புக்கன்மகன் கம்பன் காஞ்சீபுரத்தை இளவரசனு யாண்டான். கொப்பணார்யன் என்கிற பிராமண சேனாதிபதியை ஸ்ரீரங்கத்துக்கு அனுப்பினான். அங்கே அதற்கு 40 வருஷத்துக்குமுன் மலிக்காபர் படையெடுத்து வந்து மதுரையிலும், சமயபுரத்திலும் சுல்த்தான்களை நியமித்துப் போயிருந்தான். சமயபுர சுல்த்தான் ஸ்ரீரங்கம் கோயிலை அழிக்க ஸ்ரீரங்கநாத விக்கிரகத்தை முதலில் திருமயத்திலும், பின்பு மைசூரில் மேல்கோட்டையிலும், பின்பு திருவேங்கடத்திலும் ஒளித்துவைத்திருந்தார். சமயபுரம் சுல்த்தானை கொப்பணார்யன் தோல்வியடித்து விரட்டவே ஸ்ரீரங்கநாத விக்கிரகத்தை தேசிகர் என்று பட்டம் உண்டான வெங்கடநாதாச்சாரியார் கொண்டு வந்து, கோயிலில்பிரதிஷ்டை செய்தார். கோயில் மதிளில் இதைப்பற்றி சுலோகம் வெட்டியிருக்கிறது.

மாதவாச்சாரியரும், சாயனாச்சாரியரும் மகா வித்துவான்கள். வேதாந்தங்களுக்குப் பாஷியமும், வடமொழியிலுள்ள ஒவ்வொரு சாஸ்திர நூற்களைத் திரட்டி எடுத்துப் பற்பல புஸ்தகங்களும் எழுதினார்கள். மாதவாச்சாரியர் சன்னியாசம் வாங்கிக்கொண்டு சிங்கேரி ஆதி சங்கராச்சாரியர் மடத்துக்கு அதிபதியாய் மடத்தைச் செவ்வையாய்க் கட்டுவித்து சாரதாபீடமும் ஏற்படுத்தினர். இந்த மடம் அத்துவைத வேதாந்திகளுக்குத் தலை மடம்.

1390—1406 இல் ஆண்ட இரண்டாம் புக்கராயன் விஜயநகர பட்டணத்தை மலைகளைச்சேர்த்து பெரியதாய் கட்டினான். துங்கபத்திரை நதிக்குக் குறுக்கே அணை போட்டு 15 மைல் நீளம் மலையைக்குடைந்து கால்வாய்கள் ஏற்பாடு செய்து ஊருக்குக்குடிக்க நீர்கொண்டு வந்தான். நீரோடும் கற்குழாய்கள் உலோகத்தாலானவைபோல் மெருகிட்டுப் பிரகாசித்தன.

1421—1448 இல் பிரௌடதேவராயன் ஆண்டான். அப்போது கொந்தி என்கிற இத்தாலியனும், ரஜ்ஜாக் என்கிற பாரசிகனும் விஜயநகரத்துக்குப் போனார்கள். விஜயநகரத்தின் சுற்றளவு 60 மைலென்றும், அந்த இராஜ்ஜியம் இந்தியாவிலுள்ளவைகளில் மிக உயர்ந்ததென்றும் வெகு அழகான தேர்த் திருவிழாக்கள் அவ்வூரில் நிகழ்ந்தன என்றும் காமன் பண்டிகை வெகு சிறப்பாய் இருந்ததென்றும் கொந்தி எழுதியிருக்கிறான்.

ரஜ்ஜாக் என்பவன் பின் வருமாறு சொல்லியிருக்கிறான்.—உலகத்திலெல்லாம் விஜயநகரத்தைப் போன்ற பெருமையான ஊரைக்கண்டதுமில்லை, கேட்டதுமில்லை. ஊரைச் சுற்றி ஏழு மிகப் பலமான மதிள்கள் உண்டு. தென் கோபுரவாயிலிலிருந்து வடக்குக் கோபுரவாயிலுக்கு 8 மைல் தூரம். ஊரில் மக்கள் பலர் வாழ்ந்தார். நகரத்தின் வனப்பை வருணிக்க இயலாது. நாட்டில் எல்லோரும், பிரபுக்களானாலும் சரி, காது, கழுத்து, கை, புஜம், கால்களில் நகைகள் போட்டுக் கொண்டிருக்கிறார்கள். விஜயநகர ராஜ்ஜியத்தில் ஜனங்கள் கொடுக்கவேண்டிய வரி அதிகம்தான். அரசர் வெகு பலமான யானைகள் கட்டிவைக்க கல்லால் அறைகள் பல கட்டினார்கள். அன்றியும் தஸரா உற்சவம் நடந்தபோது பெரும் மைதானத்தை சிங்காரித்து, அங்கே பல யானைகளைச் சேர்த்து வைத்தார்கள். அவைகள் அங்கு நின்றது கடலில் அலை அடிப்பது போன்றிருந்தது. சில கொட்டகைகள் எப்பொழுதும் சுற்றிக்கொண்டிருக்கும். சுற்றிவரும்போது பற்பல அறைகள் மாறி மாறி எதிரில் வரும். அரசன் சிம்மாசனம் மிகப்பெரியது. தங்கத்தால் செய்து நவரத்தினங்கள் கணக்கில்லாமல் இழைத்தது. சிம்மாசன மேடை ஒரு கத்தி அவ்வளவு பருமனுள்ளது, 10 கஜம் (21 அடி)

சதுரம். அதன் பக்கமும் மேற்புறமும், கட்டித் தங்கத்தகடுகளாலானவை. கல்லிழைத்தவை. தங்க அணிகள் தைத்தவை. இந்த மாதிரி 4 பீடங்களுண்டு. ஒவ்வொரு குதிரையின் அணிகளும் ஒரு பட்டணத்தை விட விலையுயர்ந்தவை என்று மற்றொருவன் சொல்லியிருக்கிறான்.

கிருஷ்ணதேவராயன் ( 1509—1525 ):—விஜயநகர அரசர் எல்லோரிலும் பெரியவன் கிருஷ்ணதேவராயன். இவனுதவியால்தான் போர்த்துகலார் கோவாபுரத்தில் இராஜ்ஜியம் ஏற்படுத்தினார்கள். அவர்கள் குதிரைகள் இறக்குமதி செய்து இவனுக்கு விற்றார்கள்.

இந்த அரசன் காலத்திலும் வியாபாரம் செவ்வையாய் நடந்தது. மேற்கு சமுத்திரத் துறைமுகம் பத்க்கல். அங்கிருந்து இரும்பு, மிளகு முதலிய திரவியங்கள் கடுக்காய் முதலிய மருந்து சாமான்கள் ஏற்றுமதியாயின; இறக்குமதியானவைகள் குதிரையும், முத்தும்.

கிருஷ்ணதேவராயன் மற்றைய எல்லா மன்னரைவிட அதிகமாய் தென்னாடெல்லாம் கோயில்கள் கட்டி நிறப்பினான். இவன் காலத்துக்கோயில்களுக்கு அடையாளங்கள் (1) உயர்ந்து சித்திரவேலைகள் நிரம்பிய கோபுரங்கள், (2) நூற்றுக்கால், ஆயிரக்கால் மண்டபங்கள் (3) கல்லால் கட்டின பிராகாரங்கள், (4) யானை, யாளி, குதிரை, முதலியன செதுக்கின ஸ்தம்பங்கள். இப்போது தென்னிந்தியாவில் பூஜை நடந்துகொண்டுவருகிற கோயில்களில் மூன்றில் இரண்டு பங்கு கிருஷ்ணதேவராயனாவது வேறு விஜயநகர பெருமன்னனராவது, குறு மன்னர்களாவது கட்டியவைகள் கிருஷ்ணதேவராயன் நீர்ப்பாய்ச்சலுக்காக பலகால்வாய்கள் வெட்டினான். விஜயநகரத்தில் ஒரு பெரிய ஏரியும், ஒரு பிரம்மாண்டமான நரசிம்ம விக்கிரகமும் செய்வித்தான்.

பாயெஸ் என்கிற போர்த்துகல்காரன் 1522-ம் ஆண்டில் விஜயநகரத்தைப்பார்த்து பின் வருமாறு எழுதியிருக்கிறான்:—இந்த நகரத்தில் எத்தனை மனிதர் இருக்கிறாரென்று சொன்னால் படிப்பவர் நம்பமாட்டார் என்று சொல்ல எனக்கு இஷ்டமில்லை. உலகத்தில் இந்த பட்டணத்தில் போல், மனிதர்க்கு வேண்டிய பொருள்கள் எங்கேயும் சேகரித்து வைத்திருக்க முடியாது. பெரிய கோபுரவாயிலுக்கு எதிரில் 4 பெருந்தூண்கள் தங்கத்தகட்டால் மூடியவை யுண்டு; இரண்டில் தங்கம் உரிந்து போயிற்று. அரண்மனையில் ஒரு அறை தந்தத்தாலானது இருக்கிறது. சுவர்கள், உத்திரங்கள், தூண்கள் எல்லாம் தந்தம், அவைகளில் தந்தத் தாமரைப்பூக்கள் மாட்டியிருந்தது. இவ்வளவு அழகியதும் விலையுயர்ந்ததுமான அறைகள் உலகில் எங்கேயுமில்லை. விஜயநகரச் சேனையில் பத்து லட்சத்துககதிகமான வீரருண்டு. நாட்டில் திருட்டு கிடையாது.

கிருஷ்ண தேவராயன் பெரிய தெலுங்குக்கவி. ஆமுக்தமால்பதா என்ற காவியம் ஒன்று செய்திருக்கிறான். அவன் பல கவிகளை ஆதரித்தான். அவரில் முக்கியமானவன் அலசான பெத்தன்னா, மனுசரித்திரம் எழுதியவன். கிருஷ்ண தேவராயன் இறந்த பின் இராமராஜன் என்கிற மந்திரியே இராஜ்ஜியத்தில் பிரபலமாய் எல்லாக் காரியங்களையும் பார்த்து வந்தான். இராமராஜன் பெரும் வீரன். பலவாறு முகம்மதியர்களைத் தோற்கடித்தான்.

அதனால் தக்ஷிணத்து சுல்த்தான்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து யுத்தம் செய்ய வந்தார்கள். கிருஷ்ணை நதியின் கரையில் உள்ள தலைக்கோட்டைக் கிராமத்துக்கு 30 மைல் தூரத்தில் போர் நடந்தது. இராமராஜன் 90 வயதானவனானலும் போர்முனையில் சிம்மாசனத்தில் மேல்

உட்கார்ந்துகொண்டு போரை நடத்தினன். அப்போது எதிரிகளின் யானை வெறிபிடித்து அவனைத்தாக்கி கீழே தள்ளிவிட்டது. எழுந்து நிற்குமுன் இராமராஜனை முகம்மதியர் பிடித்து அஹ்மதநகர் சுல்த்தானிடம் கொண்டுபோக, அவன் கத்தியை உருவி இராமராஜன் கழுத்தைவெட்டினன். வெட்டி ஒரு கோலில் குத்தி உயர்த்திக்காட்டவே விஜயநகர வீரர் மனங்கலங்கி ஓடத் தலைப்பட்டார். முகம்மதியர் விரட்டிக் கொண்டுபோய் விஜயநகரத்தை அழித்தார். 5 மாதகாலம் ஊரை உடைத்துக் கொளுத்தினார்கள். ஊரில் பின்பு நாய் நரிகள் தவிர வேறொரு உயிர்ப்பொருள்களுமில்லை.

தலைக்கோட்டைப் போரினால் சுல்த்தான்கள் இராஜ்ஜியம் அதிகமாகவில்லை. இராமராஜன் தம்பி திருமலைராஜன் விஜயநகரத்தைத் துறந்து பெனுகொண்டாவைத் தலைநகர் செய்தான். அவன் மகன் வெங்கடபதிராஜன் அதையும்விட்டு, சந்திரகிரியைத் தலைநகர் செய்தான். மற்றோர் இராமராஜன் மைசூர் அரசனானன். ஆனால் அவன் கீழாண்ட யாதவராஜ உடையார் 1578-இல் மைசூர் அரசாய் இப்பொழுது மைசூரை ஆளும் வமிசத்தை நாட்டினன். தஞ்சாவூரிலும், மதுரையிலும் விஜயநகரத்தார் கீழ் ஆண்ட நாயக்கர்கள் அந்த ஊர்களின் அரசரானார்கள். தஞ்சாவூர் நாயக்க அரசரை 17-ம் நூற்றாண்டில் சிவாஜிதகப்பன் ஷஹஜி தோற்கடித்து, அவ்வூரைப்பற்றி, மராட்டிய இராஜ்ஜியம் ஏற்படுமளவு ஆண்டான். மதுரை நாயக்க அரசர் மதுரையிலும் திருச்சினப்பள்ளியிலும் ஆண்டார். அவரில் பெரிய அரசன் திருமலை நாயக்கன். இந்த நாயக்க ராஜ்ஜியம் 18-ம் நூற்றாண்டில் சந்தாசாயபு காலத்தில் முகம்மதியர்வசமாய், பின்பு ஆங்கில ஆட்சியின் கீழ் சென்றது.

**பறங்கிகள் (போர்த்துகலார்).**—பண்டைய கால முதல் இந்தியாவுக்கும் ஐரோப்பாவுக்கும் நடந்துவரும் வியாபாரம் அரபியர் வழியாய் நடந்து வந்தது. பாக்தாதில் கலீபா சுல்த்தான்கள் ஆண்டபோது அரபியர் செல்வாக்கு உயர்ந்தது. இந்திய நாட்டுச் சரக்குகளை அரபியர் நாட்டு மார்க்கமாயும், கடல் மார்க்கமாயும் மத்தியதரைக் கடல்கொண்டு போவார். அங்கே வெனிஸ் நகரத்தார் அவைகளை வாங்கிக்கொண்டு தங்கள் கப்பல்களில் கொண்டுபோய் ஐரோப்பாவில் விற்று வெகு செல்வவான்களானூர். 14, 15, நூற்றூண்டுகளில் வெனிஸ் நிலைகுன்ற, போர்த்துகல், உலாந்தா, ஆங்கில நாடு ஆகிய இத்தேசத்தியர் கிழக்குத்திய வணிகம் செய்து, வெனிஸியரைப் போல் பணக்காரராக வேண்டுமென்று முயன்றூர். அவர்களில் இந்தியாவுக்கு முதல் முதல் வந்தவர் போர்த்துகலாரே. இவர்களுக்குப் பறங்கிகள் என்று பெயரிட்டார். போர்த்துக்கலிலிருந்து வந்தவருள் முதல்வன் வாஸ்கோடிகாமா. பறங்கிகள் அரபியருடன் போர்புரிந்தால்தான் வியாபாரம் தங்கள் கையில்வரும் என்று அறிந்து கப்பல் போர் செய்து, அவரைத் தோற்கடித்து, கோவாபுரத்தைப் பற்றிக்கொண்டு அவ்வூரில் தங்கள் ஆட்சியை நிலைநிறுத்தினூர். விஜயநகர் அரசர்களுக்கு வேண்டிய குதிரைகளை விற்றதனுல் இவருக்கு வேண்டிய உதவி அவ்வரசர்கள் செய்தார்கள்.

---

# XIII. மொகலாய் இராஜ்ஜியம்.

## (1556—1707)

---

### 1. பாத்ஷஹக்கள்.

---

#### அக்பர்.

இராஜ்ஜியவளர்ச்சி.—ஹேமு 1556-இல் இறந்த போது ஆக்ரா தெஹிலி என்ற இரண்டு ஊர்கள் தான் அக்பருக்கு உண்டு. அது முதல் ஊர் ஊராய்ப் பிடித்து, இராஜ்ஜியத்தைப் பெருக்கினன். முதலில் நடு இந்தியாவில் நுழைபவழியான குவாலியரையும், அஜமேர் என்னும் இராஜபுத்ர மாகாணங்களில் முக்கியமானதான தையும், கிழக்கே ஜான்பூரையும் பிடித்தான். 1561 இல் பஞ்ஜாப், மூல்த்தான், கங்கைபாயும் நாடு, குவாலியர், அஜ்மேர் வரையிலும் ஆண்டான். அப்போது காபூல் பாரசீகர் வசத்திலும், காச்மீரம், வங்காளம், பிஹார், உத்கலம், குஜராத், மாளவம், 5 தட்சிணமாகாணங்கள் இவை முகம்மதிய சுல்தான்கள் கீழும், இராஜபுதனம், நடு இந்தியா, விஜயநகர இராஜ்ஜியம் இவை ஹிந்து அரசர் கீழும், மேற்குக்கரையில் ஒரு சிறு துண்டு போர்த்து கலார்கீழும் இருந்தன.

அப்போது இந்தியாவையெல்லாம் தன் ஒருகுடைகீழ் கொண்டுவந்து, நாடு எல்லாம் ஒரு சமயமாய், ஜனங்களெல்லோரும் ஒன்று சேர்ந்து ஒரேமாதிரியாய் வாழ வேண்டுமென்ற அவாக்கொண்டான். அதற்காக நாட்டை முழுவதும் ஜயிக்க ஆரம்பித்தான். முதல் முதல் நடு இந்தியாவில் ஆண்ட துர்காவதி என்னும் இராணியுடன் போர்செய்து தோற்கடித்தான். பின்பு 640 இல் பப்ப

ராஜாகட்டி, இராஜபுத்திரரில் எல்லோரைவிட உயர்ந்த குலத்தாரான ஸிஸோதியர் ஆண்ட சித்திரக்கோட்டையைப்பற்றிக் கொண்டான். பற்றிக்கொள்ளவே, ஸிஸோதியர் அங்கிருந்து பாலைவனத்துக்கு நடுவில் உதயபுரம் என்ற ஊரைக்கட்டிக்கொண்டு போனர். 1573 இல் குஜராத்தும், 1576 இல் வங்காளமும், சேர, அக்பர் ஹிந்துஸ்தான முழுவதுக்கும் அரசனானன். 1581 இல் காபூலும், 1586 இல் காச்மீரமும், 1593 இல் சிந்தும், 1592 இல் உத்கலமும், 1594 இல் பலோசிஸ்தானமும் பற்றி, பின்பு தெற்கு நோக்கித் திரும்பினன். 1595 இல் பிராரைப் பிடித்துக்கொண்டான். அஹமத்நகரை முற்றுகைபோட சந்த்பீபி என்பவள் அக்பரையெதிர்த்து போர் செய்தாள். அக்பர் அவளைத் தோற்கடித்து, 1600 இல் கான்தேசத்தையும் பற்றிக்கொண்டான். காபூல் முதற்கொண்டு தட்சிணம் வரையில் உள்ள தன் இராஜ்ஜியத்தை 15 ஸுபாக்களாகப் பிரித்து ஆண்டான்.

ஜனங்களை ஒருங்கு சேர்க்க முயன்றது:—அக்பர் பட்டத்துக்கு வருமுன் முகம்மதியருக்கும் ஹிந்துக்களுக்கும் இருந்த பகை குறைந்து, இரு இனத்தாரும் சிநேகமாய் வாழ ஆரம்பித்தார்கள். இவரில் சிலர், ஒருவர் மற்றொருவர் பெண்களை மணம் புரிவது கூட நிகழ்ந்தது. இவர் அவர் நற்குணங்களை தெரிந்துகொள்ளத் தொடங்கினர்கள். புருஷரை இழந்த ஸ்திரீகள் மறுமணம் புரியாதிருத்தல் முதலிய ஹிந்து ஆசாரங்கள் முகம்மதியருக்குள் பரவிற்று. இருவருக்கும் கொள்கைகள் வித்தியாசமே ஒழிய, வேறொரு வித்தியாசமில்லாமல் வாழ்ந்தார்கள். இந்துக்கள் முகம்மதிய சுல்த்தான்கள் கீழும், முகம்மதியர் ஹிந்து அரசர்கீழும் உத்தியோகம் செய்தார்கள். ஹிந்து வீரர் முகம்மதியர் சேனைகளிலும்,

முகம்மதிய வீரர் ஹிந்து சேனைகளிலும் சேர்ந்தார்கள். முகம்மதியர் பிராமணர்களுக்கும், ஹிந்துக்கள் முகம்மதிய பீர்கள், பக்கிரிகளுக்கும் சிஷ்யரானார்கள். இவ்வாறு பிறந்த ஒற்றுமையை அக்பர் பலப்படுத்த முயன்றான். முகம்மதிய சுல்த்தான் ஹிந்துக்கள்மேல் போட்ட தலைவரியை நிறுத்தினான். ஹிந்துப் பெண்களை விவாகம் செய்துகொண்டான். அக்பர் முதல் மனைவி அம்பேர் அரசன் பெஹர்மல் என்பவன் பெண் ஜோத்பாய். இராஜபுத்திர இளவரசருக்கும் தன்னிடத்தில் பெரிய உத்தியோகங்கள் கொடுத்தான்; அவர்களையும் முகம்மதிய உத்தியோகஸ்தர்களையும் சரிசமானமாய் நடத்தினான். இராஜபுதனத்தில் ஜாகீர்தார் என்பவர் பலருண்டு. ஜாகீர்தாருக்கு அரசன் கொடுத்த ஜாகீர்களை அனுபவித்து அவனுக்கு வேண்டியபோது ஜாகீர்தாருக்குத் தகுந்த குதிரைப்படை அனுப்பவேண்டியதென்பது ஏற்பாடு. ஆனால் படையைச் சரியாய் அனுப்புவதுமில்லை, ஜாகீர்தார்களும், நீ சின்னவன், நான் பெரியவனென்று போர் புரிவது தவிர வேறு வேலையில்லை. ஆகையால் அவாகள் ஜாகீர்களை அக்பர் நிறுத்திவிட்டு, அதற்குப்பதிலாக சம்பளம் கொடுக்க ஏற்பாடு செய்தான்.

அரசுமுறை.—நாட்டை ஆள மன்ஸப்தார்கள் முதற்கொண்டு படிப்படியாய் பல உத்தியோகஸ்தர்களை நியமித்தான். புதிதாய் அழகிய நாணயங்களைச் செய்வித்து வெளியிட்டான். தோதர்மல் என்கிறவனை மந்திரியாய் நியமித்து நிலத்துக்குத் தீர்வைபோட ஒரு புதிய ஏற்பாடு செய்தான்:— அது எப்படியென்றால், நிலத்தையெல்லாம் அளந்து, தாராதரமாய் வகுத்து, வசந்த காலப்பயிர்கள் இருபது, சரத்காலப்பயிர்கள் முப்பத்திரண்டு, ஆகப் பிரித்து, விலையை நிதானித்து,

அதற்குத் தகுந்தபடி நிலத்தின் சத்துவத்தை நிர்ணயித்தான். பின்பு பயிர்களுக்கும் 19 வருஷ விலை சராசரி பார்த்து, கணக்குப்போட்டு தீர்வை போட்டான். பருத்தி, சர்க்கரை முதலிய விலை உயர்ந்த பொருள்களுக்குத் தீர்வை பணமாயும், மற்றையவைகளுக்குச் சாமானுயும் ஏற்படுத்தினன். இதனல் நாட்டில் ஜனங்கள் சுகமாய் வாழ்ந்தார்கள்.

அக்பர் பழைய அரசர்களின் தருமங்களைப் பரிபாலித்தான். ஏழைகளெல்லாம் தினந்தோறும் அரசனிடம் நேரில்போய் கஷ்டசுகங்கள் சொல்லிக்கொள்ள இடங்கொடுத்தான். விக்கிரமாதித்தியனைப்போல் ஒரு புதிய கால அளவு இலாஹி சகம் என்று ஏற்படுத்தினன். பழைய இராஜாக்களைப் போல் கவிகள் பண்டிதர்களுக்குச் சம்மானம் கொடுத்தான்.

சித்திரவேலை:—பாரசீக, இந்திய முறைகளைக் கலந்து ஒருபுதிய சித்திரமுறை, உண்டாக்கினன். இம்முறையில் இப்போதும் வட இந்தியாவில் அழகிய படங்கள் எழுதுகிருர்கள். வாஸ்துமுறையும் புதிதாய்ப் பிறந்தது. பல அழகிய கட்டிடங்கள் கட்டினர். ஆக்ரா கோட்டையும் அதிலுள்ள அற்புத அழகுள்ள கட்டிடங்களும் அக்பரால் உண்டானவைகள். தான் வசிக்க, படேப்பூர் சிக்ரி என்றஊர் கட்டுவித்தான், ஹிந்துஸ்தானி சங்கீதம் என்கிற முறை—கர்னுடகமும் பாரசீகமும் கலந்துண்டானது—அக்பர் ஆதரணையால் பிறந்தது. தர்பார்களில் பல பண்டிதர்கள் கூட்டிச் சபை நடத்தினன். அக்பர்காலத்தில் தான் துளசிதாஸர் இராம சரித்மானஸ் என்கிற ஹிந்தி இராமயணம் இயற்றினர்.

தீன் இலாஹி:—மற்றைய விஷயங்களிலெல்லாம் ஹிந்துக்கள் வழியையும் முகம்மதியர் வழியையும் ஒன்று

செய்து, சமயங்களையும் ஒன்ருய்ச் செய்ய முயன்ருன். பற்பல சமய ஆசிரியர்களை வரவழைத்து உபந்நியாசங்கள் செய்வித்தான். எல்லா மதங்களையும் ஆதரித்தான். சீக்கருக்கு அமிருச்ஸர் என்ற ஊரில் கோயில் கட்டிக்கொள்ள இடம் அளித்தான். பின்பு எல்லாச் சமயங்களுக்கும் நடுநிலையாக தீன் இலாஹி, அல்லது தௌஹீத் இலாஹி என்ற சமயம் நிர்மாணம் செய்தான். அதில் பல ஆசாரங்களைக் கலந்து, ஒரே கடவுளைப் பூஜை செய்யும்படி ஏற்பாடு செய்தான். ஆனல் இந்த தீன் இலாஹி நாட்டில் பரவவில்லை; அக்பர் இறக்க அதுவும் இறந்தது. அரசன் எவ்வளவு உயர்ந்தவனுனுலும் ஜனங்களது சமயங்கள் அவனுக்காக மாறுமா?

அக்பர் முதல் மந்திரி அபூல் பஜல் என்பவன் அக்பர் நாமா என்ற அரசன் சரித்திரத்தையும், அயினி அக்பரி என்ற நாட்டு வர்ணனையும் எழுதினுன். அவன் தமையன் அபுல் பைஜி உயர்ந்த பண்டிதன். அவனுதவியால் தான் அக்பர் தீன் இலாஹி நிருமிக்க முடிந்தது. அவன் சம்ஸ்கிருதம் நன்ருய்க் கற்று சம்ஸ்கிருத நூல்களை பாரசீகத்தில் மொழி பெயர்த்தான். மஹேச் தாஸ் என்ற பிராமணக் கவி அக்பருக்குப் பரம சிநேகிதன். இவரும் தோதர்மல் என்ற க்ஷத்திரிய மந்திரி, ஜயப்பூர் அரசன் மன்ஸிங்க் முதலியோர் அக்பரது நவரத்தினங்கள்; இவர் சபைக்கு தர்பாரி நவ்ரத்தன் என்று பெயர்.

## ஜஹங்கிர் (1605—1627)

**நூர்ஜஹன் .—** அக்பர் இறந்த உடன் அவன் மகன் ஸலிம், ஜஹங்கிர் என்ற பட்டப் பெயருடன் சிம்மாசனம் ஏறினுன். அவன் மிஹிருன் நிஸ்ஸா என்கிற மிக அழகிய பாரசீக பெண்ணை மணம் புரிந்தான் (1611).

அவளுக்கு நூர்ஜஹன்—உலக ஒளி—என்ற பட்டம் கொடுத்தான். அரசாட்சியிலும் அதிகாரம் அளித்ததால், அவளே இராஜ்ஜியத்தை ஆண்டு, தர்பார்களும் நடத்தி, நாணயங்களில் தன் உருவத்தையும் பதிப்பித்தாள்.

இராஜ்ஜியம்.—தன் இராஜ்ஜியத்தை விஸ்தரிக்கச் செய்வதற்கு, தட்சிணத்தில் தன் வாழ்நாளிலெல்லாம் போர் நடத்தினன். அவன் மகன் குர்ராம் என்பவன் மலிக் அம்பருடன் போர் செய்து அஹமத்நகரைப்பிடிக்கவே, அவனுக்கு ஷாஜஹான் என்று பட்டம் இட்டான். அக்பருக்குக் கீழ்ப்படியாத ஸிஸோதிய இராஜபுத்திரரை ஜஹங்கீர் ஜயித்தான். அவர்களை வெகு மரியாதையாய் நடத்தினன்.

ஜஹங்கீர் ஆண்டபோது இரண்டு செய்திகள் நடந்தன. அவைகள் நிகழ்ந்தபோது அற்பமாயிருந்தாலும், பின்பு பெரும் பயனை விளைவித்தன:—அதாவது (1) சீக்கர் குருவான அர்ஜ்ஜுனனை முஹம்மதியர் கொன்றார்கள்; அதனல் அதுவரையில் பக்தி மார்க்கம் மாத்திரம் பின் தொடர்ந்த வீரரான சீக்கருக்குக் கோபம் உண்டாய் அவர் உலகெல்லாம் உயர்ந்தோங்கும் வீரரானர். (2) ஆங்கில வியாபாரிகள் சிலர் சூரத்தில் 1612-இல் பண்டகசாலை கட்டி வியாபாரம் ஆரம்பித்தார். அவருக்கு உதவி செய்ய இங்கிலாந்திலிருந்து முதல் ஜேம்ஸ் என்னும் அரசன் மொகலாய் பாத்ஷஹ ஜஹாங்கீருக்குத் தூதர் அனுப்பினன். இதிலிருந்து ஆங்கிலர் செல்வாக்கு உயர ஆரம்பித்து, இந்தியா முழுவதும் பிரிட்டிஷ் இராஜாங்கம் பரவி, நாட்டில் சண்டை சச்சரவு குறைந்து ஜனங்கள் சுகமாய் வாழ இடம் உண்டாயிற்று. ஆங்கிலர் வந்தது முதல் போர்த்துகலார்க்கும் ஆங்கிலருக்கும் சண்டை உண்டாயிற்று. போர்த்துகலார் கடற்கொள்ளைக்

காரராய் ஜனங்களை உபத்திரவம் செய்தார். அதனால் மொகலாய அரசாங்கத்தார் அவர்களைத் தோற்கடித்து அவர் நிலையைக் குறைத்தார்.

**நாட்டு நிலை.**—அக்பரைப் போலவே ஜஹங்கீர் ஒரு மதத்திலும் பலமான பற்றில்லாதவன்; சேசு சபையாரை ஆதரித்தான். ஆனாலும் நாட்டில் மதவிஷயமாய் ஒருவித மாறுபாடுகள் ஏற்படவில்லை. சிற்பம், படிப்பு இவைகளில் பற்றுள்ளவன். ஆகையால் பல அழகிய கட்டிடங்கள் கட்டினான். கற்றறிந்தோர் பலரை ஆதரணை செய்தான். அக்பரைப்போலவே, ஏழைகள் இவனிடம் நேரே போய்க் குற்றங் குறைகளை சொல்லிக்கொள்ள ஏற்பாடு செய்தான். நாட்டை நியாயமாய் ஆண்டான் என்ற பெரும்பேர் பெற்றான். மொகலாய அரசர் ஒவ்வொருவர் காலத்திலும் தகப்பன் இருக்கும்போதே பிள்ளைகள் முறண்டு போர் செய்தார்கள். அவ்வாறே ஜஹங்கீருக்கும் ஷாஜஹானிற்கும் விரோத மூண்டது.

### ஷாஜஹான் (1627—1658)

**இராஜ்ஜியம் பெருகியது.**—தக்ஷிண முகம்மதிய மாகாணங்களில் அஹமத்நகர், கோல்கொண்டா, பிஜாப்பூர் ஆகிய மூன்றுதான் இன்னும் மொகலாய இராஜ்ஜியத்தில் சேராதிருந்தன. இடைவிடாது போர் செய்து 1632-இல் அஹமத்நகரை ஷாஜஹான் பிடித்தான். பின்பு பிஜாப்பூர்மேல் படையெடுக்க, பிஜாப்பூர் சுல்த்தானும் கீழ்ப்படிந்தான். ஷாஜஹான் மகன் அவரங்கஜேபை தக்ஷிண நாட்டை ஆள 1653-இல் அனுப்பினான். அங்கே போய் மொகலாய் முறைப்படி நாட்டை ஆள வேண்டிய ஏற்பாடுகளை அவரங்கஜேப் செய்தான். முர்ஷித் கூலி கான் என்பவனை மந்திரியாக்கிக்கொண்டு தோ

தர்மல் வடக்கு நாட்டில் தீர்வை போடுவதற்குச் செய்த ஏற்பாடுகளைத் தென்னாட்டிலும் செய்தான். ஏழைக் குடியானவர்களுக்கு முன்பணம் கொடுத்து உதவினார்கள்; அதனால் வியவசாயம் செவ்வையாய் நடந்தது. அப்போது மீர்ஜும்லா என்னும் பாரசீக வியாபாரி ஹைதராபாத் இராஜ்ஜியத்தையும் (அப்போது கோல்கொண்டா இராஜ்ஜியமென்று பெயர்) விஜயநகர இராஜ்ஜியத்தில் பெரும் பகுதியையும் செவ்வையாய் ஆண்டுவந்திருந்தான். அவனைச் சிநேகம் செய்து அவரங்கஜேப் இந்த நாடுகளைக் கைப்பற்றினன் (1656). இதற்குள் தெஹ்லியில் ஷாஜஹானுக்கு அப்புறம் அவன் குமாரர்களில் எவர் ஆள்வது என்று அவனிருக்கிறபோதே போருண்டாக, அவரங்கஜேப் தன் சகோதரர்கள் தாரா, ஷுஜா, மூரத் இம் மூவருடன் சண்டை செய்ய வடக்கே திரும்பினன்.

சமயநிலை.—ஷாஜஹான் தன் இரு முன்னோர்களைப்போலில்லாமல் இஸ்லாமில் பலமான பற்றுள்ளவன். அதனால் ஹிந்துக்கோயில்கள் புதிதாய்க் கட்டக்கூடாதென்றும், புதிதாய்க்கட்டின கோயில்களை இடித்துவிடவேண்டுமென்றும் உத்திரவிட்டான். ஆனால் பழைய கோயில்களை ஒன்றும் செய்யவில்லை.

சிற்பநிலை.—ஷாஜஹான் சிற்பத்தை மிகவும் ஆதரித்தான். ஏழு பெரிய சிம்மாசனங்கள் செய்வித்தான். அவைகளில் சிறந்தது 'மயில் சிம்மாசனம்' என்றது. தங்கக் கால்களும், 12 மரகதத் தூண்களும் உள்ளது. அந்தத் தூண்கள்மேல் நவரத்தினங்களாலான மயில்கள் தூணுக்கு இரண்டு மேனிக்குச் செய்வித்தான். ஈரிரண்டு மயில்களுக்கு நடுவில் ஒவ்வொரு நவரத்தினத்தினாலான மரங்கள் நிறுத்தினன். இதைவிட அற்புதமான வேலை தாஜ்மஹால் என்பது, தனக்கும் தன் மனைவி மும்

தாஜ்மஹல் என்பவளுக்கும் சமாதியாகக்கட்டியது. அதனழகு சொல்லித் தெரியாது. பார்த்துதான் அனுபவிக்கவேண்டும்.

நாட்டுநிலை.—ஷாஹேஜஹன் காலத்தில் இராஜாங்கம் வெகு நியாயமாய் நடந்தது என்றும், ஜனங்கள் சுகமாய் வாழ்ந்தாரென்றும், வணிகம் சிறந்திருந்ததென்றும் பார்த்தவர் பலர் எழுதியிருக்கிறார். அரசன் தர்பார் உலகத்தில் அப்போது இருந்தவைகளைவிட மிகச் சிறப்பானதாம். ஆனால் அரசன் கிழவனானபோது அவரங்கஜேப் ஆட்சியைக் கைப்பற்றிக்கொண்டான். ஷாஹேஜஹன் ஆக்ரா கோட்டைக்குள்ளிருந்து தவம் செய்துகொண்டிருந்து 1606-இல் இறந்தான்.

## அவரங்கஜேப் (1659—1707)

இராஜ்ஜியம்.-அவரங்கஜேப் மீர்ஜும்லாவை வங்காளத்துக்கு ஆள அனுப்பினான். அவன் அஸாமைப் பிடிக்க முயன்று தோல்வியடைந்தான். பிரமபுத்திர நதிக்கரையில் போர்த்துகலார் கப்பற்கொள்ளை நடத்தினதால் அவரை விரட்டிவிட்டான். இதனால் போர்த்துகலார் செல்வாக்கு நாட்டில் போயிற்று.

1681-இல் அவரங்கஜேப் தக்ஷிணம்போய் 1686-இல் பிஜாப்பூரைப் பிடித்துக்கொண்டு, 1671-இல் தஞ்ஜாவூர் திருச்சினைப்பள்ளி வரையில் அவன் அதிகாரத்தைப் பரப்பினான். சில மராட்டியர் கோட்டைகள் தவிர இந்தியா முழுவதும் அவன் ஆட்சியின்கீழ் வந்தது. அந்த கோட்டைகளையும் பிடிக்க ஆரம்பித்தான். 1707-இல் அவனிறந்துபோனவுடன் மொகலாய் இராஜ்ஜியமும் சிதைந்தது.

மதாசாரம்.—நாட்டுக்கெல்லாம் பாத்ஷஹ ஆனாலும், அவரங்கஜேப் சன்னியாசியைப்போலத்தான் வாழ்ந்

தான். அதனால் முஹம்மதியர் அவனை மிக கவர்விப்பார்கள். இஸ்லாம் மதாசாரங்களை இஸ்லாமானவர் நூற்களில் சொல்லியபடி ஒரு எழுத்துக்கூடப் பிசகாமல் நடத்தினன். களிபாக்கள் புறமதங்களுக்கு இடங்கொடுக்கக்கூடாதென்ற விதிக்காக ஹிந்துக்கள் கோயில்களை ஆயிரக்கணக்காய் இடித்துத் துகளாக்கினன். இவ்வாறு அழித்த கோயில்களில் முக்கியமானவை காசி விசுவநாதசுவாமி கோயிலும், 'மதுரை கேசவப் பெருமாள் கோயிலும். இதனால் ஹிந்துக்களுக்கு இவன்மேல் கோபம் வந்து கலகம் செய்யத் தொடங்கினார்கள்.

**மோகலாய் இராஜ்யம் பலம் குன்றியது.** அவரங்கஜேப் ஹிந்துக்களை வெகு உபத்திரவப்படுத்தியதால் அவர்கள் மொகலாய் இராஜ்ஜியத்துக்கு எதிராய் கலகம் செய்யத்தொடங்கினார்கள் (வட) மதுரைக்கருகிலுள்ள ஜாட் என்னும் சாதியார், கோகுலன் என்னும் தலைவன் கீழ் 1661-இல் கலகம் செய்தார். தெஹிலிக்கு அருகிலிருந்தாலும் அவரை அடக்கமுடியவில்லை. 1662-இல் சத்நாமியர் என்பவர் மொகலாய் சைன்னியத்தை அழித்தார். சீக்கர் பத்தாவது குரு கோவிந்தன் சீக்கசைன்னியம் ஏற்படுத்தி முகம்மதியருக்கு விரோதமாய்ச் சண்டை செய்தான். மார்வார், மேவார் நாடுகளும் மொகலாயரை எதிர்த்தன. 30 வருஷம் போர்செய்து மேவார் சுயராஜ்ஜியம்பெற்றது. 1709-இல் மராட்டியர் கிளம்பி, மொகலாய் இராஜ்ஜியத்தை அழித்தார். இந்த சரித்திரத்தை அடுத்த பாகத்தில் சொல்வோம்.

**ஐரோப்பிய வியாபாரிகள்.** அவரங்கஜேப் காலத்தில் ஆங்கலேயரும் உலாந்தாக்காரரும் போர் புரிய ஆரம்பித்தார்கள். அன்றியும் ஆங்கில வியாபாரிகள் பண்டகசாலைகளைக் கோட்டைகளாகக் கட்டத்தொடங்க, ஷாயிஸ்

தாகான் என்பவன் வங்காளத்தினின்று அவர்களை விரட்டி விட்டான். சூரத்தும் பிடிபட்டது. ஆனால் பின்பு சமாதானம் செய்துகொண்டதில் கல்கத்தா (காளிகட்டம்) என்னும் துறையில் பண்டகசாலை கட்டிக்கொள்ள உத்தரவு பெற்றார் (1688).

இதற்கு வெகுகாலம் முன்னமே தென்னிந்தியாவில் ஆங்கிலர்வந்து வியாபாரம் தொடங்கினர். முதலில் கீழ் சமுத்திரத்திரக்கரை வந்து சேர்ந்தார். 1611-இல் நிஜாம்பட்டணம் மச்சிலிபட்டணம் இந்த ஊர்களில் வியாபாரம் ஆரம்பித்தார்கள். 1625-இல் துகராஜா பட்டணம் என்ற ஊரில் ஆறுமுகமுதலியார் என்ற சிற்றரசன் கொடுத்த உத்தரவின் பேரில் ஆறுமுகம் என்ற சிற்றூர் கட்டி, வியாபாரம் செய்யத் தொடங்கினர்கள். 1632-இல் மச்சிலிபட்டணத்திலும் ஆறுமுகத்திலும் நெசவுசாலைகள் நியமித்து, அங்கிருந்து துணி அனுப்பி, அதற்குப் பதிலாக மிளகு வாங்கி, இங்கிலாந்துக்கு அனுப்பினர்கள். 1631-இல் சென்னப்பட்டணத்துச் சேணியர்கள் மிக உயர்ந்த துணிகளை நெய்வாரென்று உணர்ந்து, சந்திரகிரி ராஜாவிடம் உத்தரவுபெற்று, சென்னபட்டணத்தைச் சுற்றியுள்ள இடத்தைக் குத்தகைக்கு வாங்கிக்கொண்டு, கோட்டை கட்டினர்கள். 1663-இல் மொம்பயி (பொம்பாய்) பெற்றார்.

1690-இல் கூடலூருக்கருகில் ஆங்கிலர் தேவன்னப் பட்டணம் என்ற இடத்தை மராட்டியரிடம் விலைக்கு வாங்கி கோட்டை கட்டினர்.

1692-இல் ஜுல்பிகர்கான் என்ற நவாபுக்கு துப்பாக்கி முதலியன விற்று, எழும்பூர், புரசபாக்கம், ராயபுரம் மூன்றையும் பெற்று சென்னப்பட்டணத்தைப் பேரூராய்ச் செய்தார்.

1682 முதல் பிரெஞ்சுக்காரர் புதுச்சேரி முதலிய இடங்களில் குடியேறினர். ஆனால் பிரெஞ்சுக் காரர் இந்தியாவில் செழிக்கவில்லை.

## 2. தேசஸ்திதி.

பொதுநிலை.—மொகலாய் இராஜ்ஜியம் உயர்நிலை பெற்றிருந்தபோது, இந்தியாவெல்லாம் ஒரே அரசாங்கமாய், ஒரேமுறையான ஆட்சிமுறையில்லாமலிருந்தது. ஜனங்களுக்குள் சிலர் சிறு குடியானவர், சிலர் பெரு மிராசுதார்கள். வேறு சிலர் சிற்றரசர், பற்பலமுறையாய் வாழ்ந்தார். நாடு கண்ணுக்கு இப்போது தோன்றுவது போலத்தானிருந்தது, நாட்டின் காட்சி மாறவில்லை. வயல்கள் வேலிகளில்லாமல் இப்போது மாதிரி இருந்தன. பயிர்களும் செடிகளும் இப்போது வளர்வனதான் வளர்ந்தன. கிராமங்களும் ஏறக்குறைய இப்போது உள்ள கிராமங்களைப்போல இருந்தன. ஆனால் கிராமங்களில் இப்போதைவிட ஜனங்கள் அதிகம். வீடுகள் கூரையோ நாட்டோடோ போட்டிருந்தன. தகரத் தகடாவது கள்ளிக்கோட்டை ஓடாவது இல்லாததால், குளுகுளு வென்று இருந்தன. கல்கத்தா, பொம்பாய், மதராஸ், கராச்சி என்ற பெரும்பட்டணங்கள் கிடையாது. கனௌஜ், விஜயநகரம், ஜான்பூர் என்ற நகரங்கள் அழிய ஆரம்பித்தன. ஆக்ரா, தெஹ்லி, கோல்கொண்டா, பிஜாப்பூர், அஹ்மதாபாத், அஜ்மேர், திருச்சினாப்பள்ளி, தஞ்சாவூர், மதுரை செழித்தோங்கின; ஆனாலும் இப்போதுபோல் நெருக்கமின்றி, பரந்திருந்தன. பட்டணங்களில் சேகரித்திருந்த பொருள்களும், செய்திருந்த ஏற்பாடுகளும் சிறப்பாய் இருந்ததாக வெளிநாட்டிலிருந்து வந்து பார்த்தவர்கள் எழுதியிருக்கிறார்கள் சாதிகள் பல உண்டு. முகம்மதி

யர்களும் பலர் இருந்தார்கள். போர்த்துகலார் இந்நாட்டுப் பெண்களை மணம்புரிந்ததால் கிரிஸ்தவர்களும் அதிகரித்தார்கள். ஆப்பிரிக்காவிலிருந்து அடிமைகளை வாங்கி விற்பது ஆரம்பித்ததால், அடிமைகள்கூட இந்நாட்டிலுண்டு. ஆனால் வக்கீல்கள், சம்பளம்பெற்றுப் ப்ாடம் சொல்லும் உபாத்தியாயர்கள், ரெயில் தந்தி உத்தியோகஸ்தர்கள், இஞ்சினீர்கள் முதலியோர்களாவது பெருந் தொழிற்சாலைகளாவது கிடையாது.

அரசுமுறை.-மொகலாய் உத்தியோகஸ்தர்கள் இராஜ காரியம் பார்த்தார்கள். ஆனால் கிராம காரியங்களெல்லாம் பஞ்சாயத்தார் மேல்விசாரணையில் நடந்தது. உத்தியோகஸ்தர் இருவகை: (1) கச்சா, அதாவது மாதச் சம்பளம் பெற்றவர்கள்; (2) பக்கா, அதாவது தாலூகா வரிகளைத் தாங்களே வசூல் செய்து அதில் ஒரு பங்கை இராஜாங்கத்துக்குக் கொடுப்பவர். ஒரு சிறு நாட்டை ஆண்டவருக்கு சுபதாரென்று பெயர். சேனாதிபதிக்கு பவுஜ்தார்; வரி வாங்குவோர் தலைவன் அமல்குஜார். நியாயாதிபதிகள் இருவர்; மீர் அதில் என்கிற முக்கிய நியாயாதிபதியும் காஜியும். குற்றஞ் செய்வோரை தண்டிப்பவனும், ஹிந்துக்கள் விவாதங்களை ஹிந்து தரும முறைகள்படி தீர்ப்பவனும் கொத்தவால். குற்றவாளிகளை முகம்மதிய சட்டப் பிரகாரம் தண்டிப்பார். மற்ற விஷயங்களில் ஹிந்துக்களுக்கு ஹிந்து சட்டமும், முகம்மதியருக்கு முகம்மதிய சட்டமும் பிரகாரம் வியவகாரம் நடந்தது. நாட்டில் திருட்டுபயம் அதிகமில்லை என்று புற நாட்டிலிருந்து வந்து பார்த்தவர் எழுதியிருக்கிறார்கள்.

அரசனை எவ்வளவு ஏழையானாலும் நேரில் பார்த்து கஷ்டங்களைச் சொல்லிக்கொள்ளலாம். அரசன் மந்திராலோசனைச்சபைக்கு திவானிக்காஸ் என்று பெயர். முதல்

மந்திரிக்கு வக்கீல் என்று பெயர். யுத்தாதிபதி பக்ஷி; முதல் நியாயாதிபதி தலைக்காஜி.

**வணிகம்.**—வெளி நாடுகளில் சில சாமான்களை இறக்குமதி செய்து, அவைகளுக்குப் பதிலாக இந்நாட்டு சாமான்களை ஏற்றுமதி செய்தார்கள். வெளி நாட்டிலிருந்து வந்த பொருள்களில் முக்கியமானது குதிரை. இதுவே விசேஷமாய் தென்னிந்தியாவுக்குப் போகும். மற்றைய இறக்குமதிப் பொருள்கள் எவையென்றால்:—சித்திரவேலை செய்வதற்காக உலோகங்கள், கோராப்பட்டு, யானை தந்தம், அம்பர்; மற்றையவை மருந்துசாமான், திராட்ச சாராயம். ஏற்றுமதிப் பொருள்கள் துணி வகை, மிளகு வாசனை திரவியங்கள், நீலமும் மற்றைய சாயங்களும், அபின் முதலிய மருந்து வகை. சாமான்களை மாடுகள் மேலும், படவுகள் கப்பல்களிலேற்றியும் கொண்டு போனார்கள். கப்பல் வியாபாரம் எல்லாம் முகம்மதியர் கையிலிருந்ததால், போர்த்துகலார் அவர் மேல் யுத்தம் செய்து அவர்களை அழித்தார். அந்தக் காலத்தில் மேற்கு ஐரோபபாவில் உணவுக்காக மாமிசத்துக்கு மிளகு பொடி போட்டு உலர்த்திவைப்பார். அதனால்த்தான் மிளகுக்காக போட்டி போட்டுக்கொண்டு ஐரோப்பியர் வியாபாரம் செய்ய வந்தார்கள். நவாப்களும் சுல்த்தான்களும் வெளி வியாபாரத்துக்கு அதிக வரி போடாமல் அதை விருத்தி செய்தார்கள். உள் நாட்டு வணிகமும் அதிகமாய்ப் பெருகியிருந்தது.

---

Printed at the Jananukoola Press, Fort, Trichinopoly.

# பொருளடக்கம்.

## படங்களின் விபரம்.



# பண்டைக்காலத்தைப் பற்றிய கதைகள்.

## அஸ்ஸீரியாதேசத்தின் வரலாறு.

கிறிஸ்தவ வேதபுத்தகத்தின் ஒரு பாகமாகிய (ஜெனிஸிஸ்) ஆதியாகமத்தில், மெஸொபொடேமியா என்று சொல்லப்பட்ட தேசத்தில், பண்டைக்காலத்தில் ஒரு பெரிய ராஜ்ஜியம் இருந்ததாகக் கூறப்பட்டுள்ளது. அஷர் (Asshur) என்பவன் அவ்வாற்றிடைப்பட்ட நிலத்தின் வடபாகத்திற்குச்சென்று ஒரு பட்டணத்தை யுண்டுபண்ணினதாகவும் அந்நகரத்தினின்றும் அஸ்ஸீரியா என்று பெயர்கொண்ட ஒரு பெரிய ராஜ்ஜியம் கிளைத்ததாகவும் நமக்குத் தெரியவருகிறது.

ஏறக்குறைய அறுநூறு ஆண்டுகாலம் அஸ்ஸீரியா ராஜ்ஜியம்தான் அத்தேசத்தில் மிகவும் பிரபலமாயிருந்தது. அந்நாட்டரசன் ஒருவன் மேற்றிசை மத்தியதரை கடற்கரைவரையும் சென்று அங்கிருந்த பினீஷியா தேசத்தரசனிடமிருந்து திறைபெற்று மீண்டான். பண்டைக்காலத்தில் ஐரோப்பா கண்டத்தில் பலமன்னர்களோடும் போர்புரிந்து வெற்றிபெற்ற உரோமர்களைப்போல, அஸ்ஸீரியர்களும் போரில் வெற்றியடைந்தமையால், ஆசியாகண்டத்து உரோமர்களென்று பெயர் பெற்றனர். ஆயினும் அவர்களுக்கு அப்பெயர் பொருந்தாது. ஏனென்றால் உரோமர்கள் தாங்கள் ஜெயித்த நாடுகளிலுள்ள ஜனங்களுக்கு தங்களுக்குத் தெரிந்த வித்தைகளையெல்லாம் கற்பித்தனர். ஆனால் அஸ்ஸீரியர்களோ, தாம் ஜெயித்த தேசங்களிலுள்ளாரைக் கொல்லுவதும் அடிமைப்படுத்துவதுமே தொழிலாகக்கொண்டனர். அஸ்ஸீரியர்களின் அதி குரூரமான செயல்களைப்பற்றிப் படிப்பதும் நமக்கு அருவருப்பாயிருக்கிறது. பினீஷியா தேசத்தை ஜெயித்த அஸ்ஸீரிய அரசன் தான் ஒரு சிங்கமென்றும் நகரநிக்கிரகனென்றும், வணங்காமுடிமன்னனென்றும், தான்

மலைப்பிரதேசங்களையழித்து இரத்தத்தை ஆறுகப் பெருகச் செய்தவனென்றும் பெருமை பாராட்டினன்.

ஒருநாள் அஸ்ஸீரியாதேசத்தின் பிரதான பட்டணத்திற்கு ஜோனு (Jonah) என்று பெயர்கொண்ட தெய்வீகன் ஒருவன் வந்து, "இன்னும் நாற்பது தினங்களுள் இந்நகரம் அழிந்துபோகும்." என்று கூவிக்கொண்டு, வீதிவீதியாய்ச் சென்றான். இப்படி அகங்காரம்கொண்ட இந்த அஞ்ஞானிகளின் நகரத்துள்ளே வந்து இப்படிப்பட்ட பயங்கரமான சாபத்தை அத்தெய்வீகன் துணிந்து சொல்லியது ஆச்சரியமாகவேயிருக்கிறது. கடவுளே முதலில் ஜோனுவுக்கு இதைச் சொன்னபோது, அவர் அப்படிச் செய்யாது வேறிடம் ஓடியொளிந்தார். ஜோனு கூறின பயங்கரமான வார்த்தைகளினல் அந்நகரிலுள்ளவர்களுக்கு நல்லறிவுவந்து நல்வழியில் நடக்க, கடவுள் அவர்களை மன்னித்தார்.

சுமார் நூறு வருஷங்களுக்குப் பின்னர் அஸ்ஸீரியாவில் கீர்த்திபெற்ற சேனுசரி (Sennacherib) என்னு மரசன் சிங்காசனம் ஏறினன். அவன் நாற்புறங்களிலுமுள்ள ஜாதியார்களை வென்று, தனது ராஜ்ஜியத்தை மிக்க உன்னத நிலைமைக்கு உயர்த்தினன். அஸ்ஸீரியா தேசத்துக் கல்லூரிகளை நாடிக் கல்விமான்களும், வர்த்தகத்தை நாடி வணிகர்களும் எங்குமிருந்து திரள்திரளாய் வந்து கூடினர். அத்தேசத்தின் தலைநகராகிய நினவே (Nineveh) இப்போது ஆங்கிலநாட்டின் ராஜதானியாகிய லண்டன்மா நகரைக்காட்டிலும் இரண்டு பங்கு பெரிதாயும் அதியழகுள்ளதாயும் மிருந்தது. ஆனல் ஜனத்தொகை மிகக் குறைவாயிருந்தபடியால் அந்நகரத்தில் பல மைதானங்களும் அழகிய பூந்தோட்டங்களுமிருந்தன. பற்பல அடுக்குகளாய் அமைந்திருந்த அழகிய பூஞ்சோலைகளின் நடுவே கட்டப்பட்டிருந்த வெள்ளியமாடங்கள் வெய்யோன் வெண்கதிரால் மிகப்பிரகாசித்து விளங்கின. அருகிலுள்ள டைகிரிஸ் (Tigris) என்னும் மகாநதியில் வர்த்தகக் கப்பல்கள் கம்பீரமாய்ப் போவதும், நகரவீதிகளில் தனவான்களுடைய ரதங்கள் நகர்ந்து செல்லுவதும் கண்டோர் கண்களைக் கவர்ந்தன. இவைகளினிடை, ஒவ்வொருகாலங்களில் போரில் பிடிக்கப்பட்ட அடிமைகளைப் பரிதாபமாய் விலங்கிட்டு இழுத்துக்கொண்டு சென்றார்கள்.

சேனுச்சரியரசன் வெற்றியினால் மனம்பூரித்து மிகச் செருக்குற்றவனாய், யூதர்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் திருநகராயுள்ள ஜெருஸலேம் (Jerusalem) என்னும் பட்டணத்தின் மேல் படையெடுப்பதாய்த் தீர்மானித்து, யூத அரசனுக்கு பின்வருமாறு சொல்லியனுப்பினான்; "இதுவரை தேவர்களும் எனது வலிமையைக் கண்டஞ்சி என்னுடன் எதிர்த்துப் போர்செய்யவில்லை. ஆகையால் என்னுடன் சண்டையிட்டு வெற்றிபெறலாம் என்ற எண்ணத்தை அறவே ஒழித்து, நான் இச்சித்த நாட்டைக் கொடுத்துவிடு."

இப்படி இறுமாப்புக்கொண்ட இவ்வரசனுக்கு அவன் பிழையை கடவுளே யெடுத்துக்காட்டினார். அவன் எண்ணிறந்த சேனைமுழுவதும் கனிகாலத்தில் இலைகள் மரங்களினின்றும் உதிர்வதுபோல, கடுங்கூற்றத்தால் அறையுண்டு இறந்தன. பலநாடுகளையும் பலவீடுகளையுமழித்த அவ்வீரன் தன் மக்களாலேயே கொல்லப்பட்டு மாண்டான். இன்னும் ஒரு நூற்றாண்டுகாலம் அஸ்ஸீரியர்கள் இடைவிடாது சண்டையிட்டும், மற்றவர்களைக் குரூரமாய் உபத்திரவித்தும் வந்தனர். கடையில் அவர்கள் தெய்வதண்டனைக்குள்ளானார்கள். வடதிசையினின்றும் வந்தமுரட்டுக்குதிரைவீரர்கள் அஸ்ஸீரியா தேசத்தைப் பாழாக்கி நினவே நகரத்தை யழித்தார்கள். இத்தேசம் நாசமானதற்காக ஒருவரும் துக்கப்படவில்லை. இவ்வுலகில் மிலேச்சத்தன்மையிலும் கொடுமையிலும் அஸ்ஸீரியர்களுக்கு மேற்பட்டவர் எவருமில்லை.

தீவினை செய்தார் தம் வினையின் பயனை யடைதல்போல, ஒரு தேசத்தார் செய்யும் பாவமும் அவரை விடாது பின் சென்று அடும்.

பலநூற்றாண்டுகளாய், இப்பாழான ராஜ்ஜியம் மண்ணால் மூடப்பட்டு பிறருக்குத் தெரியாமல் இருந்தது. சில காலமாய் மூடியுள்ள மண்ணை அப்புறப்படுத்தி ஆராய்ச்சிசெய்யும் அறிஞர் பலர், அஸ்ஸீரியர்கள் மூவாயிரம் வருஷங்களுக்கு முன்னர் அணிந்த மணிகளையும் நகைகளையும், அவர்கள் அதிசாமர்த்தியமாய்ச் செய்த பாத்திரங்களையும் நமக்குத் தெரிவித்து வருகின்றனர். இவைகளைத்தவிர, அவர்கள் வெண்கல்களில் ஆப்புவடிவான எழுத்துக்களால் வரைந்திருப்பதினின்றும், அவர்கள் சரித்திரத்

தைப்பற்றியும் நமக்குத் தெரியவருகிறது. இவைகளினின்றும் கிறிஸ்தவ வேதத்திற் சொல்லப்பட்ட பல கதைகளை விவரமாய் நாம் தெரிந்துகொள்ளலாம்.

## சேனாசரியின் படை நாசமடைந்த விவரம்.

"மந்தைமேற் பாயும் மறத்த செந்நாய்போல்
அஸ்ஸீரியன் பாய்ந்தனன், ஆண்மை தோன்றவே.
அடுபோர்வீரர்கள் ஆடையும் உடம்பும்
பழுப்பிலும் பொன்னிலும் பாங்குடன் விளங்கின.
கொலையிற் கொடியார் நெடிய வேல்கள்
விண்மீன் நீரிடை விளங்குதல் போன்றன.
வனப்பும் வளப்பமும் வாய்ந்து விளங்கிய
விலிமைமிக்க வயங்கெழு சேனைகள்
இலையுதிர்காலத் துதிரும் இலைபோல்
மறுநாட் போரில் மாண்டொழிந்தனவே.
கொலையிற்கொடிய கொடுவேற் கூற்றம்
கொடியர் சேனையைக் கொன்றொழித்ததுவே.
போரில் வல்ல பெருந்தேர்ப்புரவிகள்
வாய் நுரைதள்ள வனப்புக்குன்றி
ஆண்மை கெட்டு அசைவற்றிருந்தன.
புரவி வீரர்கள் புவிமிசைப்புரண்டு
நெற்றியிற் பனியும், நீளமேனியில்
இட்டகவசம் துருப்பிடித்திடவும்
இடம்புடை பெயரா திருந்தழிந்தனரே.
படைக்களத்திருந்த பாசறையனைத்தும்
உறைவாரின்மையின் உயிரற்றிருந்தன.
உரைசெய்கருவியும் உயர்த்தும் கொடியும்
எடுப்பாரின்றி இடங்களிற் கிடந்தன.
காதலரிழந்தோர் கழிதுயரெய்த
ஆலயமெல்லா மழிந்துகிடக்க
வலியுடன் விளங்கிய வீரர்மாட்சி
வாளடியின்றியே வன்மைகுன்றி
கதிரவன் முன்னர்க் கரைந்துருகும் கட்டிபோல்
இறைவன் பார்வையால் இறந்தொழிந்ததுவே."

இவ்வரலாறு, கீர்த்திபெற்ற ஒரு ஆங்கில கவியாகிய பைரன் (Byron) என்பவர் எழுதிய நூலினின்றும் எடுக்கப்பட்டுள்ளது.

## எகிப்த் தேசம்.

தற்காலம் எகிப்த் என்று சொல்லப்படுகிற நாடானது ஆப்பிரிக்கா கண்டத்தின் ஒரு பெரிய பாகம் முழுவதும் பரவியிருக்கிறது. ஆனால் பண்டைக்காலத்தில், நீல நதியின் இருகரையிலும் பத்துமைல் அகலமுள்ள செழித்திருந்த நாடு மட்டுமே எகிப்த் என்று வழங்கப்பட்டது.

எகிப்த்தில் வருஷத்திற்கு நான்கு பருவங்களில்லை. கனிகாலமும் கார்காலமும் அங்கே கிடையாது. வஸந்தகாலம் இரண்டுதரம் வருகிறது. முதல் வஸந்த பருவத்தில் வெள்ளை வெளேரென்ற வாற்கோதுமையும், பின் பருவத்தில் பொன்னிறமான கோதுமையும் விளைகின்றன. மே மாதத்தில் கோடைகாலம் ஆரம்பிக்கிறது. அப்பொழுது வெயில் மிகக் கடு



நீல நதி.

மையாயிருத்தலால், தானியங்களை உணர்த்தவேண்டிய அவசியமில்லை. அறுத்து முடிந்தவுடன் தானியக்கதிர்களை ஒட்டைகளின் மேலேற்றிக் களஞ்சேர்த்து, கதிர்களினின்றும் உமி வேறுபடும்வரைக்கும் மாடுகளைக்கொண்டு மிதிக்கச் செய்கிறார்கள். ஆகஸ்டுமாதத்தில் குடித்தனக்காரர்களுக்கு கொஞ்சம்கூட ஓய்வுகிடையாது. வஸந்தகாலம் கோடைகாலங்களில் நீலநதி உற்பத்தியாகும் பர்வதங்களில் பெய்கிற மழை, அந்நதி இருகரையும் பெருக வெள்ளமாய் வந்து, ஆகஸ்டு மாதத்தில் எகிப்த் முழுவதையும் ஜலப்பிரளயமாக்கி, நதியினின்றும் பிரியும் பற்பல கால்வாய்கள் மூலமாய் கரை புரண்டு ஓடும். ஆகஸ்டுமுதல் அடுத்தமாதம் வரையிலும், வெள்ளம் வரவர அதிகமாகும். வெள்ளநீர் சிவப்பு நிறமாயும் கலங்கலாயுமிருக்கும். ஸெப்டெம்பர் மாதம் முழுவதும் வெள்ளம் குறையாது பெருகியே நிற்கும். அக்டோபர் மாதத்தில் ஜலம் வரவரக் குறைய ஆரம்பித்து, மறுவருஷம் மே மாதம் வரையிலும் குறைந்துகொண்டிருக்கும். அப்பொழுது தான் ஆற்றில் தண்ணீர் மிகவும் வற்றியிருக்கும். நதி எங்கெங்கே பெருகி வழிந்ததோ அங்கங்கே சாகுபடிக்கேற்ற மண்ணை நிரப்பிச் செல்லும்.

வெள்ளம் குறைந்தபிறகு வஸந்தகாலம் ஆரம்பிக்கிறது. வயல்களெங்கும் தானியங்களும் பற்பல பயிர்களும் முளைவிட்டுப் பச்சையாயிருக்கும். வெண்கல வர்ணம்போன்ற பேரீந்துமரமும் அப்பொழுதுதான் பழுக்க ஆரம்பிக்கும். அப் பேரீச்சம்பழத்தைத்தான், அழகான சிறு பெட்டிகளில் அடைத்து இங்கிலாந்து தேசத்திற்கு அனுப்புகிறார்கள். பேரீந்துமரங்கள் செங்குத்தாயும் அழகாயும் பாலைவனங்களின் நடுவே வளர்வதினால், அவைகளிருக்குமிடங்களெல்லாம் கண்ணுக்கினிமையாயும் செழிப்பாயுமுள்ளன. பாலைவனத்தில் வசிக்கும் ஜனங்கள் பேரீச்சம்பழத்தைத தாங்கள் தின்பதுமல்லாமல் தங்கள் ஒட்டைகளுக்கும் கோவேறு கழுதைகளுக்கும் உணவாக்குகிறார்கள். பழக்கொட்டைகளைக்கூட அரைத்து ஒட்டைகளுக்குக் கொடுக்கிறார்கள். பேரீந்துமலர்களினின்றும் ஓர் இன்சுவையுள்ள குளிர்ந்த கள் இறக்குகிறார்கள். மட்டைகளினின்றும் கூடைகளும் பாய்களும் பின்னுகிறார்கள். அம்மரத்தின் உறுதியான கால்களினின்

றும் உபயோகமுள்ள சாமான்கள் செய்கிறார்கள். இப்படி இம்மரத்தின் ஒவ்வொருபாகமும் உபயோகப்படுகிறது.

## பூர்வீக எகிப்தர்கள்.

எகிப்தின் பழைய பாஷைப்படி, 'நைல்' என்ற பதத்திற்கு நதியென்றேபொருள். பூர்வீக எகிப்தர்கள், அந்நதிக்கு, மறைந்தது என்னும் பொருளுள்ள ஹாபி (Hapi) என்று பெயர்வைத்தார்கள். இந்நதியை எகிப்தர்கள் எவ்வளவு அன்புடன் போற்றிவந்தார்கள் என்பது அவர்களின் பழைய கீதங்களில் காணப்படுகிறது.

"நலத்தையே செய்யும் மாநதியே! நீ இந்நாட்டில் வந்து, பூமியைச் செழிப்பாக்கி, நிலங்களுக்கு வேண்டிய நீரைக் கொடுத்து, எல்லாப்பிராணிகளுக்கும் உணவளிக்கிறாய்! ஜனங்களுக்கு வேண்டிய உணவும் நீரும் உன்னால்தான் கிடைக்கிறது! தானியங்களுக்குள்ள சாரத்தையும் நீதான் கொடுக்கிறாய்! தானியங்கள் அதிகமாய் விளைகிறதும் உன்னால்தான். உன்னைக்கண்டதும், ஜனங்கள் சந்தோஷிக்கிறார்கள். ஒவ்வொரு வயிறும் நிறைவது உன்னால்தான். ஏழைகளும் தரித்திரர்களும் வருந்தாது பிழைக்கும்படி, களஞ்சியங்களையும் பண்டசாலைகளையும் நிறைப்பிப்பதும் நீயே! தாவரவர்க்கங்களும் முளைத்துவளர்வதும் உன்னால்தான். இவ்வுதவிகளெல்லாம் புரிவதினால் உனக்கு சிறுமையுமில்லை, மலக்குறைவுமில்லை. உன் சக்தியே ஜனங்களின் மனதிடத்தின் காரணம். மாநதியே, பன்முறை வந்தனம்!"

இப்படி நீலநதியை, ஒரு கீதத்தில் புகழ்ந்து போற்றியிருக்கிறார்கள்.

இந்நதியைக்குறித்து, ஜனங்கள் வருஷந்தோறும், இரண்டு பெரிய விழாக்கள் கொண்டாடுவது வழக்கம். அவைகளில் ஒன்று ஜூன்மாதத்திலும் மற்றொன்று ஆகஸ்டுமாதத்திலும் நடைபெறும். முன்னொருகாலத்தில், எகிப்த் தேசத்தாரை நல்வழிப்படுத்தும்பொருட்டு, அந்நாட்டுப் புராதன தெய்வம், மனிதவுருக்கொண்டு அங்கு தோன்றிற்று. அம்மனிதனைத் தெய்வமென்றுணராது, ஒருவன் கொன்றுவிட்டான். கொலையுண்ட உடம்பைக்கண்டு துக்கித்துப் பரிதாபித்து பூமாதேவி

அழுதகண்ணீர் ஆறுகப்பெருகி, நீலநதியைக் கரைபுரண் டோடச்செய்தது, என்று ஒரு ஐதீகம் உண்டு. இதை அனுஷ் டித்துத்தான் ஜூன்மாதத்தில் திருவிழாக் கொண்டாடினார்கள்.

## எகிப்தின் அரும்பொருள்கள்.

**ப**ண்டைக்காலத்தில் எகிப்தர்கள் கட்டின பிராமிட் (Pyramid) என்னும் கோபுரங்களே, இவ்வுலகிலுள்ள சமா திகளுள் அதியற்புதமானவைகளாய் விளங்குகின்றன. மெம் பிஸ் (Memphis) என்னும் புராதன நகரத்திற்கு வெளிப் புறத்தே, பிரமாண்டமான அரசகல்லறைகள் அறுபதுக்கு மேல் காணப்படுகின்றன. அவ்வரசர்களின் மாட்சிக்கு ஒரு அறிகுறியாயிருத்தற்கும், அவர்களின் உடம்பு அழியாது பாதுகாத்தற்கும், இக்கோபுரங்கள் கட்டப்பட்டுள்ளனபோ லும்!

சீயோப்ஸ் (Cheops) என்னும் கோபுரத்தை நூறுயிரம் வேலைக்காரர்கள், இருபது வருஷகாலம் இடையறாது வேலை செய்து கட்டிமுடித்தனர். இக்கோபுரம் புராதனகாலத்தில் அதியற்புதப் பொருள்களுள் ஒன்றாய் விளங்கிற்று. யூதர் களின் தீர்க்கதரிசியான ஏப்ரஹாம் (Abraham) என்பவர் காலத்துக்கு பலவருஷங்கள் முன்னரே இக்கோபுரம் கட் டப்பட்டிருந்தது. இதைக் கட்டினவர்கள், யந்திரசாஸ்திரம் சிற்பசாஸ்திரம் முதலிய கலைகளில் மிகப் பயிற்சியடைந்தவர் களாயும், அங்ககணிதம், அளவுசாஸ்திரம், சித்திரமெழுதல் முதலியவைகள் தெரிந்தவர்களாயும் இருந்திருக்கவேண்டும். ஆயினும், இவ்வற்புதமான கோபுரத்தைக் கட்டிமுடித்த வேலை யாட்களின் கஷ்டத்தைச் சிறிது சிந்திப்போமானால், நம்மனம் மிக்க வருத்தமடைகின்றது. கனத்த கருங்கற்பாறைகளை, ஐம்பது காததூரத்திற்கப்பாலிருந்து கொண்டுவந்து, உயரத் தூக்கி அவர்கள் கட்டும்பொழுது, எவ்வளவு கஷ்டப்பட் டிருப்பார்கள்! யாவர்க்கும் பயனின்றி, செய்தவேலைக்குக் கூலிகொடுப்பாருமின்றி, வெய்யோன் வெப்பத்தால் மெய் தளர்ந்து கட்டிய வேலையாட்கள் எவ்வளவு வருத்தமடைந் திருப்பார்கள்! இவைகளைக் கட்டுவித்த அரசர்களோ, பிறர் கஷ்டத்தைக் கண்டு இறங்காத கன்னெஞ்சம் உடையவர்கள்.



க்ளியொபாட்ரா ராணியின் ஊசி.

கீஸே (Gizeh) என்னும் ஊரில், ஒரே பாறையினின்று செதுக்கப்பட்டதும், மனிதத்தலையும் சிங்கசரீரமும் பூண்டதும் ஆகிய ஒரு பிரமாண்டமான சிலையுண்டு. அதன்முகம் நீலநதியைப் பார்த்துக்கொண்டிருக்கிறது. அவ்வுருவம் மிகப் பயங்கரமாயுள்ளதால், அரேபியர்கள் அதற்கு 'பயத்திற் குறைவிடம்' என்று பெயரிட்டிருக்கின்றனர்.

அக்காலத்தில் எகிப்த் தேசத்தையாண்ட அரசர்களுள் ஒருவன், அங்குள்ள ஆலயத்திற்கு அலங்காரமாகவொரு பெரிய கற்றூணைக் கட்டுவித்தான். அத்தூணில் அவ்வரசனது வீரச் செயல்களெல்லாம் சித்திரத்தில் வரைந்து காட்டப்பட்டுள்ளன. இதன்பிறகு ஏறக்குறைய பதினன்கு நூற்றண்டு கட்குப் பின்பு, ஸீஸர் என்னும் ரோமசக்ரவர்த்தி, எகிப்தை யாண்டுவந்த க்ளியொபாட்ரா (Cleopatra) ராணியைப் போரில் புறங்கண்டு, அவ்வற்புதமான கற்றூணை அலெக்ஸாண்டிரியா (Alexandria) என்னும் துறைமுகத்திற்குக் கொண்டுபோனன். கி. பி. பத்தொன்பதாவது நூற்றண்டின் பிற்பகுதியில், சுமார் இப்பொழுது நாற்பது வருஷங்கள் முன்னர், இத்தூணை அவ்விடமிருந்து அதற்கென்று கட்டப்பட்ட ஓர் கப்பலில் ஏற்றி இங்கிலாந்து தேசத்திற்குக்கொண்டு போனர்கள். போகும்வழியில் கப்பலுடைந்து தூண் நீரில் மூழ்கிப்போயிற்று. மூழ்கிய கற்றூணை மிகவும் கஷ்டப்பட்டு எடுத்து லண்டன் மாநகரில் தேம்ஸ் நதிக்கரையில் இப்பொழுது வைத்திருக்கிறர்கள். அத்தூணுக்கு கிளியோபாட்ரா ராணியின் ஊசியென்று பெயர்.

## எகிப்தில் பண்டைக்காலத்திலிருந்தவர்கள்.

எகிப்த் தேசத்து ஜனங்கள் குட்டையாயும், மெலிந்தவர்களாயும், உஷ்ணதேசத்தி லிருந்தவர்களாகையால் மாநிறமுடையவர்களாயுமிருந்தனர். மாசற்ற வெண்மையான சணலால் நெய்த உடைகளையே ஆண்பெண் எல்லோரும் உடுத்தனர். எகிப்தில் சணல் அதிகமாய் விளைந்ததினல், அதி நேர்த்தியான ஆடைகளுக்கு அத்தேசம் பெயர்பெற்றிருந்தது. அவர்களுக்கு அழுக்கு என்றல் அருவருப்பு. அவர்கள் அதிசுத்தமா யிருக்கும்பொருட்டு முண்டிதம்செய்து பொய்முடிதரிப்பது வழக்கம். குழந்தைகளின் மயிரைக்கூட எடுத்துவிடுவார்கள். பெண்டுகளோ தங்கள் கூந்தலை கண்ணும் கருத்துமாய் வளர்த்துப் பின்னலிட்டு பின்னல் உலையாதிருக்கும்படி, மரவுருளைகளைத் தலையணைகளாக வைத்துப் படுப்பது வழக்கம். தாங்கள் சுகமாய் உறங்கவேண்டுமென்பது அவர்கள் முக்கியக்கருத்தன்றுபோலும்! இரவில் சடைப் பின்னல் உலையாது பார்ப்பதுதான் முக்கிய எண்ணம்.

எகிப்தர்களுக்குத் தங்கள் குடும்பங்களில் அதிகப் பிரீதியுண்டு. ஒவ்வொருதினமும் தாங்கள் கடவுளைத் தொழும்பொழுது, தங்கள் தந்தை தாய் உடன்பிறந்தோர் குழந்தைகள் எல்லோரும் மறுவுலகத்தில் ஒன்றாய்க்கூடியிருக்க வேண்டுமென்று பிரார்த்திப்பதுண்டு.

குழந்தைபிறந்த சிலதினங்களுக்கெல்லாம் அதற்கு நாமகரணம் செய்வது வழக்கம். அத்தினத்தில் பந்துமித்திரர்கள் எல்லோரும் வந்து, குழந்தைக்கு நன்கொடையளித்து அதற்கு ஒரு தெய்வத்தின் பெயரை யிடுவதுண்டு. மூன்று வயதாகும்வரை, குழந்தை தாயை விட்டுப் பிரியாது. தாய் தன் இடுப்பிலாவது இடதுதோளிலாவது குழந்தையைத் தூக்கிக்கொண்டு செல்வாள். குழந்தைகள் வளரும்பொழுது, பொம்மைவைத்து விளையாடியும் சாயங்காலத்தில் வாயிற்றிண்ணையிலுட்கார்ந்து கட்டுக்கதைகளைக் கேட்டும் களிப்பார்கள்.

எகிப்தர்கள், நாய் பூனை முதலிய ஜெந்துக்களிடத்து மிகவும் அன்புபாராட்டி அவைகளை வீடுகளில் வளர்த்துவந்தனர். அவர்கள் ஆடு மாடுகளை வளர்ப்பதையே முக்கிய தொழிலாகக்கொண்டனர். ஆடுமாடுகளைக் காடுகளில் மேய்ப்பதும், கால்வாய்களில் நீர் பருகச்செய்வதும் சிறுவர் சிறுமிகளுக்குக்கூட நன்றாய்த் தெரியும். சிலர் பூமியைச் சாகுபடி செய்தும் மற்றும் சிலர் கைத்தொழில்களினால் வயிறுவளர்த்தும் வந்தனர். வெவ்வேறு உருவங்களுள்ள அழகான மட்பாண்டங்களைப் பண்ணுவதில் அவர்களுக்கு அதிசாமர்த்தியமுண்டு. அவர்கள் உபயோகப்படுத்தின பாத்திரங்களெல்லாம் அதியலங்காரமாயிருந்தன. அத்தேசம் அதிஉஷ்ணமாயிருந்ததினால், ஜனங்கள் நாணற் கோரையினால் பின்னப்பட்ட பாய்களையும் பாதரட்சைகளையும் அதிகமா யுபயோகப்படுத்தினார்கள். பாய் முடைகிறவர்களும் கூடை பின்னுகிறவர்களும் எப்பொழுதும் வேலைசெய்துகொண் டிருந்தார்கள். அரசர்கள் எல்லோரும் பெரிய கட்டிடங்களைக் கட்டிவந்ததினால் செங்கல் சுடுவோர்களுக்கும் கற்றச்சர்களுக்கும் எப்பொழுதும் வேலைகிடைத்தது. அக்காலத்தில் சுடப்பட்ட செங்கற்களை இப்பொழுதுகூட நாம் பார்க்கலாம். சிற்பிகளெல்லாரும் அரசர்களுக்கு அடிமைப்பட்டு வேலைசெய்தார்களே.

யொழிய கூலிக்கு வேலைசெய்பவில்லை. சிலவருஷங்கள் முன்பு கூட எகிப்த் தேசத்தில் அடிமைகள் உண்டு. அவர்கள் நீல நதிக்கரையில் உழைத்துக்கொண்டிருந்தபொழுது, வேலையின் உபத்திரவம் பொறுக்கமாட்டாது, தங்களை யிப்படி வருத்து கிறவர்களைக் கடவுளே தண்டிக்க வேண்டுமென்று பாடிக் கொண்டிருப்பது வழக்கம். அப்படியே இஸ்ரேல் (Israel) தேசத்தார்களும் பண்டைக்காலத்தில் எகிப்தர்களுக்கு அடிமைப்பட்டு உழைத்தபொழுது பாடினர்போலும்!

## எகிப்தர்களின் மயானச்சடங்குகள்.

பூர்வகாலத்தில் எகிப்தர்கள்செய்த பிரேதச்சடங்குகளிலிருந்து, அவர்கள் இறப்பு பிறப்பு முதலியவைகளைப்பற்றி என்ன கொள்கைகளையுடையவரா யிருந்தார்கள் என்று உணர்தல்கூடும். இப்பிறப்பில் நாம் செய்யும் கருமங்களுக்குத் தக்கதாகவே, மறுபிறப்பில் நமக்குச் சுகதுக்கங்கள் உண்டாகின்றன என்று அவர்கள் முற்றிலும் நம்பியிருந்தார்கள். உயிர் நீத்த உடம்பு அழுகிப்போகாது பாதுகாத்தற்கு அதன்மேல் ஒருவித தைலத்தைத் தடவுவது வழக்கம். இறந்தவர்களின் உயிர் இன்புற்று இருக்கவேண்டுமானால் அவர்கள் உடம்பை அழியாது பாதுகாத்தல்வேண்டும் என்று நம்பினார்கள்.

தைலம் ஆட்டுவதில் மூன்றுவிதமுண்டு. அதிக ஆடம்பரத்தோடு பிரேதத்தைத் தைலமிடவேண்டுமானால் எழுபது நாட்கள் செல்லும். அப்பொழுது, பிரேதத்தின்பேரில் புஷ்பம், மந்திரத்தகடு, வேதபுத்தகங்கள் முதலியவைகளை வைத்து, புரோகிதர்கள் மந்திரங்களை ஜெபிப்பார்கள். இவ்வாறு தைலமிட்ட உடம்பை அதே வடிவமுள்ள அழகிய பெட்டியிலடைத்து, இறந்தவன் உருவத்தை அதன்மேல் வரைந்து, அவன் பிரதாபங்களை யெல்லாம் சித்திரரூபமாய் எழுதுவார்கள்.

இறந்துபோனவன் கனவானாயிருந்தால், அரசனே கௌரவ அறிகுறியாக, ஒரு பிரேதப்பெட்டி கொடுப்பதுண்டு. பிரேதத்தைச் சமாதிக்குக் கொண்டுபோகும்பொழுது, அடிமைகள் விசித்திரமான மூடிகளையுடைய பல ஜாடிகளையும், பற்பல வஸ்துக்கள் நிறைந்த தட்டுகளையும் எடுத்துக்கொண்டு

முன்செல்வார்கள். ஒருவன், ஒரு பட்சியின் பொம்மையை எடுத்துக்கொண்டு போவான். மற்றொருவன் ஒரு சிறிய தோணியைத் தூக்கிக்கொண்டு செல்வான். இதன் கருத்தென்னவென்றால் சமாதியினருகே பிசாசுகள் அணுகாதபடி விலக்குவதற்கு ஜாடிகளும், இறந்தோன் உபயோகப்படுத்துகிறதற்கு தட்டு சமான்களும் அவனாவியை விண்ணுலகிற்கு எடுத்துச் செல்வதற்குப் படகும், உபயோகப்படுவதாய் நினைத்திருந்தார்கள்.

இவைகளெல்லாம் சென்றபிறகு, புலித்தோல் தரித்த புரோகிதர்கள், வேதபுத்தகங்கள், தூபகலசம் சித்திரகும்பம் முதலிய வஸ்துக்களை யெடுத்துச் செல்வார்கள். பிரேதமடங்கிய பெட்டியை ஒரு பெரிய தோணியில் வைத்து, தோணியைச் சுற்றிலும் இறந்தவனது சுற்றத்தார் உட்கார்ந்து புலம்பியழுவார்கள். தோணியை உருளைகளின்மேல் ஏற்றித் தள்ளிக்கொண்டு போவார்கள். இவ்வுலகில் மனிதனைப் பாதுகாத்தற்பொருட்டு, 'இமைப்பொழுதும் தூங்காது, இறைவன் பார்த்துக்கொண்டிருக்கிறான்,' என்ற உண்மையை எல்லோர்க்கும் உணர்த்தும்பொருட்டு, படகின் பார்வைப்புறத்தில் விழித்த கண்ணொன்று வரைந்திருப்பார்கள்.

படகு நீல நதிக்கரையைச் சேர்ந்தவுடனே சுற்றிலுமுள்ள ஜனங்கள், பிரேதத்தைப் பார்த்து, "புண்ணியம் செய்தவர் போய்ச் சேருமிடத்திற்கு நீயும் சுகமாய்ச் செல்வாயாக!" என்று கூவி ஒப்பாரி பாடுவார்கள். படகு, நதியின் அக்கரை சேர்ந்தபிறகு, எல்லோரும் புலம்ப, பாடையை ஆடம்பரத்தோடு பெரிய சமாதிக்கு எடுத்துச் செல்வார்கள்.

இச்சமாதியோ, இறந்தவன் உயிரோடிருந்தபொழுதே கட்டின, அழகானவும், விசித்திரவேலைகள் செய்யப்பட்டதாயுமுள்ள ஒரு பெரிய அறை. பிரேதத்தைப் பெட்டியுடனே, நேரே நிற்கவைத்து மூன்று புரோகிதர்கள் பிரேத சடங்குகளை முடிப்பார்கள். தங்கள் பிரார்த்தனைகள் ஆகாயத்திற் சென்று கடவுளைச் சேர்வதுபோல், ஒருவன் தூபகலசத்தில் சாம்பிராணியைக் கொளுத்தி புகையை மேலேறச் செய்வான். மற்றொருவன் இறந்தவன் பாவத்தினின்றும் விடுபடுவதற்கு அறிகுறியாய், கும்பத்தினின்றும் நீரை அர்ப்பணம் செய்வான். இன்னுமொருவன் வேதகீதங்களைப் பாடுவான். இவை

களைப் பார்த்து, சுற்றிலுமுள்ள ஜனங்கள் சற்று ஆறுதலை யடைவார்கள்.

அச்சமாதியறையின் ஒருபக்கத்துச் சுவரில், கடவுள், மனிதரின் பாவபுண்ணியங்களை நிறுப்பதற்காக ஓர் கையில் தராசும், அவர் நடுநிலைக் குறிகுறியாக மற்றோர் கையில் தீக்கோழியின் சிறகும் அமைத்து ஓர் சித்திரம் வரையப்பட்டிருக்கும். சடங்குகள் முடிந்தவுடன், சமாதியறையின் ஒரு பக்கத்தில் பிரேதப்பெட்டியை செங்குத்தாய் நிறுத்தி, அது மறைந்திருக்கும்படி அதன் முன்னே ஒரு சுவரை எழுப்புவார்கள். இறந்தவனுடைய சுற்றத்தார் சிநேகிதர் முதலியோர், அடிக்கடி அங்குசென்று பூ பழம் முதலிய பொருள்களை, அவன் ஞாபகார்த்தமாக, சமாதியின்பேரில் பரப்புவது உண்டு. அவர்கள் சர்மகவிகளை நாம் வாசித்தால், எவ்வளவு உயர்ந்த தர்மத்தைக் கடைப்பிடித்திருந்தார்கள் என்பதைத் தெரிந்துகொள்ளலாம். ஒரு பாட்டில் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

"நன்மையே நவிலும் நாவினையுடையேன். புறங்கூறிப் பொய்த்து உயிர்வாழ்வோனல்லேன். ஆடையின்றி, வாடையில் மெலிந்து பசியால் வருந்திய பான்மையோர்க்கு ஆடையும் அன்னமும் அன்புடனளித்தேன். எனது அன்னையும் பிதாவும் அருமைச்சுற்றமும் புகழ்ந்து கொண்டாடிய புதல்வன் யானே."

## பூர்வீக எகிப்தர்கள் எழுதின விதம்.

**அ**த்தேசத்தில் அபரிமிதமாய் விளைந்த பேபர் (Papyrus) என்னும் நாணல்கோரையிலேயே அவர்கள் எழுதி வந்தார்கள், இப்பொழுது கூட அந்நாணல் நீலநதியோரமாயும், மற்றுமுள்ள கால்வாய்களின் கரைகளிலும் அதிசெழிப்பாய் வளர்கிறது. இப்பொழுது காகிதம் என்று பொருள்படும் பேபர் என்ற ஆங்கிலச்சொல், அந்நாணலின் பெயராகிய பேபிரஸ் (Papyrus) என்ற வார்த்தையினின்றும் வந்ததேயாகும்.

பெரிய கோரைத்தண்டுகளை கீறுகீறாய்க் கிழித்து, வரிசையாகப் பரப்பி அவைகளின்மேல் குறுக்காக, மற்றொருவரிசை கீற்றுகளைப் பரப்பி இரண்டு வரிசைகளையும் ஒட்டி நன்றாய்ச் சேர்ந்தவுடன் வெயிலில் காயவைத்து, அவ்வேடுகளின் இரு

புறங்களையும் மெதுவாக்குவார்கள். அவ்வேடுகளைத் தனியாயும், பலவற்றை ஒன்றாய்ச் சேர்த்துப் புத்தகமாக்கியும் உபயோகப்படுத்துவார்கள். பத்தங்குல நீளமுள்ள நாணற்கோலை எழுத்தாணியாக உபயோகப்படுத்துவார்கள். அவர்கள் எழுதின மையோ, பல ஆயிர வருஷங்கள் சென்றபோதிலும் இன்னும் கெடாமல் இருக்கிறது. இவ்வேடுகள் அதிக விலையாயிருந்தபடியால், சாதாரண ஜனங்கள் ஓடுகளிலும், ஒருபுறமெழுதிய காகிதங்களின் மறுபுறத்திலும் எழுதி வந்தனர்.

அவர்களுள் புரோகிதர்கள் மட்டுமே சித்திரலிபி யென்று சொல்லப்பட்ட எழுத்துக்களை எழுதினார்கள். மற்றவர்கள் அஸ்ஸீரியர்கள் உபயோகப்படுத்தின ஆப்புவடிவான எழுத்துக்களை எழுதினார்கள்.

கி. பி. 1887-ம் வருஷம், ஒரு எளிய குடித்தனக்காரி, பழையகாலத்து எகிப்த் அரசர்களின் அரண்மனையிருந்தவிடத்தினருகில், குப்பையைக் கிளறிக்கொண்டிருந்தபொழுது, கோணலான எழுத்துகள் நிறைந்த பழையகாலத்துப் பட்டங்கள் பலவற்றைக் கண்டெடுத்தாள். அவளுக்கு இவ்வெழுத்துகளை வாசிக்க முடியவில்லையாகிலும், புத்திமான்கள் சிலர் அவற்றை ஆராய்ந்து, சுமார் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னமே, எகிப்தர்களும் பாலஸ்தீனம் முதலிய தேசங்களிலுள்ளவர்களும் எழுதிய அட்சரங்களே யிவையென்று கண்டுபிடித்தார்கள்.

அச்சாசனங்களுள் ஒன்று பின்வருமாறு, அஸ்ஸீரிய அரசன் எகிப்த் அரசனுக்கு எழுதியது.

"மாட்சிமை பொருந்திய அரசே! நீரும் நும்குடிகளும் நும்குடும்பமும் என்றும் வாழ்க! உமது தூதர்கள் நம்மிடம் வரக்கண்டு களிப்புற்றோம். அவர்கள் இப்பொழுது நமது அரண்மனையிலிருக்கிறார்கள். உமது தேசத்தில் பொன் வீதியிற்கிடக்கும் மண்போல்வது. அதிகமாய் வீதியில் கிடந்தால் காற்று வீசும்பொழுது, பொன்பொடிகள் கண்ணில் வீழ்ந்து வருத்தும். மிகையாயுள்ள பொன்னைச் செலவு செய்தற்காக, நாம் புதிதாகக் கட்டும் அரண்மனைக்குப் பொன் பூசுவதாக எண்ணியுள்ளோமாகையால், அதற்கு வேண்டும் பொன்னை அனுப்புக!"

இப்படி அஸ்ஸீரிய அரசன் சாமர்த்தியமாய் எழுதியது கவனிக்கத்தக்கது. தான் அனுப்பிய பொருளைப் பெரிதாகப் பாராட்டியும், எகிப்த் அரசனது பொன்னைச் சாதாரணமான பொருளாகவும், கண்ணில் வீழ்ந்து கஷ்டப்படுத்தும் பொருளாகவும் எழுதியுள்ளது, அவ்வரசன் சாமர்த்தியத்திற்குச் சான்று பகர்கிறது. எகிப்த் தேசத்தில் எவ்வளவு ஏராளமாய்ப் பொன் கிடைத்ததென்றும், நாம் இதினின்றும் நன்கு உணரலாம்.

## மூன்ருவது கோபுரம் கட்டின கதை.

முன்னொரு காலத்தில் எகிப்த் தேசத்தில் ஒரு ஏழைக் குடியானவன் வீட்டில் ரூபவதி (Rhodopis) என்னும் அழகுள்ள ஒரு பெண், நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தாள். இப்பெண் சிறு பிராயத்திலேயே தன் தாயை இழந்துவிட்டபடியால், சிற்றன்னையளித்த அன்னத்தையுண்டு அவளிடம் மிகவும் அன்புபாராட்டி வந்தாள். ஆனல் அச்சிற்றன்னையோ, ரூபவதியை அன்போடு ஆதரியாது அவள் அறியாமற் செய்த சிறு குற்றங்களுக்கெல்லாம் கோபித்துத் தண்டிப்பது வழக்கம்.

ஒருநாள் இச்சிறுபெண் தன் தோழிகளுடன் நீலநதிக்கு நீராடச் சென்ருள். தான் காலில் அணிந்திருந்த ஜோடுகளை, நதிக்கரையில் கழற்றி வைத்துவிட்டு நீரிலிறங்கி ஸ்நானம் செய்துகொண்டிருந்தாள். அச்சமயத்தில் அவ்விடம் பறந்துகொண்டிருந்த ஒரு கழுகு ஒரேபாய்ச்சலாய்ப் பாய்ந்து பாதரட்சைகளுள் ஒன்றை யெடுத்துக்கொண்டு, பாலைவனத்துக்குள் பறந்து போய்விட்டது. இதைக்கண்ட ரூபவதி பதைத்து, "என் சிற்றன்னை இதற்கு என்ன சிட்சை செய்யப் போகிருளோ?" என்று பயந்துகொண்டிருக்கையில் அச்சிற்றன்னையும் அங்குவந்து சேர்ந்தாள். அவள் ரூபவதியைப் பார்த்து "பேதைப்பெண்ணே! நீ அன்று குயவனிடம் வாங்கிய கூஜா இரண்டாய் உடைந்துபோயிற்று. குயவன் உன்னை ஏமாற்றிவிட்டான், பார்த்தாயா? இதை அரசனிடம் முறையிடுவதற்குப் புறப்படு." என்று கடிந்து பேசினள். இதைக் கேட்ட பெண் தொலைந்துபோன ஜோட்டைப்பற்றி ஒன்றும்

சொல்லாது, கரையிலிருந்த மற்றொரு ஜோட்டை சிற்றன்னை காணுமல், தன் பைக்குள் போட்டுக்கொண்டு அன்னையுடன் அரண்மனை நோக்கிச் சென்றாள்.

அந்நாட்டரசன் அப்பொழுதுதான், போர்க்களத்தில் எதிரிகளையெல்லாம் அழித்து, வெற்றிபெற்று தன் தேசத்திற்குத் திரும்பி, அத்தாணி மண்டபத்தில் அமைச்சருடன் இருந்து அனுதினமும் நீதிபரிபாலனம் செய்துகொண்டிருந்தான். ஒரு நாள் அரசன் உய்யான வனத்தில் ஒரு அமைச்சனோடு உலா



பிராமிட் கோபுரங்கள்.

விக்கொண்டிருக்கையில், அவ்வமைச்சன், "அரசே! சண்டைமுடிந்து இப்பொழுது சமாதானம் நிலைபெற்றிருக்கிறது. தாங்கள் கலியாணம் செய்துகொண்டு இல்லறமாகிய நல்லறத்தை நடத்தலே நன்று." என்று சொன்னான். அதற்கு அரசன், "பர்த்தாவுக்கேற்ற பதிவிரதையுண்டானல், எத்தாலும் கூடியிருக்கலாம். ஆனல் அப்படிப்பட்ட பெண்ணை தெரிந்தெடுத்தற்கு நான் சாமர்த்தியமுடையவனல்லேன்." என்று மறுமொழி கூறினன். இப்படிச் சொல்லி முடிந்ததும், ரூப

வதியின் ஜோட்டைத் தூக்கிக்கொண்டு ஓடிய கழுகு அவ்விடம் வந்து, வேந்தன் மடியில் அதைப் போட்டுவிட்டுப் பறந்துபோயிற்று. கற்புடைய பெண்ணைக் கண்டு வரித்தற்கு இதுவே வழியென்று துணிந்து, "இப்பாதரட்சை எப்பெண் காலுக்குச் சரியாய் அமைகிறதோ, அப்பெண்ணையே நான் மணம் புரிவேன்." என்று உறுதிகூறினான். அரண்மனையிலிருந்த பெண்மணிகள் எவர் பாதத்திற்கும் அது பொருந்தவில்லை.

இச்சமயத்தில் ரூபவதியும் அவள் சிற்றன்னையும், குயவன்மேல் குற்றம் சாட்டும்பொருட்டு அரண்மனைக்கு வந்தார்கள். இப்பாதரட்சையைக் கண்டதும், ரூபவதி உள்ளங்கொள்ளா மகிழ்ச்சியோடு, "அம்மா, இதோ காணமற்போன என் ஜோடு காணப்பட்டது." என்று கூவினாள். இதைக் கேட்ட பிரஜைகள் பிரமித்து நின்றார்கள். ஆனால் ரூபவதி ஜனங்கள் அதிசயிக்கும் காரணத்தை அறியாதவளாதலால், கீழே கிடந்த தன் ஜோட்டை ஒரு பாதத்தில் மாட்டிக்கொண்டு பையிலிருந்த ஜோட்டை மற்றொரு பாதத்தில் மாட்டிக் கொண்டு நின்றாள். அங்கிருந்த பெண்டிர்கள் எல்லாரும் இவள் ஆக்கத்தைக் கண்டு அழுக்காறு கொண்டனர். ஆனால் அரசன் ரூபவதியை நோக்கி, "நான் முன்செய்த உறுதிமொழி தவறாது உன்னையே மனைவியாக்க விரும்புகிறேன்." என்று கூறினான். அதற்கு அவளும் இசைய, முறையே கலியாணத்தை முடித்தனர். பின்பு தன் மனைவியின் நற்குண நற்செய்கைகளையும், கற்பின் திறத்தினையும், கண்டு வியந்து, அரசன் தான் அவள்பால் வைத்திருந்த அன்பிற்கறிகுறியாக, அழகிய ஓர் கோபுரம் கட்டி அதில் அவளுடம்பை அடக்கம் செய்தான். அச்சமாதிக்கு மூன்றாவது கோபுரம் என்று பெயர். எகிப்த் அரசர்கள் எல்லோரும் தாங்கள் உயிருடன் இருக்கும்பொழுதே, தங்களுக்குச் சமாதிகள் கட்டிக்கொள்வது வழக்கம். மூர் (Moore) என்று பெயர்பெற்ற ஆங்கில கவி ரூபவதியின் வரலாற்றைப்பற்றி பாடியிருக்கிறான்.

## அத்தேசத்து மாந்தரீகர்களைப்பற்றிய கதைகள்.

மாந்தரீக கதைகளைக் கேட்க, சிறுவர் சிறுமிகள் மிகவும் விரும்பினார்கள். ஒரு பிரசித்திபெற்ற மாந்தரீகன், மெழுகினால் முதலைபோன்ற உருவம் ஒன்று செய்து, நீலநதிக்குள்

போட, அது உடனே உயிர்பெற்று பெரிய முதலையாகி, அம் மாந்தரீகனுக்கு விரோதியாகிய ஒருவனைப் பிடித்து விழுங்கி விட்டதாய் ஓர் கதையுண்டு. அவனே, வாத்து ஒன்றின் தலையை வெட்டி, தலையை ஓரிடத்திலும், உடலை மற்றோரிடத்திலும் வைத்ததாகவும், அவன் சில மந்திரங்களை ஜெபித்த மாத்திரத்தில், தலையும் உடலும் ஒன்றுசேர்ந்து, வாத்து உயிருடன் பிழைத்தெழுந்ததாகவும் சொல்லுவதுண்டு. அக்காலத்தில் சாதாரண ஜனங்கள், மாந்தரீகம், சூன்யம் முதலானவைகளில், அதிக நம்பிக்கை கொண்டிருந்தார்கள். ஒருகாலம் படகோட்டிக்கொண்டிருந்த ஒரு பெண்ணின் ஆபரணம், நீரில் விழுந்து முழுகிப்போயிற்று. உடனே ஒரு மாந்தரீகன் அவ்விடம் வந்து தன் மந்திர சக்தியினால், ஏரியின் நீரை ஒரு புறம் ஒதுங்கி நிற்கச்செய்தான். அப்பெண் படகினின்றும் இறங்கி, தரையிலிருந் தெடுப்பதுபோல், தன்னாபரணத்தையெடுத்துக்கொண்டாள். பின்பு மாந்தரீகன் மற்றொரு மந்திரத்தை யுச்சரிக்க, ஏரி நீர் முன்போல் பரவிற்று.

## எகிப்தர்களுக்குண்டான, பிரகிருதி சம்பந்தப்பட்ட புராணங்கள்.

**நா**ள் பகலென்றும், இரவென்றும் பிரிவுபட்டதற்கு எகிப்த் தேசத்தில் ஒரு கதை சொல்லுவார்கள். ஒருகாலத்தில் பகலோனுக்கும் இருளோனுக்கும் ஒரு பெரிய போர் நடந்தது. இருளோன், கரும்பன்றி வடிவங்கொண்டு பகலோனின் கண்ணைப் பரித்து, அவனை விழுங்கிவிட முயன்றான். அதற்குமுன் பகலோன் இருளோனைத் தன் கதிர்களால் எரித்து, அவன் கால்களிலொன்றை வெட்டிவிட்டான்.

இக் கடுஞ் சண்டையைக் கண்ட கடவுள், இருவரையுமழைத்துச் சமாதானம் செய்தார். ஒருநாளில் பகலோனுக்குப் பாதிகாலமும், இரவோனுக்குப் பாதிகாலமுமாகப் பகிர்ந்து கொடுத்துவிட்டு, அதுமுதல் அவர்கள் சண்டையிடக்கூடாதென்று கட்டளையிட்டார்.

பகலோனுக்கு, வலதுகண் சூரியனும், இடதுகண் சந்திரனுமாக, இரண்டு கண்கள் உண்டு. இதைக்கண்டு பொறாமைப் பட்டு, இருளோன் சந்திரனைச் சிறிது சிறிதாக வெட்டி அழித்துவிடவேண்டுமென்று ஆரம்பித்தான். இதைக்கண்ட

கடவுள், ஒவ்வொருமாதமும், இருளோன் வெட்டிக் குறைத்த மதியை முழுமதியாக்கி ஆகாயத்தில் வைத்தார்.

ஒருசமயத்தில், இருளோன் ஆகாயத்தில் உலாவிக் கொண்டிருக்கையில், சந்திரனைக் கண்டு விழுங்கிவிட்டான். இதைப் பார்த்துக்கொண்டிருந்த கடவுள், அவன் சந்திரனை மறுபடியும் வெளியே கக்கும்படியாகச் செய்தார். இதுவே சந்திர கிரகணத்தின் காரணம்.

## பாலஸ்தீனம், பினீஷியா முதலிய நாடுகள்.

## பாலஸ்தீனம்.

அஸ்ஸீரியா நாட்டிற்கும், எகிப்த் தேசத்திற்கும், இடையிலே பாலம்போலுள்ள சிறு நாடு, பாலஸ்தீனம் (Palestine) என்று பெயரை யுடையது. அத்தேசத்தில் கிறிஸ்து பிறந்து வளர்ந்து, மனிதருக்கு நன்மைபுரிந்ததினால் அதற்குத் திரு நாடு (Holy Land) என்றும் பெயருண்டு.

பாலஸ்தீன தேசத்தின் படத்தைச் சிறிது பார்ப்போம். சமுத்திரக்கரையோரத்தில் ஒரு பெரிய சமவெளி காணப்படுகிறது. அதனிடையில், தொன்றுதொட்டு, வர்த்தகர்களும் சேனைகளும் மற்ற பிரயாணிகளும் வழக்கமாய்ச் சென்று கொண்டிருந்த பெரிய சாலையொன்று தோன்றும். யூதர்களின் பிரதான குருக்களுள் ஒருவராகிய ஜோஸப் (Joseph) எகிப்த் தேசத்திற்குப் போகும் வர்த்தகர்களிடம் விற்கப்பட்டதும் இச்சாலையில்தான்.

வடமேற்கில், வெண்மலை என்னும் பெயருடன் தொடங்கும் மலைத்தொடர் இரண்டு பெரிய பகுதியாக இருக்கிறது. இவ்விரண்டு பாகங்களினிடையே செழித்த சமவெளியொன்று காணப்பட்டுள்ளது. கிறிஸ்தவபுத்தகங்களில் குறிக்கப்பட்டுள்ள பல அற்புதங்கள் இவ்விடத்திலேயே நடந்ததாகக் கொள்ளப்படுகிறது. தென்புறத்தில் ஆடுமாடுகளுக்கு உணவளிக்கும் பசும்புல்தரை காணப்படும். இங்குதான், தேவனுக்கு உகந்த பிள்ளையாகிய தாவீது (David) என்பவன் பிறந்து வளர்ந்தான். இங்குதான் அவன், தன் ஆடுகளைக் கொல்லவந்த சிங்கம் கரடி முதலிய கொடிய மிருகங்களைக் கொன்றான். இங்குதான் படிப்போர் மனதை யுருகச் செய்யும் பாமாலைகளைப் பாடினான். இம்மட்டோ! ஆமோசி

(Amos) என்னும் அறிஞன் ஆடு மேய்த்துக்கொண்டிருக்கும் பொழுது, "நானுர், என்னுள்ளமார், ஞானங்களார்?" என்று விஷயங்களை ஆராய்ந்ததும் இவ்விடத்திலேயே ஆகும்.

இச்சமவெளிக்கப்பால், ஜார்டன் என்று பெயருள்ள பெரிய பள்ளத்தாக்குள்ளது. இவ்விடத்தில் கண்டோர் மனதைக் கவரத்தக்க பலவகை வளங்களும் பொருந்தியுள்ளன. இதன் தெற்கு முனையில் சாக்கடல் (Dead Sea) என்று பெயர் பெற்ற சமுத்திரம் உள்ளது. அக் கடல்நீர் மிகவும் உப்பாயிருப்பதினுல் மீன்கள்கூட அங்கு வசிப்பதில்லை.

பண்டைக்காலத்தில் பிரபலமாயிருந்து இப்பொழுது பாழாகக் கிடக்கின்ற இடங்களிற் காணப்படுகின்ற சிலாசாசனங்களின் வாயிலாக, பாலஸ்தீனத்தைப் பற்றி பலவிஷயங்கள் அறியக் கிடக்கின்றன. அக்காலத்தில் பாலஸ்தீனம் பல நகரங்களாய்ப் பிரிவுபட்டிருந்தது. ஒவ்வொரு நகரமும் தன்னிற்றுனே அடங்கியதாய், தனித்தனி அரசோடும், அரண்களோடும் விளங்கிற்று.

தற்காலம் சரித்திர ஆராய்ச்சி செய்யும் அறிஞர் பலர், பாலஸ்தீனத்தில், பலவிடங்களிலும் மண்ணுல் மூடப்பட்ட புராதன பாத்திரங்களையும் பாண்டங்களையும் வெட்டியெடுத்து, அக்காலத்தில் அவர்கள் அடைந்திருந்த நாகரிகத்தைப் பாராட்டிப் பேசுகின்றனர். இத்தொழிலில் ஊக்கத்தோடு உழைத்தால் இன்னும் பல அற்புதப் பொருள்கள் காணப்பட்டு, அழிந்து ஒழிந்த புராதன நாடுகளின் நிலைமையைப்பற்றி நாம் தெரிந்துகொள்ளுவதற்கு ஒப்பற்ற கருவியாகும் என்பதில் ஒரு சிறிதும் ஐயமில்லை.

## பினீஷியா நாடு.

**பா**லஸ்தீனத்தின் வடமேற்குப்பக்கம் கடலோரமாயுள்ள நாட்டில்தான் பினீஷியர்கள் வசித்தார்கள். இவ்வுலகத்தில் முதல் முதல் வர்த்தகம் செய்ய ஆரம்பித்தவர்களும் வேறு தேசங்களில் குடியேறினவர்களும் அவர்களே. பழைய சாசனங்களினின்றும், இந்த பினீஷியர்களைப்பற்றியும், இவர்கள் கீழ்த்தேசங்களினின்றும் வர்த்தகத்திற்காகக் கொண்டுவந்த ஜாடிகள், ஆபரணங்கள், வாசனைத்திரவியங்கள் நவரத்தினங்கள் முதலியவைகளைப்பற்றியும் நாம் தெரிந்துகொள்ளலாம்.

அவர்களுடைய முக்கிய துறைமுகமாகிய (Tyre) டைர் என்னும் பட்டினம், இவ்வுலகில் ஒப்புயர்வற்று விளங்கிற்று. வியாபாரம் நாளடைவில் அதிகரித்தபடியால், கரையிலுள்ள இடம் போதாது அருகேயிருந்த ஒரு சிறிய தீவையும் துறைமுகமாக்கினர். மற்ற தேசங்களைப்போல, பினீஷியாவும் அஸ்ஸீரியர் ஆட்சிக்கு உள்ளானது. அஸ்ஸீரியர்கள் இந் நாட்டை எவ்வாறு ஜெயித்தார்கள் என்பது, சில காலந்துக்கு முன், கண்டெடுக்கப்பட்ட சிலாலிகிதங்களால் விளங்குகிறது. இன்னும் சித்திரங்களினின்றும், பினீஷியர்களின் மரக்கலங்கள் எப்படியிருந்தனவென்றும், அவைகளில் வியாபாரச் சரக்குகளை யெப்படி ஏற்றினரென்றும், அவைகளை சமுத்திரத்திலிருந்து கரைக்கு எப்படி இழுத்துக் கொண்டுவந்து சேர்த்தனரென்றும் நாம் தெரிந்துகொள்ளலாம்.

ஒரு சித்திரத்தில் அஸ்ஸீரிய அரசன் தான்பெற்ற வெற்றிக்கு அறிகுறியாக கையில் வில்லும் அம்பும் பிடித்துக் கொண்டு, தன்னுட்சிக்குட்பட்ட பினீஷியர் கப்பல்களிற் கொண்டுவந்து இறக்கிய சாமான்களைப் பரிசோதித்துக்கொண்டிருப்பதுபோல் வரையப்பட்டுள்ளது. சூரிய கிரணங்கள் அரசன்மேற் படாதபடி, ஆடம்பரத்தோடு அவன்மேல் வெண் குடை நிழற்ற, தன்குடிகளாகிய பினீஷியர்களுள் ஒருவனோடு பேசிக்கொண்டிருப்பதாயும் தெரிகிறது.

கிறிஸ்தவர்களும் மகம்மதியர்களும் மதப்போர் புரிந்தபொழுது, டைர் நகரம் முன்னிருந்த பெருமையும் சிறப்புமிழந்து, சில வலையர்கள்மட்டும் குடியிருக்கப்பெற்ற ஒரு சிறு கிராமமாய் மாறிவிட்டது. பண்டைநாள் விளங்கின பட்டினம் முழுவதும் ஆழிவாய்ப்பட்டழிந்தது.

"புலவர் ஏத்திய புகழ்பெறு நாடு
நாவலர் புனைந்த நலம்பெறு நாடு
புரவலர் போற்றும் புனித நாடு
ஆழிவாய்ப்பட் டழிந்தது கொல்லோ!
பதியிழந்தது, நிதியிழந்தது
வளமிழந்தது, வனப்பிழந்தது
வனப்பெலாமிழந்து, வலையர்தம்மிடமாய்
வதிதலைக்கண்டு வருந்தார்யாரே!"

## கார்த்தேஜ் நகரம்.

பினீஷியர்கள் குடியேறின இடங்களுள் முக்கியமானது, கார்த்தேஜ் என்னும் பட்டினம். இந்நகரத்தார், கடல் வழியாகச் சென்று, ஆப்பிரிக்கா கண்டத்தின் மேல்கரை நாடுகளுடன் வர்த்தகம் செய்த விஷயம், ஒரு புராதன கிரீக்க சரித்திர ஆசிரியரால் எழுதப்பட்ட நூலில் காணப்படுகிறது. கார்த்த ஜீனியர்கள், ஆப்பிரிக்காகண்டத்தின் கரையோரமாய்ச் சென்று தாங்கள் கொண்டு வந்த சாமான்களைக் கரையில் இறக்கிவைத்து, அதற்குச் சிறிது தூரத்தில் நெருப்பை மூட்டிவிட்டு, தம் கப்பல்களுக்குத் திரும்பிப் போய்விடுவார்கள். இந்நெருப்பைக் கண்டவுடன் கடல் வியாபாரிகள் பண்டமாற்றுக்காக வந்திருக்கிறார்கள் என்று அத்தேசத்தார் அறிந்து தம்மிடத்துள்ள பொற்கட்டிகளை எடுத்துக்கொண்டு கடற்கரைக்கு வருவார்கள். சரக்குகளையெல்லாம் பார்த்து தமக்கு வேண்டிய சாமான்களுக்கு எதிராகப் பொன்னை வைத்துவிட்டு அவ்விடம் விட்டு நீங்குவார்கள். அப்பால் கப்பல்களினின்றும், கார்த்த ஜீனியர்கள் இறங்கிவந்து, சாமான்களுக்கு ஈடாக வைத்திருக்கும் பொன்னைப் பார்த்து திருப்தியடைந்தால் எடுத்துக்கொள்வார்கள். இல்லாவிட்டால் எடுத்துக்கொள்ளாது மறுபடியும் கப்பல்களுக்குத் திரும்பிவிடுவார்கள். பிறகு ஆப்பிரிக்கர் அவ்விடம் வந்து அதிகப் பொன்னை வைத்து, வியாபாரிகளைத் திருப்திசெய்வார்கள். இப்படி இரண்டு ஜாதியாரும் ஒருவரோடொருவர் ஒரு வார்த்தைகூடப் பேசாது பண்டமாற்றிக் கொண்டனர். ஆனால் இவ்வியாபாரத்தில் ஒருவர் மற்றொருவரை ஏமாற்றி மோசஞ்செய்வதில்லை. கார்த்தஜீனியர்கள், சில வேளை, ஆப்பிரிக்காவிலுள்ள காப்பிரிகளைக் கொள்ளைகொண்டு, அவர்களை கிரீக்கர்களுக்கும் உரோமர்களுக்கும் அடிமைகளாய் விற்றுவிடுவது வழக்கம்.

ஒருகாலத்தில் கார்த்தேஜ் நகரம் மிகவும் பிரபலமடைந்து உலகிற்கெல்லாம் அதிபதியாய்விடுவதுபோல் விளங்கிற்று. ஆனால் அப்பதவியை அடையவொட்டாது, உரோம தேசம் அதனோடு ஒரு நூற்றாண்டுகாலம் போர்புரிந்து, உன்னதபதவியைக் கைப்பற்றிக்கொண்டது. போரில் பராக்கிரம செயல்கள்

பல, இருதிறத்தாராலும் செய்யப்பட்டன. உரோமரை எதிர்த்து நின்ற சேனபதி உலகெங்கும் புகழ்பெற்ற வீரன். ஆயினும் விதிப்பயனல் கார்த்தஜீனியர் தோல்வியடைந்தனர். இது, உரோமர்களின் கலைகளும் நாகரிகமும் ஐரோப்பிய கண்டமெங்கும் பரவி பின்னால் கிறிஸ்தவமதம் பரவுவதற்கு பெரியவோர் சாதனமாயிருந்தது.

## கிரீஸ்.

## கிரீக்கர்களும் கிரீஸ் நாடும்.

கிரீஸ்தேச படத்தைப் பார்ப்போமானல், அதை மலைகளும் கடலும் பல வேறு பிரிவுகளாக்கியிருப்பதை நாம் காணலாம். ஆதென்ஸ் (Athens) ஸ்பார்டா (Sparta) முதலிய நகரங்கள் ஒன்றுக்கொன்று சமீபத்திலிருந்தபோதிலும், பல தூரதேசங்களில் தனித்தனியிருக்கும் நகர்கள்போலவேயிருந்தன. அக்காலத்து ஜனங்கள், கடலைக் கடந்தும், மலையைக் குடைந்தும் அருகிலுள்ள நகரங்களையும் நாடுகளையும் ஒன்றுசேர்க்க வேண்டுமென்று ஆசைப்படவில்லை. இதனல்தான் கிரீஸ்தேசம் முழுவதும் ஒன்றுசேர்ந்து ஓரரசின் ஆட்சிக்கு உட்படாது, பற்பல நகரங்களும் அரசுகளும் அடங்கிய ஓர் தொகுதியாயிருந்தது. ஒவ்வொரு சிற்றரசும் தனக்குத் தோன்றிய சட்டங்களையும் நீதிகளையும் அனுசரித்து வந்தது. இச்சிற்றரசுகள் ஒன்ருெடொன்று சதாகாலமும் சண்டையிட்டுக்கொண்டிருந்தபடியால், அயல்நாட்டரசர்கள் தம்மீது படையெடுத்து வந்தபொழுது அவர்களைத் தடுத்து எதிர் நிற்க வலியற்றவர்களாயிருந்தன. ஆனலும் பாரஸீகர்கள் படையெடுத்து வந்தபொழுது, இவைகளெல்லாம் ஒன்றுகூடி எதிரியைப் பஞ்சாய்ப் பறந்தோடச் செய்தன.

இங்கிலாந்து, ஸ்காட்லாந்து, ஐர்லாந்து முதலிய நாடுகளிலுள்ளோர்கள் வெவ்வேறு சிறப்பிலட்சணங்களோடிருக்கிருர்கள். அவர்கள் ஒருவரோடொருவர் பல நூற்ருண்டுகளாய் ஒன்று வாழ்ந்தும் அவர்களின் ஜாதி லட்சணங்கள் இன்னும் அவர்களை வெவ்வேறு வர்க்கத்தார்களென்றே சான்று காண்பிக்கின்றன.

பண்டைக்காலத்தில் கிரீஸ்தேசத்தில் வடபாகத்திலிருந்தவர்கள் ஓரினத்தவர்; தென்பாகத்திலிருந்தோர் மற்ருேரினத்

தார். இவர்களின் குணலட்சணங்களும் வெவ்வேறாயிருந்தன.

அதீனிய நகரத்துள்ள குலமகன், பரிசுத்தமாயும் ஒழுங்காயும் ஆடை யணிந்து, சங்கீதம் கவித்வம் சிற்பம் முதலான கலைகளைக் கற்பதில் மிக்க அவாவுள்ளவனாயிருப்பான். அன்னியன் எவனாவது வந்தால் அவனோடு பேசுவதிலும், தன் சினேகிதர்களுடன் நகரமண்டபத்தி லுட்கார்ந்து பல விஷயங்களை ஆராய்ச்சி செய்வதிலும் நிரம்ப ஆசைகொண்டிருப்பான். கண்ணுக்கினிமையான பொருள்களைக் கண்டு களிப்பான். செவிக் கினிமையான பண்ணொலிகளைக் கேட்டு ஆனந்திப்பான். அற்ப பொருள்களையும், அவலட்சணமுள்ள தோற்றங்களையும் கண்டால் அவனுக்கு அருவருப்பு.

ஆனால் ஸ்பார்டா நகரத்தானோ, பேசுவது அத்தியாவசியமா யிருந்தாலொழிய வாய்திறக்கமாட்டான். வாய்திறந்தாலும் சுருங்கச்சொல்லி முடித்துவிடுவான். அவனுக்கு லளிதவித்தைகளிற் பிரியம் சிறிதுமில்லை. உடம்புக்கு நேரும் துன்பங்களைப் பொறுப்பதும், போரில் புறங்கொடாதிருத்தலுமே மனிதர் மெச்சத்தக்க குணங்களென்று கொண்டிருந்தான். அதீனியர்களை மூடர்களென்றும், பயனற்ற வழிகளில் பணத்தையும் பொருளையும் வீணாகச் செலவழிப்பவர்களென்றும் எண்ணியிருந்தான். நாகரிகமற்ற ஸ்பார்டன் தன்னுடைய நாணயங்களையெல்லாம் இரும்பினாலேயே செய்தான். ஏனெனில் அப்பொழுதுதான் பணத்தின்பேரில் ஒருவரும் அதிக ஆசைகொள்ளார் என்றெண்ணினான். சினேகிதர்களுக்குத் தன் வீட்டில் விருந்திடமாட்டான். மற்றவர்களோடு, தானும் பொது அன்னசத்திரம்போன்ற ஒருவிடத்தில், பருமட்டான உணவைச் சாப்பிடுவான்.

இப்படி கிரீக்கர் வெவ்வேறு லட்சணங்களோடிருந்த போதிலும், அவர் யாவரும் ஒரேபாஷையைப் பேசினர்; ஒரேவிதமாய் உடையுடுத்தனர்; ஒரே மதக்கொள்கைகளை யனுசரித்தனர்; திருவிழாக்களில் பல நகரத்தாரும் ஒன்றுகூடி மகிழ்ந்தனர்.

அழகிய பொருள்களைக் கண்டு களித்தலே இவ்வுலகிற் பிறந்தார் பெறக்கூடிய பெரும்பேறு என்ற உண்மையை உலகிற்குப் போதித்த உத்தமர்கள் அதீனியர்களே யாவர். அவர்

களின் சரித்திரத்தைத் தெரிந்துகொள்வது நமக்கு அதிய வசியம்.

## அதீனியர் குடியிருந்த அட்டிக்கா (Attica) நாடு.

தற்காலத்திலும் கிரீஸ்தேசம் வாசம் செய்வதற்கு மிகவும் வசதியுள்ள நாடாயிருக்கிறது. ஆனால் பல நூற்றாண்டுகளுக்குமுன் அந்நாடு இதைப்பார்க்கிலும் அதிக சௌகரியமாயிருந்ததென்று அறிஞர் சொல்லுகிறார்கள். அங்கு மழைகாலம் நீடித்திருந்ததில்லை. சீதள நாட்கள் மிகச் சிலவேயாம். வேனிற்காலத்திலும் குளிர்ந்த கடற்காற்று வீசியதால், அதீனியர்கள் மிக ஆரோக்கியமாய் விளங்கினர்.

நிலம் கடினமில்லாது கோதுமை தானியம் முதலிய பொருள்களை விளைவித்தது. மலைச்சார்பிலெல்லாம் செழித்த தோட்டங்கள் நிறைந்திருந்தன. மீன் ஏராளமாகக் கிடைத்தது. கரையோரத்திற் குடியிருந்த வலையர் மீன்களைச் சந்தைக்குக் கொண்டுபோய், தமக்கு வேண்டிய வேறு சாமன்களுக்கு ஈடாகக் கொடுத்தனர். அதீனியர்கள் தேகத்திற்கு ஆரோக்கியங் கொடுக்கக்கூடிய உணவையே உட்கொண்டார்கள். நாம் இப்பொழுது உபயோகிக்கும் தேயிலைக்குப் பதிலாக, திராட்சைரசத்தை உபயோகப்படுத்தினார்கள். வெண்ணைக்குப் பதிலாகவும், விளக்கெரிப்பதற்கும் ஒலிவை (Olive) யெண்ணையை உபயோகித்தார்கள். சர்க்கரைக்குப் பதிலாகத் தேனைச் சேர்த்துக்கொண்டார்கள். அத்திப்பழங்களும், ஆட்டுப்பாலும் காய்கறிகளும் ஏராளமாய்க் கிடைத்தன. அத்தேசத்திற்கு மாமிச உணவு அவசியமில்லையாதலால், ஜனங்கள் ஆண்டிற்கொருமுறையே, மாமிசம் புசித்தனர்.

இப்பொழுது அதீனிய நகரத்தின் வீதிகளில் செல்வதாய் எண்ணிக்கொள்ளுவோம். தற்காலத்தில் சுவரெங்கும் ஒன்றின்மேலொன்றாய் ஒட்டிக்கிடக்கும் அறிக்கைகளும் விளம்பரங்களும் அங்கு காணோம். வெள்ளிய சலவைக் கல்லாற் செய்த உருவங்களின்பின்னே அழகிய பூத்திரள்களும் மரக்கிளைகளும் அவ்வுருவங்களை அலங்கரிக்கின்றன. கனவான்கள் பலர் காலில் செருப்பில்லாது நடந்து செல்லுகிறார்கள். தலைமயிர் மூடப்படாது வெளியாயிருக்கிறது. பெரும்பாலும் அவர்கள் உடம்பிலொன்றும், அரையிலொன்றுமாக,

இரண்டு ஆடைகள் உடுத்தியிருக்கிறார்கள். வேலையாட்களது உடை; வலது கையையும் தோளையும் மூடாது விட்டிருத்தலால் நன்கு தெரியலாகும். செல்வாக்காற் சிறந்த சீமாட்டிகள் மெல்லிய பசுமையான ஆடையை யணிந்து இடுப்பில் கச்சைகட்டிக்கொண்டு செல்லுகிறார்கள். கையில் நெருப்புக்கோழியின் இறகாற் செய்யப்பட்ட விசிறியை வைத்திருக்கிறார்கள்.

ஆனால் இவ்வளவெல்லா மிருந்தும், வீதிகள் அதிக அகலமாயில்லாது சுருங்கியிருப்பது அதிசயமாகவே யிருக்கிறது. பாதைகளில் கற்கள் பரவப்படாது மேடும் பள்ளமுமாயிருத்தலால், வண்டிகள் போகும்பொழுது அங்குமிங்கும் அசைகின்றன. இதை நினைக்கும்பொழுது, எவ்வளவோ உயர்ந்த விஷயங்களையெல்லாம் உலகிற்குப் போதித்த கிரீக்கர்கள் ரஸ்தாக்கள் செய்யும் விதத்தை அறிந்தார்களில்லையே என்று விசனப்படுகிறோம்.

சந்தையிடத்திற்குச் சென்று பார்ப்போமானால் "கொடுப்போர் ஓதையும், கொள்வோர் ஓதையும்" கேட்கப்படவில்லை. ஒவ்வொருவரும் சாவகாசமாய் விற்று வாங்குகிறார்கள். சந்தை கூடுமிடத்தைச் சுற்றி ஒரு பெரிய மண்டபம் அழகிய சலவைக் கற்றூண்களோடு விளங்குகின்றது. அதன் பின்புறத்துச் சுவரில், பல வர்ணங்களாலும் பதுமைகள் வரையப்பட்டிருக்கின்றன. அங்கு அதீனியர்கள் இளைப்பாறுவதற்கு வந்து, அங்குள்ள இனிய பொருள்களைக் கண்டு களித்தார்கள். இங்குதான் இறைவன் அருள்பெற்ற பால் (St. Paul) என்னும் தெய்வீகன் கற்ற பல பெரியோரோடு வாதம் செய்தான்.

இனிமேல் கடைத்தெருவிற்குச் செல்வோம். அதனருகிற் செல்லும்பொழுதே சப்தம் அதிகமாயிருக்கிறது. ஒவ்வொரு கடைக்காரனும் தன்னிடமுள்ள சாமான்களைப் புகழ்ந்து சப்தம் போடுகிறான். இவ்விடத்தில் அதீனிய கனவான்களை வேலையாட்களுடன் பார்க்கிறோம். இத்தேசத்தில் பெண்பாலர்களைக் கடைவீதியில் காண்பதரிது.

ஓரிடத்தில் ரொட்டியும் மீனும் விற்கப்படுகின்றன. மற்றோரிடத்தில் பழங்களும் காய் கறிகளும் வைக்கப்பட்டுள்ளன. வேறோரிடத்தில் எண்ணெயும் திராட்சைரசமும் இருக்

கின்றன. இவைகளுள் தமக்கு வேண்டிய சாமான்களை வாங்கி, அடிமைகளிடம் கொடுத்து வீட்டிற்கனுப்பிவிட்டு, அதீனிய கனவான்கள், நாவிதன் கடைக்குச் சென்று, அங்கு வந்த தம் நண்பர்களுடன், அன்றைய சமாசாரங்களையும் மற்றும் பல விஷயங்களையும் பற்றிப் பேசிக்கொண்டிருப்பார்கள். அப்பால் க்ஷவரம் செய்துகொண்டு விளையாட்டிடத்திற்குச் செல்வார்கள்.

அதீனிய நகரின் மத்தியில் இருநூறடி உயர்ந்திருந்த ஓர் குன்று கடவுள் அருள்பெற்ற விடமென்று கருதப்பட்டது. இங்குதான் அதீனி (Athene) முதலாகிய அன்புள்ள தேவதைகளுக்கெல்லாம் ஆலயங்கள் கட்டியிருந்தனர். இங்கு அமைத்திருந்த, அதீனி தேவதையின் ஆலயத்திற்கு மிக்க அகலமுள்ள விசித்திரமான சலவைக்கல் படிவழியாக ஏறிச் செல்லவேண்டும். இக்கோவில் பண்டைக்காலத்தில் மிக்கப் பிரசித்திபெற்ற ஒரு பெரிய சிற்பியினுல் கட்டப்பட்ட தென்பர். தேவதையின் கையிற் கொடுக்கப்பட்ட ஒரு பெரிய ஆயுதம், நெடுந்தூரத்திற்கப்பாலும், வெயிலிற் பளபளவென்று பிரகாசித்தது. இதுதான் அதீனிய நகரம் உன்னத நிலையையடைந்திருந்த காலமாகும்.

இனி அதீனியர்களின் வீடுகள் எப்படியிருந்தனவென்று ஆராய்வோம். அவர்கள் அரண்மனைகளைக் கட்டி வாசம் செய்யவில்லை. தாங்கள் தெய்வத்தை வழிபடும்பொருட்டு, மிக ஆடம்பரமாகக் கொண்டாடினுலும், வீடு கட்டுவதில் அதிகப் பொருள் செலவு செய்யவில்லை. வீதிவழியாய்ச் செல்லும்பொழுது பெரும்பாலும் வீடுகளுக்கு முன்னேயுள்ள சுவர்கள்தான் காணப்படும். அச்சுவர்களிலும் சன்னல்கள் கிடையாது. சில விடங்களில் சுவர்களினின்றும் தட்டியிறக்கி, கடைக்காரர்கள் சாமான்கள் விற்பார்கள். வீட்டுக்குள் நுழைந்தால் முதலில் ஒரு நீண்ட அறை காணப்படும். அப்பால் வெளியாயுள்ள ஒரு முற்றம் தோன்றும். இம்முற்றத்தில் தேவர்களுக்குப் பலி கொடுப்பதற்காக ஓர் பலிப் பீடம் கட்டப்பட்டிருக்கும். அதற்கு வலப்புறமும் இடப்புறமும் குகைபோற் சிறிய படுக்கையறைகள் இருக்கும். இவைகளுள் பெரிய அறை ஒன்றில் அதீனியர்கள் தம் நண்பர்களுக்கு விருந்திடுவார்கள். பெரிய பிரபுவின் வீட்டிலும்

இரண்டொரு நாற்காலியும் சில மேஜைகளும்தவிர, வேறெதையும் காண்பதரிது. விருந்தாளிகள் இல்லாதபொழுது, வெளியாயுள்ள முற்றத்தையே உண்பதற்கும் உறங்குவதற்கும் உபயோகிப்பார்கள். முற்றத்திலிருந்து வீட்டின் தனியறைக்குப் போவதற்கு ஒரு வழியுண்டு. அங்குதான் பெண்பாலர்கள் இருப்பார்கள். அன்னியர் யாரும் அங்கு பிரவேசிக்கக்கூடாது. அந்தப்புரத்திற்குப் பின்னால் ஓர் அழகிய தோட்டமுண்டு.

பெண்பாலர், சமையல், தையல், நெசவுமுதலிய வேலைகளில் தேர்ச்சி யடைந்திருந்தார்கள். அவர்கள் தம் வீட்டு அடிமைகளை அன்போடு நடத்திவந்தார்கள். பெரும்பாலும் அவர்கள் தம் காலத்தை, குழந்தைகளுடன் கொஞ்சிக் குலாவிக் கழிப்பார்களேயன்றி வெளியே வேடிக்கை பார்க்கப் போகமாட்டார்கள். நேரம் மிகுதியாயிருந்தால், தோழியருடன் கூடிப் பேசுவதும், இசை கருவிகளால் பாடுவதும் வழக்கம். தற்காலத்தில், நாகரிகமுள்ள தேசத்துப் பெண்பாலரைப்போல, தலைமயிரை நாற்புறமும் பறக்கவிடாது, இப்பெண்கள், மயிரை நன்றாய்ச் சீவிப் பணித்து கொண்டை போட்டிருத்தல் கவனிக்கத்தக்கது.

கிரீக்க பிள்ளைகள், ஏழு வயதாகும்வரையும் பெண்பாலர்களோடு வளர்ந்து, பொம்மைகள் வைத்து விளையாடுவார்கள். அப்பால் பள்ளிக்குச் சென்று பழைய புராணக் கதைகளைக் கேட்டு மகிழ்வார்கள். முதலில் படிக்கக் கற்றுக்கொண்டு பின் எழுதப் பழகுவார்கள். முதன் முதல், தாள்களிலும் புத்தகங்களிலும் எழுதாது, மேஜையில் மெழுகு பரப்பி அதன்மேல் எழுதுவார்கள். உபாத்தியாயர்கள் முதலில் இலேசாக எழுதி பின் மாணுக்கனது விரலைப் பிடித்து, அட்சரங்களை அழுத்தி யெழுதச் செய்வார்கள். எல்லாப் பிள்ளைகளுக்கும் சங்கீதம் பயிற்றியபடியால், பழம் பாட்டுக்களை பண்ணோடு பாடுவதில் அவர்கள் மிகவும் மேம்பட்டிருந்தனர். அறிவை வளர்ப்பதோடு, தேகாப்பியாசத்தையும் முக்கியமாகக் கவனித்தார்கள். பிள்ளைகளுக்கு ஓடவும் ஆடவும், நீந்தவும், மல்யுத்தம் செய்யவும் கற்றுக்கொடுத்தார்கள். அதீனிய பிள்ளைகள் ஒவ்வொருவனுக்கும் கல்விபயிற்றுதல் தந்தையின் கடமையாய் முடிந்தது. பிள்ளைகள் "துள்ளித்திரி

கின்ற வேளையில், அவர் துடுக்கடக்கிப் பள்ளிக்குவையாத" பிதாவை, வயோதிக பருவத்தில், பிள்ளைகள் காப்பாற்ற கடமைப் பட்டவர்களல்லர் என்று ஓர் சட்டம் அக்காலத்திலிருந்தபடியால், ஒவ்வொரு பிதாவும் தன் பிள்ளையை பள்ளியில் படிக்கவைத்தான்.

## ஒரு கிரீக்க வீரனின் வரலாறு.

தெமிஸ்டொக்ளிஸ் (Themistocles) அரிஸ்டைடிஸ் (Aristides) என்னும் பெயர்கொண்ட கிரீக்கர்கள், சிறுபிராயத்தில் ஒன்றாய்ப் பள்ளியில் படித்து வளர்ந்து, இருவரும் ஒரேவிதமாய் உன்னத நிலைமைக்கு" வந்து சேர்ந்தார்கள். ஆனால் தெமிஸ்டொக்ளிஸ், தன்னைக் கண்டோர் சந்தோஷித்துப் பெருமைப் படுத்தவேண்டுமென்றே, ஒவ்வொரு காரியத்தையும் செய்துவந்தான். மற்றவனோ, தானே, கற்று புத்திமானாகிக் களிப்புறும்பொருட்டே, எல்லாக் காரியங்களையும் செய்தான். இவர்கள் இருவரும் உன்னத நிலைக்கு வந்து, ராஜாங்கத்திற்காக உழைத்தபொழுதுகூட, தெமிஸ்டொக்ளிஸ் ஜனங்கள் தன்னைப் பாராட்டி மெச்சுரை சொல்லுவதையே முக்கிய நோக்கமாகக் கருதினான். அரிஸ்டைடிஸோ, தன் மனச்சாட்சிக்கு விரோதமின்றி நடந்து, குடிகளின் விசுவாசத்தையும் அன்பையும் பெற்றான். அவனுக்கு இதனால் **சத்தியவந்தன்** என்று பெயர் கிடைத்தது.

இப்படித் தன் சினேகிதனது கீர்த்தியைக்கண்டு அழுக்காறுகொண்டு, தெமிஸ்டொக்ளிஸ் அவனுக்குக் கேடு விளைவிக்க முயன்றான். சஞ்சல புத்தியும் பேதமையுமுடைய அதீனியரின் மனத்தை, தன் இன்சொற்களால் கவர்ந்து அரிஸ்டைடிஸை நாட்டைவிட்டு அவர்கள் துரத்தினாலல்லது, நலம்பெற முடியாதென்று நம்பும்படி செய்தான். எவனாவது தான் அதியுன்னத பதவிக்கு வரவேண்டுமென்ற பேரவாவுடையவனென்று ஜனங்களுக்குத் தெரிந்தால், அவர்களுள் ஆறாயிரவர் சேர்ந்து அப்படிப்பட்டவனை பத்து வருஷகாலம் தேசத்தினின்றும் துரத்திவிடலாமென்று அதீனிய நாட்டில் ஒரு சட்டமிருந்தது. வாக்கு சாதுரியமாகவும், ஜனங்களுக்குச் சரியென்று தோன்றும்படியும் பேசக்

கூடியவனுக்கு ஜனங்கள் தான் சொல்லுவதை நம்பும்படி செய்வது அசாத்தியமான காரியமல்ல. அப்படியே, தெமிஸ்டொக்ளீஸும், அரிஸ்டைடிஸின்பேரில் ஜனங்களுக்கு அவநம்பிக்கையும் அருவருப்பும் உண்டாகும்படி செய்துவிட்டான். அரிஸ்டைடிஸையும் நாட்டினின்றும் துரத்திவிட்டார்கள்.

அவனைத் துரத்தும்பொருட்டு, ஆறுயிரம் ஜனங்கள் ஒன்று கூடி, தங்கள் சம்மதிச் சீட்டுகளைக் கொடுத்தபொழுது, அரிஸ்டைடிஸ் இன்னுனென்று தெரியாத நாட்டுப்புறத்தான் ஒருவன், அவனருகில் வந்து, "அரிஸ்டைடிஸ் என்னும் பெயரை, இச்சீட்டில் எழுதிக்கொடு." என்று கேட்டான். "நண்பனே, அவன் உனக்கு என்ன தீங்கு விளைத்தான்? நீ அவனுக்கு ஏன் தீங்குசெய்கின்றுய்?", என்று அரிஸ்டைடிஸ் அப்பேதைக் குடியானவனைக் கேட்க, அவன் "எனக்கு அவனென்றும் தீமைபுரியவில்லை. ஆயினும் அவனை எல்லோரும் சத்தியவந்தன், என்று சொல்லுவது எனக்குப் பொறுக்கவில்லை." என்று மறுமொழி கூறினன். இதைக்கேட்டு, தன் பெயரையே அரிஸ்டைடிஸ் விசனத்தோடு சீட்டில் எழுதிக் கொடுத்தான்.

இது நடந்து மூன்று வருஷங்களுக்குப் பின்னர், பாரஸீகர்கள், கிரீக்கர்களின்மேல் படையெடுத்து வர, அரிஸ்டைடிஸ் நாட்டிலிருந்தால், தாங்கள் தைரியமாயிருக்கலாம் என்று எண்ணியிருந்த அதீனியர்களின் இஷ்டத்திற்கொப்ப, தெமிஸ்டொக்ளிஸும் மறுவோர் சட்டத்தினல் நாட்டிலிருந்து துரத்தப்பட்டவர்கள் மறுபடியும் திரும்பி வரலாம் என்று ஏற்படுத்தி அரிஸ்டைடிஸைத் திரும்பி நகரத்திற்கு வரச் செய்தான்.

தான்பட்ட கஷ்டங்களைப் பாராட்டாது, தனக்குத் தீங்கிழைத்தவர்களது பிழைபொறுத்து அதீனியர்களை இக்கஷ்டத்தினின்றும் விடுவித்துக் காப்பாற்றுவதையே முக்கிய நோக்கமாகக்கொண்டு, அரிஸ்டைடிஸ் திரும்பிவந்து தன் னுட்டிற்காக உழைத்தான்.

பாரஸீகர்களுக்கும் கிரீக்கர்களுக்கும் நடந்த ஒரு பெரும் கடற்போரில், பாரஸீகர்களின் யுத்தகப்பல்கள் மிகப் பெரியவையாயும் ஏராளமாயும் இருந்தமையால், அவர்கள் தங்க

ளுக்கே வெற்றி நிச்சயம் என்றெண்ணியிருந்தார்கள். கிரீக்க தேசத்துக்கு அருகிலிருந்த சமுத்திரத்தில், கிரீக்க கப்பல்களைச் சூழ்ந்துகொண்டு அவைகளைத் தோற்கடித்து அமிழ்த்திவிடுவதாயும் எண்ணியிருந்தார்கள். ஆனால் இரவில், அரிஸ்டைடிஸ் ஒரு சிறு படகில் ஏறி, பாரஸீகர்களின் கப்பல்கள் நடுவே சென்று, அவைகளைக் கடந்து, கிரீக்கர்களுக்குண்டான ஆபத்தை அவர்களுக்குத் தெரிவித்து, அவர்களை எதிரிகளோடு போர் புரிவதற்குச் சித்தமாயிருக்கும்படி எச்சரிக்கை செய்தான். இப்படிச்செய்ததில் அவன் உயிருக்கு அதிக ஆபத்து நேருவதாயிருந்தது.

ஸலேமிஸ் (Salamis) என்னும் தீவிற்கு அருகே, கரையிலிருந்த ஒரு சிறிய குன்றின் அடிவாரத்தில், பாரஸீக சக்ரவர்த்தி, நடக்கப்போகிற போரைத் தான் பார்ப்பதற்காக உட்கார்ந்திருக்கும்படி, அழகிய ஓர் ஆசனத்தைச் செய்வித்தான். தீவிற்கும் மூலபூமிக்கும் நடுவேயிருந்த ஜலசந்தியில் போர் புரிவது எண்ணிறந்த பாரஸீகர்களுக்கு மிகவும் கடினமாயிருந்தது. கிரீக்கர்களோ அக்கடலிற் போவதிலும் வருவதிலும் நன்றாய் வழக்கப்பட்டிருந்தவர்களாதலால், பாரஸீகர்களை அலங்கமலங்க அடித்து, அவர்கள் கப்பல்களைத் தப்பியோடாமற் பிடித்து, அவைகளில் இருநூறுக்கு மேற்பட்டவைகளை உடைத்து ஆழ்த்திவிட்டார்கள். தப்பிப்பிழைத்தவர்களும் கடிது புறங்காட்டியோட, பாரஸீக சக்ரவர்த்தி துக்கத்தினால் மனச்சோர்வுற்று, தன்னுடையைக் கிழித்துக் கொண்டு தானும் ஒருபுறம் ஓடினான்.

"ஜலசந்தியாய ஸலேமிஸின் புருவம்போல் நின்ற பாறை மீது, பாரஸீக அரசன் பகிரங்கமாய் நின்று தன் படைவீரர்கள் செயலைப் பார்த்திருந்தான். மரக்கலம் ஆயிரம், மனிதர் பல்வகுப்பார் மலையினடியில் மாண்புடன் விளங்கினர். இருளொழிந்தபொழுது எண்ணிறந்து விளங்கிய இருபெருஞ் சேனை பொழுதுசென்றடையுமுன் அழிந்தொழிந்ததுவே!"

இப்போரில் கிரீக்கர்கள் பெற்ற வெற்றியானது அவர்களை அபாயத்தினின்று தப்புவித்ததோடு, பிற்காலத்தில் அவரது நாகரிகத்தைக் கடைப்பிடித்த ஐரோப்பிய ஜாதியாரும் பாரஸீகர்களின் கொடுங்கோன்மைக்கும், சீரழிந்த ஒழுக்கத்திற்கும் உள்ளாகாது பிழைக்கச்செய்தது.

கிரீக்கர்கள் இவ்வெற்றிகொண்டபிறகு, தெமிஸ்டோக்ளிஸையே பெரியோனாகச் சிலகாலம் கொண்டாடிவந்தனர். பின்னர் அவனைப் பழித்துக்கூறிய சில கதைகளை அவர்கள் நம்பி, அவன் நாட்டிற்குத் தலைவனாயிருக்கத் தகாதென்று தீர்மானித்தனர். அச்சமயத்தில், அரிஸ்டைடிஸ், தனக்கு அவன் மேலுள்ள பழைய வெறுப்பையும் கோபத்தையும் பாராட்டாது, அவன்மீது ஜனங்கள் மறுபடியும் அன்புவைத்து சிறப்பிக்கும்படி பெரிதும் முயன்றான். குடிகள் தெமிஸ்டோக்ளிஸைக் கொன்றுவிட வேண்டுமென்றே தீர்மானித்திருந்தபொழுது, அவர்களை, அக்கொடிய எண்ணத்தை நிறைவேற்றாவண்ணம் தடுத்து, அவன் பிராணபயமில்லாமல் நகரத்தைவிட்டு வெளியே செல்லும்படியாகச் செய்ததும், சத்தியவந்தனாகிய அரிஸ்டைடிஸே ஆவான். இப்படி உன்னத தர்மத்தைக் கடைப்பிடித்து அவன் வாழ்ந்துவந்தான்.

## ஹோமர் சொல்லிய கதைகள்.

மஹாகவியாகிய ஹோமர் (Homer) இருந்த இடம் காலம் முதலியவைகளைப்பற்றி நமக்கு நன்றாய்த் தெரியாது. ஆனாலும் அவர் வயோதிகபருவத்தில் குருடாயிருந்தாரென்பது வதந்தி. அக்கவிபாடின காவியங்களே, ஐரோப்பாவிலுள்ள இலக்கியங்களுக்கெல்லாம் முந்தியவை.

அவர் காலத்துக்குப் பல நூற்றாண்டுகளுக்குமுன் நடந்த பெரிய ஆசிய கிரீக்க போரைப்பற்றியும், அப்போரில் ஆசியரின் மஹா நகரமாகிய ட்ராய் (Troy) அழிந்து தீக்கிரையானதைப்பற்றியும், அவர் பாடி, அது சம்பந்தப்பட்ட எல்லாக் கதைகளையும் ஒழுங்காய் ஒன்றுசேர்த்து, இலியட் (Iliad) என்னும் பெயர்கொண்ட ஒரு பெரிய காவியமாய்ச் செய்தார். அக்காவியத்தின் கதை பின்வருமாறு.

கிரீக்க அரசர்களுள் ஒருவனாகிய மேனலவன் (Menelaus) என்போன், சூரியகாந்திபோல் பிரகாசிக்கும் அழகு கொண்ட ஹெலனியா (Helen) என்னும் அதிரூபவதியைக் கலியாணம் செய்துகொண்டு வாழ்ந்தான். அம்மடந்தையைப் பிறர் அபகரிக்காது காப்பாற்றும்பொருட்டு, மற்ற கிரீக்க

அரசர்கள் எல்லோரும் மேனலவனுக்கு ஒத்தாசைபுரிவதாக வாக்களித்திருந்தனர். இது இப்படிநிற்க, ட்ராய் அரசனது குமாரனுகிய பாரிஸ் (Paris) என்பவன், ஹெலனியாவின் அழகைக் கண்டு அவள் மோகவலையிற் சிக்குண்டு, கபடசித்தமுடையவனுய், மேனலவன் அரண்மனைக்கு விருந்தாக வந்து, அச்சமயத்தில் அவளை அபகரித்துக்கொண்டு தன்னூர்போய்ச் சேர்ந்தான். தாங்கள் கூறிய உறுதிமொழி தவருதபடி, கிரீக்க அரசர்கள் ஹெலனியாவை மீட்டு அவள் கணவனிடம் சேர்ப்பிக்கும்பொருட்டு, படை சேகரித்து ட்ராய் நகரத்தின்மேல் போர் புரியச் சென்றூர்கள். கிரீக்கர்கள் தாங்கள் போருக்குப் புறப்படும்பொழுது, தாங்கள் திரும்பிப் பிழைத்துவர முடியுமோ, முடியாதோவென்று சந்தேகித்துக்கொண்டே, தங்கள் மனைவிமக்களிடம் மிகவும் விசனத்தோடு விடைபெற்றுச் சென்றனர். வீரர்கள் போருக்குப் புறப்படுகையில், தாங்கள் திரும்பிவருவது அசாத்தியம் என்றும், அப்படி ஒருவேளை திரும்பிவந்தாலும், அதற்குள் தங்கள் குழந்தைகள் வயதுமுற்றிப் பெரியவர்களாய் தங்களை முற்றிலும் மறந்துவிடுவார்கள் என்றும் எண்ணினர். பெண்டிர்களோ அச்சமயத்தில் தங்களுக்குண்டான விசனத்தை வெளிக்காட்டினுல், போருக்குச் செல்லும் தங்கள் புருஷர்களும்சகோதரர்களும் அதைரியப்பட்டு மனங்கலங்குவார்களென்று நினைத்து பொறுத்திருந்தனர். போருக்குரிய பிரயத்தனங்களெல்லாம் நடந்தானபிறகு, எல்லோரும் கப்பலேறி, ஆசியாகண்டத்திற்குச் சென்று, ட்ராய் நகரத்தைச் சேர்ந்தனர். தங்களுக்குச் சேனுபதியாக, அகமெம்னன் (Agamemnon) என்னும் கீர்த்திபெற்ற வீரனை நியமித்தார்கள். அவனைத்தவிரவும், அகில்லிஸ் (Achilles) என்னும் பேரழகுள்ள வீரனும் ஒடிஸ்ஸியஸ் (Odysseus) என்னும் மஹாபுத்திமானும் கிரீக்கர்களுக்குத் துணைநின்று சண்டைசெய்தனர்.

ட்ராய்நகரத்தை, கிரீக்கர்கள் பத்துவருஷகாலம் முற்றுகைசெய்து கடைசியில் ஒற்றுமையின்மையால் வலியிழந்த வரலாற்றை 'இலியட்' என்னும் காவியம் கூறியுள்ளது. ஒரு அழகிய அடிமைப்பெண்ணைப்பற்றி, அகமெம்னனும், அகில்லிஸும் சண்டையிட்டதால், அகில்லிஸ் மனம் வெறுத்து

போரில் யாதொரு சம்பந்தமுமில்லாமல், விலகியிருந்தான். இப்படி இவர்கள் பலங்குன்றவே, கிரீக்கர்களும் பின்வாங்க ஆரம்பித்தனர். அச்சமயத்தில் பாட்ரோக்ளஸ் (Patroclus) என்னும் கிரீக்கவீரன் கடைசி யொருமுறை ஆசியர்களோடு போர் புரியத் தீர்மானித்து, அவர்கள் பக்கத்துள்ள மஹா வீரனாகிய ஹெக்டர் (Hector) என்பவன் கைவாளால் மாண்டான். தனக்குப் பிராண சினேகிதனாயிருந்த பாட்ரோக்ளஸ் இறந்தான் என்பதை, அகில்லிஸ் கேள்விப்பட்டு, துக்கத்தினாலும் கோபத்தினாலும் ஆவேசம் கொண்டவனாய், போருக்குக் கிளம்பினான். போர்க்களத்தில், தன் நண்பனைக் கொன்ற ஹெக்டரைக் கொன்று, அவன் பிரேதத்தை தன் ரதத்தின் சக்கரத்தில் கட்டி இழுத்துக்கொண்டு சென்றான். மாண்ட வீரனின் பிதாவாகிய பிரயம் (Priam) என்பவன் இதைக்கண்டு மனமுருகி அகில்லிஸிடம் சென்று தன் மகனுடம்பை இரந்துகேட்க, அவ்வீரனும் அவன் வேண்டுகோளுக்கிணங்கி அதனைக் கொடுத்தான். ஹெக்டர் இறந்ததும் அவனை யடக்கம்செய்ததும், அவனுக்காக ட்ராய்நகரத்திலுள்ளோர் அனைவரும் புலம்பி வருந்தினதும், காவியத்தில் நன்றாய் விவரிக்கப்பட்டிருக்கின்றன.

ஹோமர் செய்த இரண்டாவது காவியம், ஒடிஸ்ஸியஸ் வீரன், பல நாடுகளுக்குச் சென்று, அங்காங்கு தனக்கு நேரிட்ட ஆபத்துகளினின்றும் தப்பி, பிறகு தன் சொந்த நாடாகிய இதாகா (Ithaca) வை யடைந்ததைப்பற்றிச் சொல்லுகிறது.

ட்ராய்நகரம் தீக்கிரையானபிறகு, ஒடிஸ்ஸியஸ் தன்னாட்டிற்குத் திரும்பிப்போகத் தீர்மானித்து, பன்னிரண்டு கப்பல்களைத் தயார்செய்து, அவைகளில் தன் ஜனங்களை யேற்றி, ஆசியாகண்டத்தின் கரையோரமாய்ச் சென்று, பத்தாண்டுகாலம் இங்குமங்கும் திசைதப்பித் திரிந்து, தன் ஜனங்களெல்லாரும் மாள, தான்மாத்திரம் ஊர்வந்துசேர்ந்தான். இக்காலத்தில் அவனுக்கு நேர்ந்த சம்பவங்களெல்லாம் மிக அற்புதமானவை. ஆனாலும் அவ்விடையூறுகளையெல்லாம் கடந்து, தன் நற்புத்தி கெடாமலும், தன் பலம் குன்றாமலும் திரும்பி வந்தான். அவைகளுள் இரண்டைப் பின்வரும் வரலாற்றில் சொல்லுவோம்.



அதீனிய நகரக்கோட்டை.

(1) ஒடிஸ்ஸியஸும் அவன் படைகளும், லோடஸ் (Lotos) என்னும் பெயருள்ள பழம் ஏராளமாய் விளைந்திருந்த ஒரு நாட்டைச் சேர்ந்தனர். கப்பல்களினின்றும் இறங்கி, சமீபத்திலிருந்த ஒரு தெளிவான குளத்தின் கரையில் தங்கி, சமையற்செய்து சாப்பிட்டானபிறகு, தங்களுள் மூவரை நாட்டிற்குள்ளே சென்று அங்குள்ள பிரஜைகள் எப்படிப்பட்டவர்கள் என்றறியும்படிக்கு அனுப்பினார்கள். இம்மூவரும் சென்று, அந்நாட்டிலுள்ளோரைக் கண்டு, அவர்கள் பிரஞ்ஞை தப்பி ஒன்றையும் கவனியாது, ஒருவேலையிலும் மனம் பொருந்தாது காலத்தை அவமே கழிக்கும் மூடர்களென்று தெளிந்தனர். அவர்களுக்கு இந்த லோடஸ் என்னும் பழத்தைத் தின்பதைத்தவிர வேறொரு அலுவலும் இல்லையென்று தோன்றிற்று. இதன் சுவை கண்டானொருவன், நினைவழிந்து, தன் கருமங்களை மறந்து, தான் ஒன்றுக்கும் உபயோகப்படாதவனாய் வீண்யோசனை செய்துகொண்டு இவ்வுலகுக்கு ஒரு வீண்சுமையாய்ப் போவது, இப்பழத்தின் குணம். நாட்டிற்

குள்வந்த மூன்று கிரீக்கர்களும் இப்பழத்தைத் தின்றவுடனே, தங்கள் பெண்டு பிள்ளைகளை மறந்து, கப்பல்களுக்குத் திரும்பிச் செல்லும் எண்ணம் அற்றவர்களாய் அந்நாட்டிலேயே தாங்களும் இருந்துவிடுவதாய்த் தீர்மானித்தனர். இது ஒடிஸ்ஸியஸுக்குத் தெரிந்தவுடன், அவன் அவர்களைப் பாசங்களால் அசையாவண்ணம் கட்டி, அப்பேதை ஜனங்களினின்றும் பிரித்து, பரபரவென்று கடற்கரைக்கு இழுத்துவந்து, கப்பல்களிலேற்றி, தன்னாட்கள் மற்றெவரும் இம்மாயவலையிற் சிக்காமுன்னர், பாய்விரித்து வேறிடம் சென்றான்.

"செந்நிறங்கொண்ட குடதிசையடைந்து, நலந்தரு கதிரவன் நன்கு விளங்கினன். மலைவெளிவாயிலாய் விரிந்து பரந்த மைதானமான்து மாண்புடன் விளங்கிற்று. வளைந்த பள்ளத்தாக்கும் வளமிகுந்த புற்றரையும் சூழ்ந்த வெளிகள் பூக்களுடன் அலங்காரமாய்த் தோன்றின. மலர்மீது பட்டு மாண்புடன் விளங்கிய கதிரவன் ஒளியில் வெளுத்த முகத்தினராய் அந்நாட்டுமாக்கள் மாற்றமின்றிய தோற்றமுடைய அம்மைதானத்திலிருந்து வெளிவந்தனர். இம்மாந்தரோ அபினியுண்டு அந்நாட்டில் அமர்ந்திருப்பவர். மயக்கும் இயல்புடைய மாயச்செடி (Lotos) யின் கிளைகளைக் கொணர்ந்து ஒவ்வொருவனுக்கும் ஒவ்வொன்றுதவினர். அப்பழச்சுவை கண்ட பான்மையாளர்க்கு அண்மையில் முழங்கிய திரையொலி சேய்மையில் முழங்கும் சப்தம்போன்றது. தன்னுடனுள்ளோர் மொழிந்த மொழிகள் நலிந்து மெலிந்து கிணற்றுள் ளொலிபோல் கேட்கப்பட்டன. தூக்கத் தாழ்ந்தாற்போன்று விழித்திருந்த அம்மாந்தர்க்கு இவ்வொலியே இனிய இசையாயிற்று. 'இருபெருஞ் சுடர்க்கும்' இடையேயிருந்து, கடற்கரைமீது களிப்புடன் இருந்தனர். அன்பு மிக்குடைய அன்னையையும் பிதாவையும், 'குழலும் யாழும் அமிழ்தும் குழைத்த மழலைச்சொல்லுடை மைந்தர் தம்மையும்', நினைந்து நினைந்து நெஞ்சம் உருகினர். எனினும் கடற் பரப்பினையும் கடுந்திரையினையும் கண்டு வெருண்டு, செழித்த தம்நாடு சேய்மையிலுள்ளதால், அலைதலை நீத்து அமைந்திருக்க நினைந்தனர்."

(இஃது, ஆங்கில மஹாகவியாகிய டென்னிஸன் (Tennyson) இயற்றிய ஒரு பாடலின் மொழிபெயர்ப்பு.)

(2) இன்னும் மற்றொரு சமயத்தில் ஒடிஸ்ஸியஸும் அவன் பண்டகளும் ஒரு தீவிற்குச் சென்று அதனரசனை வாயுதேவனது (Eolus) அருள்பெற்று, அவனரண்மனையில் ஒருமாதம் தங்கியிருந்தார்கள். வாயுதேவன், ஒடிஸ்ஸியஸின் மஹாவீரச்செயல்களைக் கேட்டு வியப்புற்று, அவன் தன் தேசத்துக்குச் சுலபமாய்ச் செல்லும்பொருட்டு மேல்காற்றை மாத்திரம் அடிக்கச்செய்து, வாடை தென்னல் முதலிய காற்றுகளை அடிக்காமலிருக்கும்படி, ஒரு பையில் போட்டடைத்து, அப்பையை ஒடிஸ்ஸியஸிடம் கொடுத்து அதை ஊர்போய்ச் சேரும்வரைக்கும் திறவாதிருக்கும்படி புத்தி சொல்லி யனுப்பினான்.

மேல்காற்று கப்பல்களை நன்றாய் ஓட்ட, ஒன்பது நாட்களுள் ஒடிஸ்ஸியஸ் தன்னுடாகிய இதாகாவை நெருங்கினான். அப்பொழுது தான் சிரமத்தினால் களைப்புற்று சற்று கண்ணயர, அவன் சேவகர்கள் அவன் கொண்டுவந்த பொருள்களை அபகரித் தெடுத்துக்கொள்ள இதுதான் நல்ல தருணம் என்று தீர்மானித்து, பைக்குள் இருந்தன கடுங்காற்றுகள் என்று உணராது, அதில் பணம் காசு உண்டென்று நினைத்து அதைத் திறந்துவிட்டார்கள். அத்தருணமே அடைபட்டிருந்த காற்றுகள் வெளிக்கிளம்பி, அதிவேகத்தோடு எல்லாத்திக்குகளிலும் வீச, கப்பல்கள் இதாகாவைச் சேராது பற்பல இடங்களில் சிதறிப்போயின.

இப்படி தன் சேவகர்களின் அறிவின்மையால் ஒடிஸ்ஸியஸ், மறுபடியும் கஷ்டத்துக்குள்ளாகி அதிசிரமப்பட்டு, கடைசியில் தன்னூர்போய்ச் சேர்ந்தான். அங்கேயும் இவன் கஷ்டங்கள் முடியவில்லை. இவன் பிச்சைக்காரன் வேடந்தரித்து தன்னரண்மனையை யடைந்தபொழுது, அங்கு தன் மனைவியை மணம்புரியும் விருப்பத்தோடு வந்த பலவரசர்கள் அவளிணங்காமையால், அரண்மனையிலேயே தங்கி அவளைத் தொந்தரவு செய்துகொண்டிருந்ததைக் கண்டான். இது இப்படிநிற்க, ஒடிஸ்ஸியஸின் புத்திரன், தன் தாய் இவ்வாறு உபத்திரவப்படுவதையும், தன் தகப்பன் இருபது வருஷ காலமாய் திரும்பி வாராதிருத்தலையும் கண்டு துக்கித்து, தகப்பனைத் தேடி மீட்டுவரும்பொருட்டு, கிரீஸ் தேசத்தில் நாடு நாடாய்த் திரிந்துகொண்டிருந்தான்.

ஒடிஸ்ஸியஸின் மனைவியாகிய பெனிலொபியோ (Penelope), தன்னை இருபது வருஷகாலமாய் மணம் புரியும்படி தொந்தரவு பண்ணிக்கொண்டிருந்தவர்களெல்லாரையும் ஏமாற்றிக்கொண்டே வந்தாள். தான் தன் மாமனுக்கு அதிநேர்த்தியான ஒரு அங்கியை நெய்து முடிக்கும்வரை, ஒருவனையும் மறுகணவனாக வரிப்பது இல்லை என்று தீர்மானித்ததாக, அவ்வரசர்களுக்குத் தெரிவித்து. தினம் தினம் பகலில் நெய்த உடையை இரவில் மறுபடியும் பிரித்து, இப்படி அக்காரியம் முடிவுபெறாதபடி செய்துவந்தாள். இச்செய்திகளையெல்லாம் கேட்டு விசனித்திருந்த ஒடிஸ்ஸியஸ் மாறுவேடம் பூண்டுவர, பெனிலொபி அவனைத் தன் கணவனென்று ஊகித்தறியச் சாத்தியமில்லாதிருந்தாள். ஆனால் அவனுடைய நாய்மாத்திரம், பேதை மிருகமெனினும் தன் எஜமானன் வந்துவிட்டானென்று அறிந்துகொண்டு, கண்களினால் தனக்கு உண்டான சந்தோஷத்தைத் தெரிவிக்க முயன்றது. இதைப்பார்த்த அரசனுக்கு அடக்கமுடியாத கருணையும் இரக்கமும் உண்டாக, கண்ணீர் பெருக்கினான். இப்படி இருபதாண்டுகாலம் தன்னெஜமானனைப் பார்க்காது, இப்பொழுது கண்டதும், நாய் தனக்குண்டான சந்தோஷம் பொறுக்கமுடியாது, மனம் உடைந்து அரசன் பாதத்தில் விழுந்து இறந்தது.

பின் ஒடிஸ்ஸியஸ் தன் மனைவியை விரும்பிய கொடியவர்களைத் தக்கபடி தண்டித்து, தன் மகனையும் திரும்பப் பெற்று தன்னிடத்தில் கலங்காத அன்புகொண்ட பெனிலொபியோடு சேர்ந்து வாழ்ந்தான்.

## அரக்கினி (Arachne); அல்லது பெண்களுக்கான ஒரு கதை.

கிரீக்கமடந்தைகள், சித்திரத் தையல்வேலை செய்துகொண்டு வீடுகளில் காலம் கழிக்கும்பொழுது, ஒருவருக்கொருவர், பொழுது போக்காக கதைகள் சொல்லிக்கொள்ளுவது வழக்கம். அக்கதைகளுள் பின்வருவது ஒன்று.

ஒருகாலத்தில் லிடியா (Lydia) என்னும் தேசத்தில், துணிகளுக்கு இந்திரநீலவர்ணம் தோய்க்கும் ஒரு பெரிய

வர்த்தகனுக்கு அரக்கினி என்னும் நாமம்பூண்ட பேரழகிய பெண்ணொருவள் இருந்தாள். நெசவு தொழிலாளர்களுக்கு இஷ்ட தேவதையான அதீனி (Athene)யே அப்பெண்ணுக்கு நேர்த்தியாய் ஆடை நெய்யும் வித்தையைக் கற்றுக் கொடுத்திருந்ததினால், அவள் அதிநேர்த்தியாய் சீலை நெய்துவந்தாள். சாயந்தோய்த்த ஆட்டுரோமத்தை யெடுத்து அதிநுண்ணியமான நூலாய் நூற்று அதினின்றும் அதி விசித்திரமான வஸ்திரங்களை நெய்வாள். இவளுடைய நெசவு வேலையைக் கண்டு ஆச்சரியப்பட்டு, பல தேசத்தோர்களும் இவளைப் புகழ்ந்து சென்றார்கள். இவ்வளவு பெருமைக்கும் தான் உரியவளே யென்று நம்பி, அவள் இறுமாப்புக் கொண்டவளாய், தன் வேலையைப்பற்றி பெருமை பாராட்டியும், தன்னைக்காட்டிலும் நேர்த்தியாய் நெய்வோர் வேறொருவரும் இல்லையென்று சதாகாலமும் வீம்பு பேசியும்வந்தாள்.

அதீனி தேவதை இவளுடைய இறுமாப்பை யடக்குவதாகத் தீர்மானித்து, ஒரு கிழவிவேடம் பூண்டு இவளண்டை சென்று, "அம்மா, நீ நெய்த நேர்த்தியான ஆடைகளைக் காண, நான் மிகவும் விரும்புகிறேன்; சற்று காட்டுவாயாக." என்று கேட்டாள். அதற்குத் தான் நெய்த ஒரு சித்திரச்சேலையை யெடுத்துக்காட்டி; "இதோ பார்! இதைப்போல், கிரீக்க தேசமெல்லாம் சுற்றிப்பார்த்தாலும், வேறொரு சேலை யகப்படுமோ? அதீனிதேவதையே, விண்ணினின்று இவ்வுலகிற்கு வந்திடினும் அவள் எனக்குப் போட்டியாக, இவ்வளவு நேர்த்தியான சேலை நெய்யமாட்டாள்." என்று கர்வத்துடன் மறுமொழி பகர்ந்தாள்.

இப்படித் தன்னைப் போட்டிக்கழைத்ததும், அதீனி, கிழவியுருவம் மாறி தன் தெய்வவடிவத்தில் தனக்குண்டான பேரழகுடன் தோன்றி, அரக்கினியை மற்றொரு தறியைக் கொண்டுவரச்செய்து தாங்கள் இருவரும் நெசவு வேலையில் அடைந்த சாமர்த்தியத்தைக் காட்டுவதற்கு உட்கார்ந்தார்கள். அதீனி தேவதை, தான் சமுத்திரராஜன்மேல் போர் புரிந்து வெற்றிபெற்றதை, சித்திரவடிவமாய் கம்பளத்தில் நெய்யவும், அரக்கினி ஐரோப்பா (Europa) தேவதை சிறையடைந்த வரலாற்றை நெய்யவும் ஆரம்பித்தார்கள். இருவரும் சாதுரியமாய் நெய்ய, சுற்றிருந்தோர் இவர்கள் வேலை

யின் அற்புதத்தைக் கண்டு திகைத்து நின்றனர். இருவரும் போழதுக்குள்ளே இரண்டு சித்திர வஸ்திரங்களை நெய்து முடித்ததும், அரக்கினி, தேவதையின் வேலையைப்பார்த்து, இதற்குத் தன் வேலை ஒப்பாகாது என்று கண்டாள். அத்தருணத்தில் அவள் நெய்த வஸ்திரமும் தேவாக்கினையால் இரண்டாய்க் கிழிந்தது. அவமானமும் கோபமும் பொறுக்கமாட்டாதவளாய் அரக்கினி, இனி உயிர்வாழ்வது நன்றன்று என்று உள்ளத்துக்கொண்டு, அருகில் தொங்கின ஒரு கயிற்றினால் தன்னை தூக்கிக்கொண்டு மாள்வது என்று தீர்மானித்து, அக்கயிறருகில் சென்றாள். உடனே அதீனி தேவதை, அவளருகில் வந்து, "நீ இறப்பது சரியல்ல. உன் அகம்பாவமும், அதனாலுனக்குண்டான அவமானமும், மற்றவர்களுக்கு ஒரு அனுபவபோதமா யிருக்கும்பொருட்டு, நீ ஒரு சிலந்தியாய் மாறி எப்பொழுதும் நூல் நூற்றுக்கொண் டிருக்கக்கடவாய்!" என்று சபித்தனள். இதுதான், சிலந்திப்பூச்சி அதி நேர்த்தியாய் தன்னுடைய வலையைப் பின்னுவதைப் பற்றியுள்ள ஐதிகம்.

## உரோமா நகரம் உண்டான வரலாறு.

## உரோமா நகரம். (Rcme)

**அ**தீனிய நகரத்திற்குப்பின் உரோமா நகரமே உலகத்திலுள்ள நகரங்களிலெல்லாம் அதிமுக்கியமானது. இந் நகரத்தைக் கட்டின பண்டைக்காலத்து உரோமர்கள், தாங்கள் ஏற்படுத்தின நல்ல சட்டங்களாலும், தங்களுக்குள் இருந்த ஒற்றுமையின் வன்மையாலும், அதனாலடைந்த பலத்தினால் பல வேறுநாடுகளை வென்றதாலும், மற்ற தேசத்தார்களுக்கெல்லாம் மேம்பட்டனர். அவர்களே, முன்காலத்தில், பல நூற்றாண்டுகளாக, உலகத்துக்கெல்லாம் அதிபதிகளாயிருந்தனர். பிறநாட்டோர்களை ஒருவரோடொருவர் சண்டையிடச்செய்து, அதனால் அவர்கள் பலங்குன்றின சமயத்தில், உரோமர்கள் அவர்கள் எல்லோரையும் தங்கள் ஆட்சிக்குள் கொண்டுவருவது வழக்கம். தாங்கள் வெற்றி பெற்ற நாடுகளிலெல்லாம் தங்கள் போர்வீரர்களையும் வர்த்தகர்களையும் அதிகாரிகளையும் நியமித்து, அவர்களை, அந்த தேசத்தோர்கள் எல்லாருக்கும், தங்கள் நாகரிகத்தையும்



அரக்கினி செய்த வஸ்திரமும் தேவாக்கினையினால் இரண்டாய்க் கிழிந்தது.

கலைகளையும் புகட்டும்படி செய்தார்கள். உரோம ராஜ்ஜியத்துக் குள்ளானபிறகுதான், அத்தேசங்களுக்கு வளமும் உன்னத நிலையும் வந்தனவாகையால், உரோமர்கள் தங்களையாள்வது மிகவும் நன்றென்று, அத்தேசத்தோர்கள் நம்பினார்கள்.

உரோமா நகரத்தின் ஆதியரசனான ராமுலஸ் (Romulus) என்போன், தன் குடிகளுக்கு வேண்டிய மனைவியர் கிடைக்காததினால், அருகிலுள்ள நாடுகளுக்குத் தூதர்களையனுப்பி அவர்கள் பெண்களை உரோமர்களுக்குக் கலியாணம் செய்து கொடுக்கும்படி கேட்டனன். அவர்கள் இதற்கு இணங்காது, மூர்க்கமாகப் பதில் சொல்லியனுப்ப, அரசன் ஒரு தந்திரத்தினால் தன் காரியத்தை முடித்துக்கொள்வது என்று தீர்மானித்து, தான் சமுத்திரக்கடவுள் பொருட்டாக ஒரு பெரிய விழாக் கொண்டாடப் போகிறதாயும் அத்திருநாளில் மனிதர் ஒருபொழுதும் கண்டிருக்காத விநோத காட்சிகளையும் விளையாட்டுப் பந்தயங்களையும் ஏற்படுத்தப் போவதாயும், அதற்கு பக்கத்து நாட்டோர்கள் தங்கள் பெண்டிரை யழைத்துவரும்படியும் சொல்லியனுப்பினான். அவர்கள் எல்லோரும் விழாவைப் பார்க்க அவாவுடன் வந்து கூட, ஒரு குறித்த தருணத்தில், உரோம வீரர்கள் பலர், அப்பெண்டிர்களைப் பிடித்து கோட்டைக்குள் கொண்டுபோய்ச் சிறையிட்டு விட்டார்கள்.

பிறகு அப்பெண்கள், பயந்தெளிந்து, தங்களை மணம் புரிய எண்ணின உரோமர்கள் தங்களைப் பட்சமாயும் கௌரவத்தோடும் பாராட்டினதைக் கண்டு மகிழ்ந்து அவர்களுடன் வாழச் சம்மதித்தார்கள். அப்பெண்களின் சுற்றத்தார்களோ, உரோமர்கள் தங்களை இப்படி ஏமாற்றி மோசஞ் செய்ததைக் கண்டு மிகவும் கோபித்து, சேனைகளுடன் உரோமா நகரத்தின்மேல் படையெடுத்து வந்தார்கள். உரோமர்கள், போருக்கு வந்தவர்களைத் தோற்கடித்து ஓடச்செய்து, தாங்கள் பெற்ற வெற்றிக்கு ஒரு அறிகுறியாயிருக்கும் பொருட்டு, எதிரிகளின் ஆயுதங்களையெல்லாம் ஒரு கோலிற் கட்டித் தூக்கி, நகரவீதிகளின் வழியாய் எல்லோரும் காண அதை எடுத்துச்சென்று, தங்களுடைய பிரதம தெய்வமாகிய ஜூபிடரின் (Jupiter) ஆலயத்திலிருந்த ஒரு ஒலிவை

மரத்தடியில் அக்கோலை நாட்டினார்கள். மற்றும் படையெடுத்து வந்தவர்களையும் இம்மீநிதிரி தோற்கடித்து அவர்கள் நாட்டைத் தங்கள் ஆட்சிக்குள்ளாக்கினார்கள்.

ஸாபீனர்கள் (Sabines) உரோமர்களோடு போர் புரிகையில், ஒரு உரோமப்பெண் செய்த மோசத்தினால், அவர்கள் உரோமர்களின் கோட்டையைப் பிடித்து சிறிதுகாலம் அங்கே தங்கியிருக்கும்படி நேர்ந்தது. இது எப்படியெனில் டார்ப்பியா (Tarpeia) என்று பெயர்பெற்ற கோட்டையதிகாரியின் புதல்வி ஒருவள் இருந்தாள். ஸாபீனர்கள் கோட்டையை முற்றுகை செய்துகொண்டிருக்கையில், அவள் ஒருநாள் வெளியிலிருந்து தண்ணீர் கொண்டுவருவதற்காக, கோட்டையின் சிறுவாயில் வழியாய்ச் செல்லும்பொழுது, ஸாபீனர்கள் சிலர், அவளைக் கூப்பிட்டு, "நீ இவ்வாயிலைத் திறந்து சிறிதுநேரம் வைத்திருந்தாயானால், நாங்கள் கோட்டைக்குள் புகுந்துவிடுவோம். இதற்காக உனக்கு வேண்டிய கைம்மாறு நாங்கள் செய்கின்றோம்." என்று சொன்னார்கள். அவள் இதற்கு, 'நீர் இடது தோளில் அணிந்திருக்கும் பொருள்களை எனக்குக் கொடுப்பீராகில், நான் அப்படியே செய்கின்றேன்." என்று சொல்லி, அவர்களைக் கோட்டைக்குள் விட்டாள். ஆனால், ஸாபீனர்கள் இவளது கருத்தை யறியாதவர்கள்போல நடித்து இவளுக்கு வேண்டியது தாங்கள் இடது தோளில் அணிந்திருந்த இரும்புக் கேடகங்களே என்று சொல்லி, அக்கேடகங்களை யெல்லாம் அவள் மேல்போட, அவள் இப்பாரம் தாங்காது மாண்டாள். தேசத்துரோகம் செய்கிறவர்களுக்கு இப்படியே தண்டனை கிடைக்கும்போலும்! இவள் இறந்த இடம் ஒரு செங்குத்தான பாறையாகையால், அதற்கு டார்ப்பியா மலை (Tarpeian Rock) என்று பெயர் வழங்கிற்று. கைதிகளையும், ராஜதுரோகிகளையும் இங்கு கொண்டுவந்து, பாறையினின்றும் உருட்டித் தள்ளிக் கொன்றுவிடுவது வழக்கமாயிற்று.

இப்படி ஸாபீனர்கள் கோட்டையைக் கைக்கொண்டவுடன், அவர்களை அதினின்றும் அப்புறப்படுத்தித் துரத்திவிடுவது, உரோமர்களுக்கு மிகவும் பிரயாசையாயிருந்தது. ராமுலஸ் அரசன், தன் இஷ்டதேவதைகளை வேண்டிப் பிரார்த்திக்க, அவர்களின் அருளினால், உரோமர்கள் வெற்றி

பெற்று பகைவர்களை ஓட்டிவிட்டார்கள். இப்படி இருதிறத் தாரும் போர் செய்துகொண்டிருக்கையில் அவர்கள் நடுவில், ஸாபீனப் பெண்களாகிய, உரோமர்களின் மனைவிகள் திரளாய் வந்து, போர்க்களத்தில் நேரிடும் அபாயங்களைக்கூட சட்டை செய்யாது, "இனிப் போர் புரியாதீர்! எப்பக்கத்தார் மாண்டாலும் எங்களுக்குத் துக்கமுண்டாகும். ரோமர்களோ எங்கள் கணவர்கள்; ஸாபீனர்களோ எங்களைப் பெற்றெடுத்தவர்கள். இருதிறத்தாரும் ஒத்து சமாதானத்துக்கு வாருங்கள்!" என்று கூக்குரலிட்டுப் புலம்பினார்கள். இப்பெண்களின் மனதைரியத்தையும் பற்றையும் கண்டு வியந்து, இரு பக்கத்தாரும் சமாதானமாய்ப்போகச் சம்மதிக்க, ஸாபீனர்கள், தங்கள் பெண்கள், உரோமர்களோடு ஒத்து வாழ்வதைப் பார்த்து களிப்புற்று, தாங்களும் தங்களது அரசனுடன் உரோமாநகரத்தில் வந்து குடியேறி உரோமர்கள், ஸாபீனர்கள், என்கிற பேதமில்லாமல் ஒன்றுகூடி வாழ்ந்தனர்.

## வாத்துகள் உரோமா நகரத்தைக் காப்பாற்றின வரலாறு.

உரோமர்கள் உலகுக்கெல்லாம், முதல்வர்களாயும் அதிபதிகளாயும் ஆகுமுன்னர், பிரென்சு நாட்டிலிருந்து காலர்கள் (Gauls) என்று பெயர் பெற்ற முரட்டு வீரர்கள், உரோமர்களை டைபர் (Tiber) மஹா நதிக்கரையில் தோற்கடித்து, போரினின்றும் தப்பியோடியவர்களை உரோமா நகரத்தினுள் துரத்தி நகரக்கோட்டையையும் முற்றுகை செய்தார்கள்.

நகர எல்லைகள் அனைத்தையும் பாதுகாக்கப் போதுமான படைகள் இல்லாததினால், தப்பிப் பிழைத்த உரோமர்கள், காபிடல் (Capitol) என்ற பெரிய அரணில் போய் ஒளித்தார்கள். நகரபாலகர்களாகிய பெரியோர்களோ, தாங்கள் எதிரிகள் கைகளா லிறந்தால், நகர தேவதைகள் சாந்தப்பட்டு கோபந்தணிந்து நாட்டைக் காப்பாற்றுவார்கள் என்று நம்பி, தங்களுக்குரிய அலங்கார உடைகளைத் தரித்து, மஹாசபை கூடுமிடத்தில் தங்களுக்கென் றேற்பட்ட தந்தத்தினாலாகிய ஆசனங்களில் உட்கார்ந்து, முரட்டுக் காலர்கள்

வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். எதிரி வீரர்கள் இவர்களது கம்பீரத்தையும் அமைதியையும் கண்டு பயந்து இவர்களைக் கொல்லுவது அநியாயம் என்றிருக்க, அவருள் ஒருவன் ஒரு நகரபாலகன் தாடியைப் பிடித்திழுத்தான், அவன் கோபங்கொண்டு, தன் கோலால், தன்னை யிப்படி பங்கப்படுத்தினவனைப் புடைத்தான். இதுகாரணமாய் நகரபாலகர்கள் எல்லோரையும் காலவீரர்கள் கொன்றுவிட்டார்கள்.

இது இப்படியிருக்க உரோமர்கள் புகுந்துகொண்ட அரணை எதிரிவீரர் முற்றுகைசெய்து, பிடித்துவிடவேண்டுமென்று பிரயத்தனப்பட்டனர். ஒரு செங்குத்தான குன்றின்மேல் அவ்வரண் கட்டப்பட்டிருந்ததினால், காலர்களுக்கு அதனருகில் செல்லுவதுகூட அசாத்தியமாயிருந்தது. ஒருநாள், குன்றினடியிலிருந்து பக்கத்தில் வளர்ந்திருந்த பூண்டுகளையும் கிளைகளையும் பிடித்துக்கொண்டு, மேலேறி அரணைச் சேர்ந்த உரோமதூத னொருவனுடைய காலடிகளைக் கண்டு, அவ்வழியே தாங்களும் குன்றின்மேலேறி அரணைப் பிடித்துவிடலாம் என்று காலர்களும் தீர்மானித்தார்கள். இருள் மூடின ஓரிரவில், சந்தடியின்றி எல்லோரும் ஓய்ந்து உறங்குகையில், சில எதிரிவீரர்கள் இவ்வழியே தொத்திச் சென்று அரணருகில் போகும்பொழுது, அரணிலுள்ள ஆலயத்தில் வளர்ந்துவந்த தேவதைகளுக்கென்று ஏற்பட்ட சில வாத்துகள் கூக்குரலிட்டன. இச்சந்தடியினால் உரோம வீரன் ஒருவன் விழித்துக்கொண்டு, முன்வந்த காலவீரனைக் கீழே தள்ள, அவன் விழுந்து பின்வந்த வீரர்களையும் சேர்த்துத் தள்ளிக்கொண்டு, குன்றடியில் எல்லோரும் விழுந்தார்கள். இப்படி வாத்துகள் கத்தினதால்தான் உரோமர்கள் விழித்து எதிரிகளைப் புறங்கோடச்செய்து, நகரத்தைக் காப்பாற்றினார்கள்.

## உரோமர்கள் வஸந்தகாலத்தில் கூடுமிடமாகிய பாம்பி (**Pompeii**) நகரம்.

வெஸூவியஸ் (Vesuvius) என்று பெயர்பெற்ற எரிமலையி னடிவாரத்தில் கட்டப்பட்டிருந்த இப்பட்டணம் வசித்தற்கு மிகவும் ஆரோக்கியமாயிருந்தது. உரோமாபுரி பேறும் கீர்த்தியும் பெற்று உலகுக்கெல்லாம் தலைநகராயிருந்த காலத்

தில், உரோம கனவான்களெல்லோரும் இங்கு வந்து அழகிய வீடுகள் கட்டிக்கொண்டு வஸந்தகாலத்தை களிப்புடன் கழிப்பது வழக்கம்.

அப்பட்டணத்தின் வீதிகளெல்லாம் கடற்கரையை நோக்கியிருந்தன. ஒவ்வொரு வீதியின் கோடியிலும், வெண்கல்லாலாகியதும் குமிழிக்கொண்டு நீர் வருவதுமாகிய ஊற்று ஒன்று கட்டப்பட்டிருந்ததால், அவ்வூற்றினடியில் உஷ்ணசாந்திக்காக உட்கார்ந்திருந்தவர்கள், எதிரிலிருந்த மத்தியதரைக் கடலையும், அதின்மேல் வெய்யோன் கலைகள் பிரகாசிப்பதையும் கண்டு களித்தார்கள்.

சூரியன் பிரகாசிக்கும் நாட்களிலெல்லாம், ஜனங்கள் கூட்டங் கூட்டமாய் அழகிய ஆடைகளை யுடுத்து, வெண்கல் மேடைகளில், வெங்கதிர் மேல்படாதபடி விதானங்களின்கீழ் உட்கார்ந்து திராட்சைரசம் பழம் முதலிய பண்டங்களைத் தின்று காலத்தை உல்லாசமாகக் கழித்துவந்தார்கள். நகரிலுள்ள ஒவ்வொரு வீடும் மிகவும் விசாலமாயும் அலங்காரமாயும் இருந்தது. உரோமபுரியிலுள்ள வீடுகளைப்போலவே அவைகளும் இருந்தன. ஒவ்வொரு வீட்டிலும் தலைவாயிலுக்கடுத்து ஒரு முன்னறையும் அதற்கப்பால் சித்திரவேலை செய்யப்பட்ட பெரிய ஒரு கூடமும் இருந்தன. கூரையின் மேல் விழும் மழைநீர் போவதற்காக, மச்சில் ஒரு துவாரமுண்டு. அத்துவாரத்தினின்றும் நீர் விழுந்து வெண்கல்லாற் செய்த ஒரு ஜலதாரையின் வழியாய்ச் செல்லும். இக்கூடத்தில்தான் விருந்தினரும் மற்றவர்களும் உட்கார்ந்து பேசுவார்கள். இதின் நாற்புறங்களிலும் தூண்கள் உண்டு. அத்தூண்களுக்குப் பின்புறம் அனேக சிறு அறைகள் இருந்தன. அவ்வறைகளில்தான், ஆபரணங்கள் முதலிய விலையுயர்ந்த பொருள்களை, பித்தளைப் பட்டைகளுள்ள பெரிய பெட்டிகளில் வைத்திருந்தார்கள். வீட்டின் பின்புறத்தில் பலவர்ணக் கற்களைத் தரையில் பதித்ததும், புராணக்கதைகள் எழுதப்பட்ட படங்கள் சுவர்களில் தொங்குவதுமான ஒரு பெரிய மண்டபம் இருந்தது. இம்மண்டபத்தைச் சுற்றிலும் பெண்டிர்கள் இருக்கவும் படுக்கவும் பல அந்தப்புற அறைகள் உண்டு. இவ்வறைகளின் வாயில்களிலெல்லாம் நேர்த்தியாய் வேலை செய்யப்பட்ட திரைச்சீலைகள் தொங்கின.

ஒவ்வொரு வீட்டிற்கும் ஒரு சிறு பூந்தோட்டமும் தோட்டத்தைச் சுற்றி ஒரு சிறு மண்டபமும் உண்டு. அம்மண்டபத்தின் தூண்கள் சக்கரவரிசையாயிருந்தன. பூக்கொடிகள் ஒவ்வொரு தூணையும் சுற்றிக்கொண்டு அதியழகாய் வளர்ந்தன. நந்தவனத்தில் பல அபூர்வமான செடி கொடிகளும் ருசியுள்ள பழமரங்களும் நீர்க்குமிழியிடும் ஊற்றுகளும் மீன்கள் ஓடும் குட்டைகளும் இருந்தன.

விருந்தினர் வந்தபொழுது, அவரைப் பெரிய மண்டபத்தில் தலையணைகளின்மேல் சாய்ந்து உட்காரச்செய்து கைகளை யலம்பி, மிருதுவான துணிகளால் துடைத்து, அப்பொழுது தான் கொய்த பூக்களை அவர் தலைகளில் சூட்டி, உணவு பதார்த்தங்கள் வைப்பதற்கென்று எலுமிச்ச மரத்தாற் செய்த பொன்பதித்த பீடங்களை அவர்க்கெதிரில் வைப்பார்கள். விருந்தினர் அதிருசியான பதார்த்தங்களையும் உஷ்ணகாலத்தில் பனிக்கட்டியோடு குளிர்ந்த பழவர்க்கங்களையும் புசிப்பார்கள்.

விருந்து முடிந்தானவுடன், நன்மணம் வீசும் பனிநீரை, விருந்தினர்மேல் தூவானம்போல் வருஷிக்கச் செய்வார்கள். பிறகு மண்டபத்தைச் சுற்றிலுமிருக்கும் திரைகளைத் திறந்துகொண்டு அழகிய பெண்கள் வந்து நடனஞ் செய்வார்கள்.

இப்படி இப்பட்டணத்தார் யாவரும், பாட்டும் கூத்துமாகப் பொழுதைக் கழித்துக்கொண்டிருந்த காலத்தில், ஒரு நாள் பக்கத்திலிருக்கும் அக்கினிமலை சிட்டத்தை வெளியில் கக்கி புகையும் தணலுமாய் நகரின்மேல் கொண்டுவந்து தள்ள, பகற்பொழுதானாலும் எங்கும் இருள் மூடி ஜனங்கள் உயிர் தப்பிப் பிழைக்க இங்குமங்கும் ஓடி திகைத்து, ஆகாயமெங்கும் சூழ்ந்த புழுதியினால் மூச்சுவிட முடியாமல், மேல்விழுந்த கல், சாம்பல் சிட்டம் முதலியவைகளால் மாண்டனர். அக்கினிமலை திரைகடல்போல் சப்தித்து இம்மாநகரை ஒரே நாழிகையில் நாசமாக்கிவிட்டது. காலாந்தரம்போன்ற இத் தருணத்தில் பூகம்பம் உண்டானதுபோல் தரையதிர, மண்டபங்களும் ஆலயங்களும் நிலையழிந்து விழுந்தன. குழந்தை தாயைத் தேடியும், உடன்பிறந்தோர் ஒன்றுசேர்ந்து தப்பி ஓட முயன்றும், கணவன் பெண்சாதியை மீட்கப் பிரயத்த

ணப்பட்டும், இருளில் திசைதெரியாது தவித்தும், அடிக்கடி எரிமலையினின்றும் மின்னல்போல் கிளம்பும் அக்கினியின் காந்தியைக் கண்டு வெருண்டும், அங்கிருந்தோர் அனைவரும் மாண்டனர்.



அழிந்த பாம்பிநகரமும், பக்கத்திலுள்ள எரிமலையும்.

இவ்வக்கினிப் பிரளயம் வந்தபொழுது ஜனங்களெல்லோரும், தாங்கள் இருந்த இடங்களிலேயே அசையமுடியாது மாண்டனர். விருந்தினர் போஜனம் செய்துகொண்டிருந்த நிலையிலும், மணவாளர் கலியாணக் கோலத்திலும், நகர காவ

லர் தாங்கள் இருந்த இடங்களிலேயும், கைதிகள் சிறைச்சாலையிலும், அடிமைகள் ஊற்றில் நீர்மொண்டபடியும், வணிகர் கடைகளிலும், மாணுக்கர் பள்ளியில் படித்துக்கொண்டிருந்தபடியும் இறந்தனர். தப்பியோட எத்தனித்தவர் ஓடமுடியாது வழியில் மாண்டனர்.

எரிமலை அடங்கினபிறகு, சில நாட்கள் கழித்து சுற்றிலுமிருந்த ஜனங்கள் இந்நகரத்தைப் பார்த்தபொழுது, ஒரு பெரிய சாம்பல்மூண்ட சமவெளி தோன்றிற்றேயொழிய, பழைய மாடங்கள் கோபுரங்கள் வீதிகள் முதலியவையிருந்த அடையாளங்கள்கூட கண்ணுக்குத் தோன்றவில்லை. இப்படி சாம்பலின்கீழ் நகரம் முழுவதும் அதன் பிரஜைகள் யாவரும் புதைந்து கிடந்தனர். இந்த நகரம் கி. பி. 79-ம் ஆண்டில் அழிந்தது.

பல நூற்றுண்டுகள் சென்றன. இப்படி ஒரு நகரம் இருந்து அழிந்ததென்பதே மனிதருக்குத் தெரியாமல் இருந்தது. ஏறக்குறைய கி. பி. 1700 வருஷத்திற்குச் சமீபத்தில் சில கலைஞர் நகரமிருந்த விடத்தைத் தோண்டிப்பார்க்க, அது அழியும்பொழுது எந்த ஸ்திதியில் இருந்ததோ அப்படியே குலையாதிருக்கக் கண்டனர். மாடங்கள் குலைந்து கீழேவிழுந்தபடியும், சுவர்களில் தொங்கின படங்கள் கெடாதும், இறந்தோர் எந்நிலையில் மாண்டனரோ அந்நிலையிலேயும், கைதிகள் காலில் விலங்கிட்டபடியும், மடந்தைகள் கழுத்தில் மாலைகள் அணிந்தபடியும், சாராயக்கடைகளில் கோப்பைகள் மேடைகளில் வைத்தபடியும் இருக்கக் கண்டனர்.

## உரோமா நகரத்திலுள்ள பிரேதக்குழிகள்.

கி. பி. இரண்டாவது, மூன்றுவது நூற்றுண்டுகளில் உரோம சக்ரவர்த்திகள் கிறிஸ்தவர்களை மிகவும் வருத்தினுர்கள். அக்காலத்தில் அவர்கள் ராஜாங்கத்தார் கையினின்றும் தப்பி ஒளிவதற்காகவும், இடையூறின்றி கடவுளை ஆராதிப்பதற்கும் பிணங்களை அடக்கஞ் செய்வதற்குமாக, பல சுரங்கங்களைத் தோண்டி, பூமியின்கீழ் இருப்பிடங்களைக் கட்டிக்கொண்டு ஒரு சிறு ஊரில் வாழ்வதுபோல் வாழ்ந்து வந்தனர்.

அச்சுரங்கங்களின் வழியாய் இப்பொழுது நாம் போய்ப் பார்ப்போமாகில், நாம் மிகவும் அற்புதமான காட்சிகளைப் பார்க்கலாம். செடிகளாலும் புதர்களாலும் மறைந்த ஓரிடத்தில் தளத்துவாரம் இருக்கும். அத்துவாரத்தினின்று கீழே போகும் படிகளின்வழியாய் இறங்கி, விளக்கு வெளிச்சத்தைக்கொண்டு ஒன்றோடொன்று சேரும் பல வழிகளாய்ச் செல்லலாம். இவற்றின் கீழேயும் படிகள் வழியாய்ச் சென்று மற்றோரிடத்திற்கும் போகலாம். இன்னும் பாதாளத்திலும் செல்லும்படியாயிருக்கும். ஒவ்வொரு தளத்திலும் அனேக அறைகளும் கூடங்களும் உண்டு. இவ்வறைகளில், ராஜாங்கத்தாரால் சமயாபிமானத்துக்காகக் கொல்லப்பட்டவர்களையும், மற்றும் பக்திமான்களாயிருந்த கிறிஸ்தவர்களையும் அடக்கம் செய்திருக்கிறார்கள். ஒவ்வொரு பிரேதத்தையும் வெள்ளைப் போர்வையினால் போற்றி, கெடாதபடி வாசனைத் திரவியங்களைப் பக்கத்தில் வைத்து, அதற்கென்று வெட்டப்பட்டுள்ள ஒரு சிறு அறையில் அடக்கம் செய்து, அவ்வறையின் வாயிலை, வெண்சற்பலகையாலாவது, அல்லது ஓடுகளாலாவது மூடி, அவை விழாதவண்ணம் சுண்ணத்தினால் ஒட்டிவிடுவார்கள். ஓரிடத்தில் இம்மாதிரியான கல்லறைகள் பலவாயும், மற்றோரிடத்தில் சிலவாயும் உள்ளன. இச்சமாதிகளின்மேல் வரையப்பட்டுள்ள சுருக்கமான சரமகவிகள் அடக்கஞ் செய்யப்பட்டுள்ளார் கிறிஸ்தவ மதத்தைச் சேர்ந்தவர்கள் என்று தெரிவிக்கின்றன.

இவ்வறைகளுக்குப் போகும் சுரங்க வழிகளெல்லாம் தொழுவதற்கான இடங்களாக உபயோகப்பட்டன. இவ்வழிகளின் சுவர்களிலெல்லாம், வெளிச்சம் கொடுப்பதற்காக விளக்குகள் வைக்கப்பட்டிருந்தன. சிலவிடங்களில் சூரிய வெளிச்சம் வருவதற்காக, மேலே துவாரங்கள் துளைக்கப்பட்டிருந்தன. கிறிஸ்தவ புராண படங்களை சுவர்களெங்கும் வரைந்திருந்தார்கள். இச்சமாதிகளை நாம் பார்க்கும்பொழுதும் நினைக்கும்பொழுதும் அவைகளுள் அடக்கம் செய்யப்பட்டுள்ள பிரேதங்களும் பண்டைநாட்களில் அவர்கள் கடவுளை ஆராதனைசெய்த விதமும் ஞாபகத்திற்கு வருகின்றன.

## உரோமர்கள் கிறிஸ்தவர்களை உபத்திரவித்த வரலாறு.

கிறிஸ்தவசமயப் பிரசாரகர்களாகிய பால் பீடர் என்னும் இருவரும் தங்கள் மதத்தை உரோமாபுரியில் நிலைபெற நாட்டினர். இவ்விரு திருத்தொண்டர்களுள் பீடரென்பவரே உரோமாபுரிக்குத் தலைமை அத்தியக்ஷ குருவானார்.

யூதர்கள்மாத்திரம் கிறிஸ்தவ மதத்தைக் கடைப்பிடித்து வந்தார்களென்று, உரோமர்கள் நினைத்திருந்தவரையிலும், கிறிஸ்தவர்களை அவர்கள் துன்புறுத்தவில்லை. உரோமரின் அரசாட்சி கிறிஸ்தவமதம் பரவுவதற்கும் ஒரு ஒத்தாசையாயிருந்தது. உரோமர்கள்கூட தங்கள் பழைய தேவதைகளையும் கொள்கைகளையும் மறந்து, இப்புதிய மதத்தை அனுசரித்த பொழுதுதான், உரோம சக்ரவர்த்திகள் கிறிஸ்தவர்களை உபத்திரவம்செய்து அவர்களது சமயத்தையே அழித்துவிட முயன்றார்கள். அக்காலத்தில் உரோம சக்ரவர்த்தியையே ஒரு தேவனாக பாவித்து, அவனை, உரோமர்களுக்குக் கீழ்ப்பட்ட பல தேசத்தோரும் தொழுது ஆராதிப்பது வழக்கமாயிருந்தது. இதன் கருத்து என்னவென்றால், சக்ரவர்த்தியினிடத்தில் எல்லா நாட்டோர்களுக்கும் ஏற்பட்ட பற்றானது, அவர்களெல்லாரையும் ஒன்றாய்ச் சேர்த்து பிரியாதபடியும் ராஜாங்கம் அழியாதபடியும் செய்யும் என்று நம்பினார்கள்.

சம்பத்தும் பெருவாழ்வும் உரோமர்களிடத்திலேயே குடிகொண்டிருந்தனவெனினும், அவர் தூயவாழ்வும் மனத்திடமும் நல்லொழுக்கமுமின்றி யிருந்தனர். அஞ்ஞானத்தில் மூழ்கி நல்லறிவின்றியிருந்த உரோமர்கள் தூய கிறிஸ்தவமதத்தை யனுசரியாது, மனத்தைப் பாழாக்கும் பாவநெறியில் நின்று வந்தனர். இவர்கள் பேதமைக்கும் பாவத்துக்கும் பொருத்தமாக, சிலம்பக்காரர்களும் மல்யுத்தக்காரர்களும் ஒருவரோடொருவர் சண்டையிட்டு மாள்வதைக் கண்டு களித்துவந்தனர். இதுவே, இவர்களது மிருகத்தன்மைக்கும், பண்டைநாளில் அனுசரித்துவந்த தூய ஒழுக்கத்தினின்றும் மாறுபட்டதற்கும், போதுமான சாட்சியாகும்.

கிரீக்கனொருவன், கி. பி. 105—ம் ஆண்டில், உரோம நகரத்தில் நடந்த மல்யுத்தத்தைப்பற்றி பின்வருமாறு தன்னுடைய நண்பனுக்கு எழுதியிருக்கிறான்.

"எனக்கு இந்த உரோமர்களைப் பார்த்ததில் உண்டான சந்தோஷம் அதிகமோ, அருவருப்பு அதிகமோ என்று நிச்சயிக்க முடியவில்லை. நேற்று நான் கண்ட காட்சிகளினின்றும் ஊகித்துப் பார்த்தால், இவர்களின் மிருகத்தனம், குரூரம், அதிக்கிரமம், வீண் ஆடம்பரம் முதலியவைகளுக்காக இவர்களை வெறுப்பதே சரியென்று தோன்றுகிறது. தாங்கள் வேடிக்கை பார்த்து களிப்பதற்கென்று அவர்கள் சோரா முயற்சியும் அளவில்லாத சிரமமும் எடுத்து கஷ்டப்படுவது நமக்கு அதிக அதிசயத்தைத் தருகின்றது. நேற்று நான் பார்த்த விநோதக் காட்சிகளுக்காக, உலகத்துள்ள அற்புதப் பொருள்களையெல்லாம் ஆராய்ந்து கொள்ளைகொண்டு வந்தனர்போல் தோன்றுகிறது. இக்காட்சிகளைக் கண்ட ஒவ்வொருவனும், தான் எவ்வளவுதான், அவர்களது மூர்க்கத்தனத்துக்காகவும் துற்பழக்கங்களுக்காகவும் உரோமர்களை வெறுத்தாலும் அவர்கள் உலகெல்லாம் வென்று தங்களாட்சிக்குக் கீழ்கொண்டு வந்தவர் என்பதை மறப்பது அரிது.

"நான் கண்ட விநோத காட்சிகளை ஒன்றின்பின் ஒன்றாய் உனக்கு விவரித்துச் சொல்லுகிறேன்.

"டிராஜன் (Trajan) என்று நாமங்கொண்ட சக்ரவர்த்தி ஏழு நாடுகளை வென்று அவைகளைத் தன் குடைக்கீழ் கொண்டு வந்ததற்காக, ஒருபொழுதும் அவர்கள் பார்த்திராத காட்சிகளையெல்லாம், உரோமர்களுக்குக் காட்டுவதாகத் தீர்மானித்து, தான்கொண்ட காரியத்தை ஓரணுவும் குலையாது நிறைவேற்றினான். இரண்டுநாள்களுக்கு முன், மல்லர்களும் சிலம்பக்காரர்களும் போர் புரிவதற்கு முன்னர் ஒன்றாய்ச் சேர்ந்து உண்ணும் பொது விருந்திற்கு என் வீட்டுக்காரன் என்னை யழைத்துக்கொண்டு சென்றான். சிலம்ப மண்டபத்திலேயே மேஜைகளண்டை இருநூறு சிலம்பக்காரர்கள் உட்கார்ந்து, அதிசுவையுள்ள பதார்த்தங்களைத் தின்றுகொண்டும் இனிப்பான திராட்சரசத்தைக் குடித்துக்கொண்டும் இருந்தனர். இம்மல்லர் பல வேறு நாடுகளினின்றும் வந்தவர். பெரும்பாலும், கால் (Gaul) திரேஷியா (Thrace)

தேசங்களினின்றே வந்தவர். கிரீக்க தேசத்திலிருந்து வந்தவர் சிலரே. அவர்களிலும் பெரும்பான்மையோர், ஆர்க்கேடியா (Arcadia) என்று சொல்லப்பட்ட அநாகரிகப் பிராந்தியத்திலிருந்து வந்தவர்கள். இந்த ஆர்க்கேடியர்கள், பிழைப்புக்காக போர்வீரர்களாய்ச் செல்லாது, இம்மாதிரி, கேவலம், சிலம்பக்காரர்களாய் வந்து, கூலிக்கு விளையாட்டுப் போர்புரிகிறார்கள்.

"இது இப்படியிருக்க, நான் காட்சிகளை விவரித்துச் சொல்லுகிறேன். அன்றையதினம், மழையில்லாதும், மப்பில்லாதும் சூரியன் நன்றாய்ப் பிரகாசித்தான். சிலம்பக்கூடத்தைச் சுற்றிலுமுள்ள உயர்ந்த ஆசன மேடைகளின்மேல், சூரியன் படாதபடி விதானங்கள் விரித்திருந்தாலும் மழைவந்தால், இம்மேற்கட்டிகள் மழைநீரைத் தாங்காது ஜனங்களை நனைத்துவிடும். காட்சிநாட்களில் மழைபெய்ததானால், ஜனங்கள் மிகவும் சங்கடப்படுவார்கள். சிலம்பக்காரர்களும் மல்லர்களும் அதிக துன்பப்படுவார்கள். மழைபெய்த தினங்களில் எவனாவது மல்லனொருவன் நன்றாய் ஆடாதிருந்தானானால், மழையினால் உபத்திரவப்படும் ஜனங்கள் அவன்மேல் கோபங்கொண்டு அவனைத் துன்பப்படுத்துவார்கள்.

"முதல்முதல் காட்டுமிருகங்களைக் காண்பித்தார்கள். இச்சக்ரவர்த்தி தன் முன்னோர் கொண்டுவந்து காட்டினதைவிட அதிகமாய் மிருகங்களைக் கொண்டுவந்தார். கோலோஸியம் (Colosseum) என்ற சிலம்ப மண்டபத்தைக் கட்டின டைடஸ் (Titus) சக்ரவர்த்தி, பழக்காத மிருகங்கள் ஐயாயிரம், பழக்கப்பட்டுள்ள மிருகங்கள் கிட்டத்தட்ட ஐயாயிரம், ஆக மொத்தம் பதினாயிரம் மிருகங்களைக் கொண்டுவந்து, ஜனங்களுக்குமுன், ஒன்றோடொன்று சண்டையிட்டு மாளச்செய்தார். இப்பொழுதோ, அதைப்போல் ஒன்றரை மடங்கு அதிகமான மிருகங்களைக் கொண்டுவந்திருப்பதாகக் கேள்வி. காட்சிகளெல்லாம் முடியும்பொழுது இவற்றுள் உயிரோடிருப்பன மிகச் சிலவே.

"முதலில் காட்டின மிருகங்களும் காட்சிகளும் நூதனமாயும் விநோதமாயும் இருந்தனவேயொழிய, அருவருப்பை உண்டாக்கத் தக்கனவாயில்லை. அம்மிருகங்களில் பலவற்றை நான் பார்த்ததுமில்லை, பழைய புத்தகங்களில் தவிர வேறெங்

தும் கேட்டதுமில்லை. அவை, சுயேச்சையாய்த் திரியும் பாலைவனங்களில்தவிர, வேறெங்கும் பிழைத்திருக்கக்கூடும் என்பது அசாத்தியம் என்றே எண்ணியிருந்தேன். வேடிக்கை பார்க்கவந்த ஜனங்களோ அவைகளை அடிக்கடி பார்த்து பழக்கப்பட்டவர்களைப்போலத் தோன்றினார்கள்.

"ஒட்டைச்சிவிங்கி யென்ற மிருகத்தைக் கொண்டுவந்து காட்டினார்கள். அது ஒட்டையின் உருவமும், சிவிங்கியின் புள்ளிகளும் உள்ளது. அதன் கழுத்து ஒட்டையின் கழுத்தைவிட நீளமாயும், முதுகில் திமில் இல்லாதும் உள்ளது.



கோலோஸியம் என்ற சிலம்பக்கூடம்.

மேல் ஏறி ஓட்டுவோர் சரியாய் உட்கார்ந்திருக்கும்படி அதன் முதுகு வளைந்துள்ளது.

"பிறகு நீர்யானை யென்ற ஒரு குரூபமான பெரிய மிருகத்தைக் கொண்டுவந்தார்கள், நீரிலேயே இருப்பது அதனியல்பாகையால், தரையில் வந்தால் அவலட்சணமாய் நடக்கும். அவர்கள் காட்டின விநோதப் பறவைகளுள் ஒன்று மனிதனவ்வளவு உயர்ந்தும் இறகு வெண்மையாயும் இருந்தது. அதன்மேல் சிந்தூரத்தைப் பூசி, அதை சிவப்புநிறமாக்கி,

அதன் வர்ணத்தை உரோமர்கள் கெடுத்திருந்தார்கள். நீர் நாரைகளையும், செங்கால் நாரைகளையும், பளபளவென்று பிரகாசிக்கும் பொன்னிறமான கோழிகளையும் காட்டினார்கள்.

"இக்காட்டு மிருகங்களைப் பயிற்றியிருப்பது மிகவும் அதிசயிக்கத்தக்கதே. கதைகளில் கேட்டுள்ள அற்புத வித்தைகள்பண்ணும் யானைகளை நான் பார்க்கவில்லையாகிலும், இம்மிருகங்கள் அதிவினோத வேடிக்கைகள் செய்வதைப் பார்த்தேன். ஒரு பெரிய வாலில்லாக்குரங்கு மனிதன்போலவே நடித்தும், கவசந்தரித்து ஆடியும், தன்னெஜமானனோடு கத்தி விளையாட்டு விளையாடியும், சிங்கங்கள் முயல்களைத் துரத்திப் பிடித்து அவைகளைக் கொல்லாதும், நாய்கள் பந்திபந்தியாப் போர்வீரர்களைப்போல் நடந்தும் சண்டையிட்டும், எனக்கு அளவில்லாத ஆச்சரியத்தை உண்டாக்கின. நான், மற்றும் பலவித அற்புதங்களை விவரித்துச் சொல்லக்கூடும். அவைகளைக் கேட்பதில் பயனில்லை; நேராய்ப் பார்த்தால்தான் நமக்கு உண்மையென்று தோன்றும். இதுவரையிலும் நான் பார்த்த காட்சிகளெல்லாம், ஆச்சரியத்தையும் ஆனந்தத்தையும் தரத்தக்கனவாயிருந்தன. உரோமர்கள் இம்மிருகங்களைத் தூரதேசங்களினின்றும் பிடித்துக்கொண்டுவந்து, பயிற்றியிருப்பது மிகவும் அற்புதமான செயல். இம்மிருகக் காட்சிகளுக்குப் பின்வந்த வினோதங்கள் ஜனங்களுக்கு இன்னும் அதிக ஆனந்தத்தைத் தந்தனவாகிலும் எனக்கு அருவருப்பாகவேயிருந்தன. மனிதர்களுக்கும் கொடிய மிருகங்களுக்கும் இப்பொழுது சண்டை நடந்தன. ஒருவன் தானாகவே தன்னுயிரைப் பொருட்படுத்தாது, காட்டில் துஷ்டமிருகங்களோடு போர்புரிந்து அவைகளைக் கொல்லுவானாகில், அவன் செயல் மெச்சத்தக்கதே. அது அவனது தைரியத்தை விருத்திசெய்து அவனுக்கு ஒரு குதூகலமுண்டாக்கி, அவனை பகைவர்களோடு போர்புரிவதில் அதிக திறமுள்ளவனாகச் செய்யும்.

"ஆனால், இவ்விடத்தில் மனிதன் கொடிய மிருகங்களோடு சண்டைசெய்வது இயற்கைவிதிகளுக்கு விரோதமென்றே எனக்குத் தோன்றுகிறது. ஏனெனில், மிருகங்கள் கூட்டில் அடைபட்டு இங்கு வருவதினால், அவைகளின் பலமும் சாமர்த்தியமும் குன்றியிருக்கும். மனிதனும் துணிகரமின்றி, வேட்

டையவாவுமின்றி கூலிக்காகவே இப்படிச் சண்டைசெய்வ தாகும், இது மெச்சத்தக்கதல்ல. ஆனாலும் இம்மல்லர்களும் கொடிய மிருகங்களும் போர்புரிகையில், மல்லர்களின் ஆண்மையையும் சாதுரியத்தையும் மிருகங்களின் பலத்தையும் வீரியத்தையும் கண்டு நாம் மருளாதிருப்பது அசாத்தியம். இச்சண்டைகளிலெல்லாம் மனிதர் பெரும்பாலும் வெற்றி பெற்று வந்தனர். கடைசியாக, இம்மிருகங்கள் கொன்று புசிக்கும்படி, ஆயுதமில்லாது நிராதரவாயிருந்த கைதிகளைக் கொட்டாரத்தில் கொண்டுவந்துவிட்டார்கள். இக்கைதிகளில் பெரும்பாலோர், திருடியும் கொலைசெய்தும் பொய்ப் பத்திரங்களெழுதியும், ராஜாங்கத்தாரால் சிட்சை செய்யப்பட்டு கொலைக்குப் பாத்திரமானவர்கள். அவர்களுள் சிலரோ, தங்களது எஜமானர்களின் உபத்திரவம் பொறுக்கமுடியாது தப்பியோடின அடிமைகள். உரோமர்கள் எல்லோரும் தங்களடிமைகளை அதிகுரூரத்துடன் நடத்திவந்தனர். இப்பேதைகள் இப்படி மிருகங்களால் கொடிய மரணமடைவது நமக்குப் பார்ப்பதற்கு பயங்கரமாயும், இயற்கைக்கு மாறுபட்டதாயும் இருக்கிறது.

"வேடிக்கை பார்த்திருந்தவர்கள், நியாயவுணர்ச்சி சிறிதும் இல்லாத குரூர குணமுள்ளவர்கள். மனிதரும் கொடிய மிருகங்களும் சண்டையிட்டு மாள்வதைக்காணச் சகியாதவனாய், நான் முகத்தைத் திருப்பி கைகளால் மூடிக்கொண்டேன். அன்று கொல்லப்பட்ட குற்றவாளிகள் அதிகமா யில்லாதபடியால், இக்காட்சி சிறிதுநேரத்துக்குள் முடிந்துவிட்டது. கூட்டத்திலுள்ளோர் இட்ட பேரிரைச்சலும் சந்தோஷ ஒலியும் ஒடுங்கி உடனே அம்மண்டபம் முழுவதும் சப்தமின்றி அமைதியாய்ப்போயிற்று. நான், முகத்தைமூடிய கைகளை நீக்கியதும் ஓர் அற்புத சம்பவத்தைக் கண்டேன். அப்பொழுது மண்டபத்தில் ஒரு பெரிய காடிமைபத்தவிர வேறொரு மிருகமுமில்லை. அது நான் இருந்த இடத்திற்கு அருகிலேதான் உட்கார்ந்திருந்தது. சக்ரவர்த்தி ஒரு ஜாடை காண்பித்ததும், ஒரு கதவைத் திறந்துகொண்டு விருத்தாப்பியனான ஒரு கிழவன் வெளியில் வந்தான். தன்னுடைய நடையிலும் நோக்கத்திலும் யாதொரு பயக்குறியும் இல்லாதவனாய், காடியினருகே சென்றான். "இவனும் ஒரு குற்றவாளிதானோ?"

என்று நான் பக்கத்திலிருந்தவருள் ஒருவனைக் கேட்க, அவன், "ஆம், குற்றவாளிகளுள்ளும், பெருங்குற்றம் செய்தவன்." என்று மொழிந்தான். "அப்படியானல் அவனது தீயகுணங்களை, அவன் முகம் உண்மையாக விளக்கவில்லைபோலும்! இது என்ன அதிசயம்! இவ்வளவு கருணையும் தர்மமும் விளங்கும் முகத்தை நானிதுவரையில் பார்த்ததில்லை." என்று சொன்னேன். அதற்கு எனக்குப் பக்கத்திலிருந்தவன், "இவன் கொலைசெய்தான் அல்லது திருடினனென்று நான் சொல்லவில்லை. இவன் கிறிஸ்தவனயிருப்பதே இவன்மேலுள்ள பெருங்குற்றம்." என்ருன். "கிறிஸ்தவன் என்ருல் என்ன?" என்று நான் வினவ, அதற்கவன், "நமது தெய்வங்களைத் தொழாதவன். கிறிஸ்து என்பவனது கொள்கைகளில் நம்பிக்கை வைத்திருப்பவன். எழுபது வருஷங்களுக்கு முன் அந்த கிறிஸ்துவை, பைலேட் (Pilate) என்ற உரோம நியாயாதிபதி, சிலுவையில் அறைந்து தண்டித்தார். ஆனல் அவனுடைய கொள்கைகளைக் கடைப்பிடிக்கும் இந்த கிறிஸ்தவர்களெல்லாரும், அக்கிறிஸ்து இன்னும் இறவாது பிழைத்திருக்கிருன் என்று சொல்லுகிருர்கள்." என்று மறுமொழி பகர்ந்தான்.

"ஆயினும் அக்கிறிஸ்தவன் குற்றவாளிகளுள் சேர்க்கப்பட்ட காரணம் எனக்குச் சிறிதும் விளங்கவில்லை. கிறிஸ்துவின் மதத்தை அனுசரித்து அவனது கொள்கைகளை நம்புவதில் யாதொரு கொடிய குற்றமும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. "அவன் செய்த குற்றம் இது ஒன்றுதானே?" என்று கேட்டேன். இதற்கு என் பக்கத்திலிருந்தவன் பின் வருமாறு மொழிந்தான்.

"இக்கிறிஸ்தவன் அநேக குற்றங்களைச் செய்திருப்பதாகச் சொல்லுகின்றனர். ஆனல் ஒன்றையும் நிரூபிக்க முடியவில்லை. அப்படியெனினும், நம்பத்தகாததும், பொறுக்கமுடியாததுமான அவனது பிடிவாதத்திற்கே அவனைக் கொல்லுவது பொருத்தமாயும் நியாயமாயும் இருக்கும். அவனுடைய பிடிவாதத்தைச் சிறிது கேளும். அவன் கரடியால் நசுக்கப்பட்டு அழிய விரும்பினனேயொழிய, கருணாநிதியான நமது சக்ரவர்த்தியை ஒரு தேவனக வாழ்த்தினனல்லன். ஒருவன் எக்கொள்கைகளையாவது நம்பிக்கொண்டிருக்கலாம். சக்ர

வர்த்தியை போற்றித்தொழுவது அவனது கடமையல்லவோ? உண்மையில், மேலான நல்லொழுக்கங்களையுடைய ஒரு மனிதன் அரசகட்டளைக்கு மாறாக நடப்பானாகில், அவனால் குடிகளுக்கு உண்டாகும் தீங்கு நூறு பாதகர்கள் இழைக்கும் தீமைக்கும் அதிகமேயாகும்."

"இப்பொழுது அதியற்புதமான ஒரு செய்கையைக் கண்டேன். கரடி எழுந்து கிறிஸ்தவனை நெருங்கியது. அது எப்பொழுது அவனை அறைந்து கிழித்துவிடுமோ என்று அங்கிருந்தவர்கள் எதிர்பார்த்திருக்க, அது அம்மனிதனுக்கு யாதொரு தீங்கும் செய்யாமல், ஒரு பெரிய பூனையைப்போலும் அவனுடன் விளையாடி, அவன் கால்களின்மேல் உராய்ந்து பதுங்கிக்கொண்டது. இதைக் கண்டதும் ஜனங்களுக்கு கோபம் உண்டாயிற்று. இக்காட்சிகளை நடப்பிக்கும் அதிகாரியும், "சிங்கத்தை விடுங்கள்! சிங்கத்தை விடுங்கள்!" என்று கூவினன். சக்கரவர்த்தி வீற்றிருந்த ஆசனத்தின் கீழிருந்த ஒரு பெரிய கூண்டின் கதவைத் திறந்து ஒரு பெரிய சிங்கத்தை வெளியில் பாயவிட்டார்கள். ஆனால் அது தாவிக் கொண்டே கிழவனை நெருங்கியதும், அதின் கொடிய குணங்கள் யாவும் நீங்கி, அவனைத் தொடாமல் நின்றது.

"உடனே ஜனங்கள் சக்ரவர்த்தியைப் பார்த்து, "இவனை மன்னிப்பீராக!" என்று கூச்சலிட்டார்கள். இதுபோன்ற சமயங்களில் ஜனங்களது வேண்டுகோள்களை மறுக்காத சக்ரவர்த்தியும், அக்கிழவனை விட்டுவிடும்படியாக உத்தரவுசெய்தான். வேறு யாவரும் தப்பித்துக்கொள்ள முடியாமலிருக்க, இக்கிழவன்மட்டும் எவ்விதம் காப்பாற்றப்பட்டான்? சிலர் மிருகங்கள் வயிறு நிறைந்திருந்தபடியால், இவனைக் கொல்லாதுவிட்டன என்று சொல்லலாம். நான் விசாரித்துப் பார்த்ததில் இஃது உண்மையல்ல என்று தெரிந்துகொண்டேன். ஒருவேளை அக்கிறிஸ்தவனிடம் ஒருவித மந்திரசாலம் இருக்கலாம். எதற்கும் அவனையே நேரில் வினவி, என்னுடைய சந்தேகங்களையெல்லாம் தெளிந்து தெரிந்துகொள்வேன்."

முற்றிற்று.

PRINTED AT THE S. P. C. K PRESS, VEPERY, MADRAS—1917.